# PADMAREKA

OR

**The Mystery of "Kalpaga Garden"**

**A DETECTIVE NOVEL**

IN TAMIL

BY

NAGAI - C. GOPALAKRISHNAN

*Author of "Kannaki", "Danapalen",*
*"Chandrodayam", etc.*

MADRAS:
C. COOMARASAWMY NAIDU & SONS
1921

 *[Price One Rupee*

# பத்மரேகை

அல்லது

## "கற்பகச்சோலை" அதிசயம்

நாகை-ஸி. கோபாலகிருஷ்ண பிள்ளை

இயற்றியது



சென்னை:

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

ரெஜிஸ்தர் செய்தது]   1921   [விலை ரூபா ஒன்று.

INSCRIBED

TO THE BELOVED MEMORY OF

MY MATERNAL UNCLE

LATE

MR. C. SINGARAM PILLAI, B.A., B.L.

"ஒரு பெண்மணியின் உண்மைக்காதலை ஒருவன் அடைந்துவிட்டானேயானால், அதைவிட அவன் இவ்வுலகத்தில் அனுபவிக்கக் கூடிய மேலான இன்பம் வேறில்லை" — *பக்கம்* 286.

# பத்மரேகை

## அல்லது

# "கற்பகச்சோலை" அதிசயம்

---

## 1. மங்கையளித்த மாணிக்கம்

"வைத்தியரே! நான் சொல்லுவதைத் தெரிந்து கொண்டீரா? இன்றிரவு நான் இங்கே வரவில்லை!"

"என்ன? நீர் சொல்லுவது எனக்குச் சிறிதும் விளங்கவில்லையே?"

"நல்லது; வைத்தியரே! உமக்கு உண்மையை நான் விளங்கச் சொல்லுகிறேன். என்னைப்பற்றி யாராவது உம்மை விசாரிப்பார்கள். அந்த விசாரணை கெட்ட விசாரணையாக இருந்தாலுமிருக்கலாம். நான் சொல்லுவதைத் தெரிந்துகொண்டீரா?" என்று வைத்தியரை நோக்கி அந்த மனிதன் கேட்டான்.

"உம்மைப்பற்றியா விசாரணை?—" என்று அந்த மனிதனை வைத்தியர் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"ஆம்; அநேகமாய் அப்படித்தான்!—" என்று அந்த மனிதன் பதில் சொல்லிக்கொண் டிருக்கும் போதே, வைத்தியர் அவனைச் சந்தேகத்தோடும் அச்சத்தோடும் உற்றுப் பார்த்தார். அவர் அவ்விதம் சந்தேகப்படுவதைக் குறிப்பால் அறிந்துகொண்ட அந்த மனிதன், சரேலெனத் தன்னுடைய பார்வையை மாற்றிக்கொண்டு, தான் உட்கார்ந்திருந்த அறையையும், அதில் வரிசையாக வைக்கப்பட்டிருக்கும் மருந்து சீசாக்கள், ரணவைத்தியக் கருவிகள் முதலியவைகளையும் ஒருமுறை சுற்றிப் பார்த்துவிட்டு, "ஐயா! இது உம்முடைய சொந்த வைத்தியசாலைதானே? தாங்கள் தான் இங்கே வருகிற நோயாளிகளுக்கு மருந்து கொடுக்கின்றீர்களோ?" என்று சந்தேகமாகக் கேட்டான்.

"இல்லை; இது என்னுடைய வைத்தியசாலை அல்ல. என்னுடைய பெயர் நரேந்திரன்; நான் சதானந்தரிடத்தில் வைத்திய சாஸ்திரம் கற்றுவருகிறேன். அவருக்குச் சொந்தமானதுதான் இந்த வைத்திய சாலை. அவர் ஒரு முக்கியமான காரியத்தை முன்னிட்டு மாளவ தேசத்துக்குப் போயிருக்கிறார். அவர் வருகிறவரையில் அவருடைய வேலையை நான் பார்த்துவருகிறேன். அநேகமாய் அவர் இன்னும் இரண்டொரு தினங்களுக்குள் வந்துவிடுவார்" என்று வைத்தியர் பதில் சொன்னார்.

"அப்படிச் சொல்லுமையா! நான் அப்போதே சந்தேகப்பட்டேன். உம்மைப் பார்த்தால் இவ்வளவு பெரிய வைத்தியசாலைக்குச் சொந்தக்காரராக இருக்கக்கூடியவரென்று தோன்றவில்லையே என்று யோசித்தேன்" என்று அந்த மனிதன் சிரித்துக் கொண்டே சொன்னார்.

"இருக்கட்டும்; தாங்கள் இந்த அர்த்தராத்திரியிலே என்னைத் தேடிவந்த காரணம் யாது?" என்று நரேந்திரர் அவனைக் கேட்டார்.

"என்னைத் தாம் எவ்விதமான கேள்வியும் கேட்கக்கூடாது. அதற்காகத்தான் இங்கே வந்தேன். சிறிய கிராமத்தில் வைத்தியசாலை வைத்துக்கொண்டு, வைத்தியம் செய்துவரும் உம்மைப்போன்ற நாட்டு வைத்தியர்களுக்கு ஆயிரம் பொன் அதிகமல்லவா,—அதுவும் ஒரே ஒருமுறை உம்மை வந்து பார்த்து வைத்தியஞ் செய்துகொண்டு போவதற்கு?" என்று அந்த மனிதன் வைத்தியரைக் கேட்டான்.

"ஆம்; அதிகந்தான்! ஆனாலும் சந்தர்ப்பம், வியாதியின் இயல்பு, இவைகளை யெல்லாம் கவனிக்க வேண்டு மல்லவா?" என்று கேட்டுக்கொண்டே நரேந்திரர், நீண்ட தாடியும் உயர்ந்த உருவமுமுடைய அந்த மனிதனைச் சந்தேகத்துடன் பார்த்தார்.

"ஐயா; வைத்தியரே! சந்தர்ப்ப மென்ன, இயல் பென்ன? எனக்கு வேண்டுவதெல்லாம் உம்முடைய ரகசியந்தான். நான் இன்றிரவு இங்கே வந்ததை நீர் ஒருவருக்கும் சொல்லவே கூடாது,—யார் வந்து கேட்டபோதிலும் சரியே; தெரிகிறதா? இதற்காக எண்ணூறு பொன் தருகிறேன். என்னுடைய கையைச் சரிப்படுத்தி மருந்து போடுவதற்காக இருநூறு பொன் கொடுக்கிறேன். உம்முடைய இஷ்டத்தைத் தெரிவியும்" என்று அவன் நரேந்திரரைக் கேட்டான்.

அந்த மனிதன், கழுத்து முதல் கால்வரையிலும் மறைந்திருக்கும்படியாக, ஒரு தடிப்பான கறுப்புக் கம்பளிச்சட்டை போட்டிருந்தான். பச்சை நிறமான

மூக்குக் கண்ணுடிகளை அவன் அணிந்திருந்தபடியால், அவனுடைய கண்களைப் பார்ப்பதற்கு நரேந்திரனுல் முடியாதுபோயிற்று. அவனுடைய நீண்ட தாடியையும், அகன்ற நெற்றியையும் தவிர மற்ற உறுப்புக்களைப் பார்த்துத் தெளிவான அடையாளம் ஏற்படுத்திக்கொள்ளவும் வழியில்லை.

ஆனல், அவனுடைய முகவசீகரத்தையும், அவன் பேசின மாதிரியையும் பார்த்தால் ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்த கௌரவமான மனிதன் என்றே நினைக்கவேண்டியதாக விருந்தது. காயம்பட்ட அவனுடைய வலக்கை அவனுடைய சட்டைக்குள் மறைந்திருந்தது. ஆனலும், வைத்தியரிடம் அவன் செய்து கொண்ட நிபந்தனை அவருக்கு அச்சத்தையும் ஆச்சரியத்தையுமே விளைவித்தது.

கார்த்திகை மாதத்து இரவில் குளிரும் ஊதல் காற்றும் அதிகம். அதிலும், நரேந்திரனை அந்த மனிதன் பார்க்கப் போன அன்று தினம் அமாவாசியானதால், இருள் கன்னங்கரேலென் றிருந்தது. சிறிது மழையும் தூறிக்கொண் டிருந்தபடியால் வடசேரி என்னும் கிராமத்துக்கு ஒரு நோயாளியைப் பார்ப்பதற்காகச் சென்ற நரேந்திரர் மழையில் நனைந்து கொண்டு அந்த மனிதன் வருவதற்குக் கால்மணி நேரத்துக்கு முன்புதான் தமது ஜாகைக்கு வந்தார். வடசேரி என்னும் கிராமம் திருமுகக்கோட்டை என்னும் கிராமத்திற்கு ஐந்தாறு மைல் தூரத்தில் உள்ளது. வந்த மனிதனேடு பேசி ஒரு விதமான முடிவுக்கு வர அதிக நாழிகை யாகுமென்பதைத் தெரிந்துகொண்ட நரேந்திரர், அந்த மனிதனைத் தம்முடைய அறைக் குள்ளேயே இருக்கும்படியாகச் சொல்லிவிட்டு,

வெளியே சென்று சிறிது ஆகாரம் சாப்பிட்டுவிட்டு மறுபடியும் அறைக்குள் வந்து, அங்கே கிடந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார்.

“வைத்தியரே! உம்மால் இரகசியத்தை வெளியிடாமலிருக்க முடியுமோ, முடியாதோ என்னும் விஷயம் எனக்குச் சந்தேகத்தையே கொடுத்துக் கொண்டிருக்கிறது” என்று அந்த மனிதன் பழைய படியும் ஆச்சரியத்தோடு கழறினன்.

“ஐயா, நானே வைத்தியன்! என்னிடம் சிகிச்சை செய்துகொள்ள வருகிற நோயாளிகளுக்குப் பல வகைப்பட்ட வியாதிகளிருக்கலாம். அவைகளுட் சில வெளியிடக்கூடாத ரகசியமான நோய்களாயு மிருக்கக்கூடும். ஆதலால், நாங்கள் எங்கள் நோயாளிகளின் வியாதி சம்பந்தமாய் அந்தரங்கமாக நடந்துகொள்ளக் கடமைப்பட் டிருக்கின்றோம். அவ்விதம் நடந்து கொள்ளாவிட்டால், எங்களுடைய வேலைக்குக் கௌரவந்தான் என்ன? வியாதியஸ்தர்கள் நம்பிக்கை கொண்டு எங்களிடம் வைத்தியம் பார்த்துக்கொள்ள வருவார்களோ? ஆதலால், தாங்கள் என் விஷயத்தில் சிறிதும் அவநம்பிக்கை கொள்ளவேண்டுவதில்லை. இனி, தாங்கள் வந்த விஷயத்தைப்பற்றித் தாராளமாய்ச் சொல்லலாம்” என்று வைத்தியராகிய நரேந்திரர் சொன்னர்.

“நரேந்திரரே,” சந்தோஷம்! இந்தத் திருமுகக் கோட்டைக் கிராமத்தில் ஒரு நாட்டு வைத்தியர் இருக்கிறார் என்று' கேள்விப்பட்டே நான் இங்கே வந்தேன். ஆனாலும், நீர் எனக்குச் சிகிச்சை செய்ய ஆரம்பிப்பதற்கு முன் நாம் ஒருவரை யொருவர்

தெரிந்துகொள்ளுதல் அவசியமாகும். உமக்கோ, வைத்தியம் செய்வதற்குப் பிரதி பிரயோசனமாகப் பணம் வேண்டும். எனக்கோ, நான் கொடுக்கும் பணத்திற்குப் பதிலுதவியாக சிகிச்சையும் ரகசியமும் வேண்டும். இன்றிரவு நான் இங்கே வந்திருந்தேன் என்று ஒருவருக்கும் தெரியவே கூடாது. என் வண்டிக்காரனை நம்புவதற்கு என்னால் முடியும். உம்மிடம் சிப்பந்தியாயிருக்கும் அந்த ஒற்றைக் கண்ணனை நம்புவதற்கு உம்மால் முடியுமென்று நான் நினைக்கிறேன். அவன் கையில் ஒரு பவுனை வைத்தழுத்தினால் அவன் சரிப்பட்டுவிடுவான். ஒரு மஞ்சட்காசு அவனையும் அவனுடைய வாயையும் கட்டிவிடுமன்றோ? ஒருசமயம் இந்தக் கிராமத்தில் இவ்விடத்தில் என்னுடைய வண்டி நிற்பதை இவ்வூர் வாசிகள் பார்த்திருக்கலாம். ஆனாலும், இந்தச் சாலை வழியாக இரவிலும் பகலிலும் வண்டிகள் அடிக்கடி போய்க்கொண்டும் வந்துகொண்டு மிருப்பது சகஜமாதலால் அவர்கள் விகல்பமாய் நினைக்கமாட்டார்கள். இந்த வீடோ வைத்தியசாலையாக இருக்கின்றது. ஆதலால், அநேகர் வைத்தியம் செய்துகொள்ளும் பொருட்டு வண்டிகளில் வருவதும், உம்முடைய வீட்டு வாயிலில் வண்டிகள் நிற்பதும் இயல்புதானே? மேலும், என்னுடைய வண்டிக்கோ நம்பர் கிடையாது; என்னுடைய பெயரோ ஒருவருக்குந் தெரியாது. ஆதலால், எவ்வகையிலும் நான் இங்கு வந்த விஷயம் வெளிப்பட ஏதுவில்லை,—நீர்மட்டும் வாயை என் விஷயத்தில் பாதுகாக்க வேண்டும். காயப்பட்டிருக்கும் என்னுடைய வலக் கைக்கு மருந்து வைத்துக் கட்டவேண்டுவது உம்முடைய முதல் வேலை;

நான் யார் என்றும், என் பெயர் என்னவென்றும், எங்கிருந்து வருகிறேன் என்றும் என்னைக் கேட்காம லிருக்க வேண்டுவது உம்முடைய இரண்டாவது வேலை; நான் இங்கே வந்ததாகவாவது, சிகிச்சை செய்துகொண்டதாகவாவது நீர் வெளியிடாமல் உம் முடைய நாவைக் காத்துக்கொள்ள வேண்டுவது உம் முடைய மூன்றாவது வேலை! சிகிச்சை, ரகசியம் இரண் டிற்கும் சேர்த்து ஆயிரம் பொன் உமக்குக் கொடுக்க வேண்டுவது என்னுடைய வேலை. இவ்வளவுதான் விஷயம். இனி உமது அபிப்பிராயத்தைத் தெரி விக்கலாம்'' என்று அந்த மனிதன் சொல்லிவிட்டுத் தன்னுடையசட்டைப் பையிலிருந்து ஒரு பணப் பையை வெளியே எடுத்து அவிழ்த்து மேஜையின் மேல் 'கலகல' வென்று பவுன்களைக் கொட்டினான்.

மேஜையின்மேல் குவிந்துகிடக்கும் பவுன்காசு களைக் கண்டதும், நரேந்திரர் ஆச்சரியங்கொண்டார். இவ்வளவு பெருந்தொகையை அந்த மனிதன் கொடு க்க இசைந்ததற்குக் காரண மென்னவென்று யோசித் தார். அந்த மனிதன் செய்யத்தகாத ஒரு பெரிய குற்றத்தைச் செய்திருக்கக்கூடு மென்றும், அக்குற் றத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளவே இவ் வளவு பெருந்தொகையைக் கொடுத்து ரகசியத்தை வெளியிடக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறான் என்றும் நரேந்திரர் நினைத்தார். வலிய வரும் ஆயிரம் பொன்னை விட்டுவிடவும் அவருக்கு விருப்பமில்லை; அந்த மனிதன் வேண்டுகோளுக்கு இணங்கி நடக்க வும் அவருக்கு மனமில்லை! இப்போது ஆயிரம் பொன் னுக்கு ஆசைப்பட்டு அவனுடைய வேண்டுகோளுக் குச் சம்மதித்துவிட்டால், பின்பு தனக்கு ஏதாவது

ஆபத்துவந்தால் என்னசெய்கிறது என்கிற பயமும் "வலியவந்த சீதேவியைக் காலால் உதைத்துத் தள்ளுவதுபோல்" ஆயிரம் பவுன் வரக்கூடிய இந்தச் சமயத்தை இழந்துவிட்டால் பின்பு எக்காலத்தில் இவ்வளவு பெருந்தொகையை அடைகிறதென்னும் ஆசையும், அவருடைய மனத்தில் மாறி மாறி நிகழ்ந்துகொண் டிருந்தன. ஆதலால், அவர் நெடுநேரம் யோசனைசெய்து பார்த்துவிட்டு அந்த மனிதனை நோக்கி "ஐயா! உமக்கு சிகிச்சை செய்வதற்கு ஆட்சேபமில்லை. அதற்கு இரண்டு வராகன் கொடுத்தால் போதும்; ஆனால் நீர் கேட்டுக்கொள்ளுகிற மற்றொரு விஷயத்திற்கு இணங்க என்னால் முடியாது. யாராவது உம்மைப்பற்றி இங்கு வந்து விசாரித்தால், அப்போது நான் உண்மையைச் சொல்லவேண்டியதாகவே இருக்கும்" என்று சொன்னார்.

"வைத்தியரே! நீர் தயங்குவதற்குக் காரணம் என்ன வென்பதை நான் அறிந்துகொண்டேன். எங்கேயாவது நான் கொள்ளையடித்துவிட்டேனோ, அல்லது யாரையாவது கொலை செய்துவிட்டேனோ என்று நீர் சந்தேகப்பட்டுத் தயங்குகிறீர். அவ்விதம் ஐயப்படுவது சகஜந்தான். ஆனால், உண்மையில் நான் அப்படிப்பட்ட குற்றம் எதுவும் செய்யவில்லை யென்று கடவுள் சாட்சியாய்ச் சொல்லுகிறேன். என்னுடைய வார்த்தையை நம்பும்" என்று அந்த மனிதன் மிகவும் வற்புறுத்திக் கூறினான்.

"ஐயா! நீர் சொல்லுவதை நான் முழுமனதுடனும் நம்புகிறேன். ஆனாலும் ரகசியத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று என்னைக் கேட்டுக்கொள்ளும் நீர், அவ்விதம் கேட்டுக்கொள்ளுவதற்கு என்ன கார

ணம் என்பதைச் சிறிதாவது என்னிடஞ் சொன்னு லல்லவா நலமாயிருக்கும்'' என்று நரேந்திரர் கேட்டார்.

''நரேந்திரரே! காரண மென்னவென்று கேட்கிறீர்?'' என்றந்த மனிதன் சொல்லிப் புன்னகை புரிந்து ''இதுதான் காரணம்; ஒரு பெண்மணியின் மானமும் கௌரவமும் ஒரு மனிதனுடைய கையி னில் இப்போது இருக்கின்றன. அவைகளைக் காப் பாற்றவேண்டியது அவனுடைய கடமையாக இருக் கிறது. அவ்விதமான நிலைமையில் அவன் தன்னை இருக்கும்படியாகச் செய்துகொண்டது அவனுடைய குற்றமன்று. அவளைக் காக்கவேண்டியது அவசி யமா, அல்லவா? நீரே சொல்லும்; அவ்விதம் அவன் காவாதிருந்தால் அவனை நம்பிக்கைத் துரோகி என்று நீர்தான் இகழமாட்டீரா? உலகந்தான் பழி சுமத்தாதா? அவனை நம்பியிருக்கும் அந்தப் பாவை நல்லாள்தான் என்ன நினைப்பாள்?'' என்று மறுபடி யும் கூறினன்.

''ஆம்; வாஸ்தவமே! அவளுடைய மானத்தை யும் கௌரவத்தையும் காப்பாற்ற வேண்டியது அவ னுடைய கடமை என்பதில் சிறிதும் தடையில்லை'' என்று வைத்தியர் பகர்ந்தார்.

''நல்லது! நான் சொன்னதை ஒப்புக்கொண்டீர் அல்லவா? அந்த மனிதனுடைய நிலைமையில் நான் தான் இருக்கிறேன். வைத்தியரே! எந்தப் பெண் மணியை நான் என் முழுமனதுடனும் நேசிக்கிறேனே எந்த நங்கையிடம் நான் மிகுந்த மதிப்பு வைத்திருக் கிறேனே, எந்த மங்கை உலகத்திலுள்ள மற்ற எல்

லாப் பொருள்களையும்விட மேன்மையும் சிறப்பும் வாய்ந்த பொருளென எனக்குத் தோன்றுகிறளோ, எந்தப் பைந்தொடி அழகிலும் குணத்திலும், கல்வியிலும் செல்வத்திலும் ஒப்புயர்வற்று விளங்குகிறளோ அந்த யௌவன யுவதியே இப்போது ஒரு பெரிய ஆபத்தில் அகப்பட்டுக்கொண் டிருக்கிறள். நான் இங்கு வந்திருந்ததை நீர் வெளிப்படுத்தினல், அந்தச் சுந்தராங்கியின் மானத்துக்கும் கௌரவத்துக்கும் பங்கம் நேரிடுவதோடுகூட, அவளுடைய உயிருக்கே ஆபத்து நேர்ந்துவிடும். அதாவது, நீர் ரகசியத்தை வெளியிடுவீரானல் அவளுக்கு உடனே அழிவு வந்துவிட்ட தென்பது திண்ணம். அவளுக்கு அவ்விதமான ஆபத்து ஒன்றும் நேரிடாதிருப்பதற்காக நான் இவ்வளவு தூரம் உம்மை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேனே தவிர வேறில்லை. நீரும் நானும் இன்னொரு சமயம் சந்திக்கும்படி நேரிட்டால், நான் இப்போது சொல்லுவது முழுவதும் உண்மை யென்பதை அப்போது நீரே அறிந்துகொள்ளுவீர்'' என்று அந்த மனிதன் கிளந்தான்.

அந்த மனிதன் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் நரேந்திரர் ஒன்றுந் தோன்றமல் சிறிது நேரம் திகைத்திருந்தார். அதனைக் குறிப்பாலறிந்து கொண்ட அந்த மனிதன் தன் சட்டைப்பையில் கையை விட்டு ஒரு சிறு காகிதச் சுருளை எடுத்து அவருடைய கையில் கொடுத்து, "வைத்தியரே! நான் சொன்னதில் உமக்கு நம்பிக்கை ஏற்படாவிட்டாலும், அல்லது இந்த இரகசியத்தைக் காப்பாற்றுவதற்காக நான் கொடுத்த ஆயிரம் பவுன் உமக்குத் திருப்தியைக் கொடுக்காவிட்டாலும், இக் காகிதச் சுருளையும் நீர்

எடுத்துக்கொள்ளும். இந்தச் சுருளை அந்தப் பொற்றொடி என்னிடம் கொடுத்து யார் ஒருவர் இரகசியத்தை வெளியிடுவதில்லை என்று வாக்குத்தத்தம் செய்கிறார்களோ அவர்களுக்குப் பரிசிலாக அளித்துவிடும்படி உத்தரவு செய்திருக்கிறாள். இனி அதிக நேரம் தாமதிக்க என்னால் முடியாது. கையில் பட்டிருக்கும் காயத்தினால் எனக்கு வலி வரவர அதிகரிக்கிறது. வலியை மாற்றுவதற்கும், காயத்தை ஆற்றுவதற்கும் ஏதாவது தகுந்த மருந்து போட்டு என்னைச் சீக்கிரம் அனுப்பிவிடும்'' என்று சொல்லி அவசரப்படுத்தினான்.

நரேந்திரர் அந்தக் காகிதச் சுருளை வாங்கிப் பிரிக்கவே, கோடிசூரியப் பிரகாசம்போல் ஒளிவீசித் திகழும் ஓர் அருமையான வஸ்துவைக் கண்டார். ஆச்சரியத்தினால் சிறிது நேரம் பிரமித்து நின்றார். அவருக்குப் பேச நாவெழவில்லை. கடைசியில் ஒருவாறு தம்முடைய ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் அவர் அடக்கிக்கொண்டு, "மங்கையளித்த மாணிக்கமா?'' என்று மிகுந்த அன்போடு கேட்டுவிட்டு, அந்த மனிதனுடைய கைக்குச் சிகிச்சை செய்யத் தொடங்கினார். எப்போது நரேந்திரர் சிகிச்சை செய்ய ஆரம்பித்துவிட்டாரோ, அவனுடைய வேண்டுகோளுக் கிணங்கி அவர் வாக்குத்தத்தம் செய்துவிட்டார் என்பதையும், ஆயிரம் பொன்னும் விலையுயர்ந்த மாணிக்கமும் அவருக்குச் சொந்தமாகிவிட்டன என்பதையும் நாம் சொல்லவும் வேண்டுமோ?

"வைத்தியரே! நான் லஞ்சம் கொடுத்து உம்மைச் சரிப்படுத்திவிட்டேன் என்று நினைத்துக்கொள்ளாதீர்! நான் கொடுத்தது லஞ்சமன்று; வெகுமதி!''

என்று அந்த மனிதன் சற்றுப் புன்சிரிப்போடு விளம்பினான்.

நரேந்திரர், அந்த மனிதனுடைய வலக் கையில் சுற்றப்பட்டிருந்த துணியை அவிழ்த்துவிட்டுக் காயத்தைப் பரிசோதித்தார். கையின் மூன்றாவது விரலும் நான்காவது விரலும் அடியோடு பிய்த்துக்கொண்டு போகப்பட்டிருப்பதையும், கையின் முன்பாகம் தீயினால் வெந்து நசுக்குண்டு போயிருப்பதையும், இரத்தம் ஆறாய்ப் பெருகிக்கொண்டிருப்பதையும் பார்த்தவுடன் வைத்தியர் பெரிதும் அச்சங்கொண்டார். ஏதோ ஒரு பெரிய வெடி விபத்தினால் அந்த மனிதனுடைய கை அவ்வளவு பெரிய காயத்தை அடைய நேரிட்டதென்பதை எளிதில் தெரிந்துகொண்டார். ஆனாலும், அவனை அவர் ஒன்றும் கேட்கவில்லை,— ஏனெனில் அவன் வந்தவுடனேயே, தன்னை எவ்விதமான கேள்வியும் கேட்கக் கூடாதென்று கேட்டுக்கொண்டான் அல்லவா? அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி அவரும் அவன் கொடுத்த பெருந்தொகையை அங்கீகரித்துவிட்டாரன்றோ? ஆதலால், நரேந்திரர் அவனுடைய காயத்தை மட்டும் நன்றாய்ப் பரிசீலனை செய்து, அதை ஆற்றுவதற்குப் போட வேண்டிய மருந்துகளைப் போட்டுக் கட்டி, அவனுடைய கை சொஸ்தமடைவதற்கு வேண்டிய ஒழுங்குகளைச் செய்துமுடித்தார்.

“வைத்தியரே! நீர் இன்னும் ஒரே ஒரு சிறிய உதவி செய்யவேண்டும். எனக்குக் கொஞ்சம் தேன் மெழுகு வேண்டியிருக்கிறது. சம்பாதித்துத் தர முடியுமோ?” என்று அவன் நரேந்திரரைக் கேட்டான்.

"இதுதானா பிரமாதம்? இதோ கொண்டுவருகிறேன்!" என்று வைத்தியர் சொல்லிவிட்டு அந்த அறையை விட்டு வெளியே போனார். மறுபடியும் திரும்பி அவர் வந்தபோது அந்த மனிதன் தன்னுடைய உருவத்தை மாற்றிக்கொண்டிருந்தான். முன் இருந்த தாடியும், மீசையும் இப்போது காணப்படவில்லை. சுத்தமான வெண்பட்டு உடுத்தியிருந்தான். முன்பு தோன்றியதைவிட இளமையாக இப்போது தோன்றினான். வைத்தியர் இந்தக் கோலத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டுக்கொண்டே தேன்மெழுகை அவன் கையில் கொடுத்தார். ஆனால், அவர் அவனை இப்போதும் ஒன்றும் கேட்கவில்லை. அவன் தேன் மெழுகை வாங்கிக்கொண்டு "நரேந்திரரே! ஒரு காரியத்துக்காக நான் இந்த வேஷம் போடுகிறேன். நான் போய்வருகிறேன். இரகசிய விஷயமாய் மறுபடியும் எச்சரிக்கிறேன்" என்று சொல்லிவிட்டு அவரிடம் விடைபெற்று வெளியே வந்து தன்னுடைய வண்டியில் ஏறினான். சில நிமிஷங்களுக்குள் அவனுடைய வண்டி மறைந்துவிட்டது.



## 2. விநோதமான எச்சரிக்கை



குதிரை ஓடிவந்த வேகத்தைப் பார்த்தால் மிகவும் பயங்கரமாக விருந்தது. அது நாற்கால் பாய்ச்சலில் காற்றினுங் கடுகி வந்தபடியால் தெருக்களில் புழுதிகிளம்பி ஆகாயம் வரையிலுஞ் சென்றது. ஆழ்ந்த நித்திரையி லிருந்தவர்கள் எல்லோரும் புரவியின் கால

டிச் சத்தத்தை கேட்டு, வானந்தான் இடிந்து விழு கிறதோ; எரிமலைதான் வெடிக்கிறதோ; அல்லது பூமிதான் பிளவுபடுகிறதோ; என்று அஞ்சித் திடுக் கிட்டு விழித்துக்கொண்டார்கள். ஆனாலும் ஒருவ ராவது கதவைத் திறந்துகொண்டு வெளியே வர வில்லை, — ஏனெனில் பயமானது அவர்களை இருந்த இடத்தைவிட்டு அசைய முடியாமற் செய்துவிட்டது. வரவர அஸ்வத்தின் காலடிச்சத்தம் பலமாயும், சமீப மாயும் கேட்டது. சிறிது நேரத்திற்கெல்லாம் பரி மாவின் காலடிச் சத்தம் கேட்கப்படவில்லை. ஒரு வீட்டினுடைய கதவைமட்டும் யாரோ மிகுந்த அவ சரமாயும் பலமாயும் தட்டுகிற சத்தம் கேட்டது. கதவு திறக்கப்படாவிடினும், "யார் கதவைத் தட்டு கிறது?" என்னும் கேள்விமட்டும் அவ்வீட்டுக்குள் ளிருந்து வந்தது.

"சதானந்தர் எங்கே? ஒரு அவசரமான காரியம்! நான் அவரைக் கையோடு அழைத்துப் போக வந் திருக்கிறேன்" என்று வெளியிலிருந்து பதில் வந்தது.

"அவர் ஊரிலில்லை. அவர் வருவதற்கு இரண் டொரு நாட்கள் செல்லும். என்றால் ஆகவேண்டிய காரியம் ஏதாவதிருந்தால் சொல்லுங்கள். நான் அவ ருக்கு உதவியாக இங்கே வேலை பார்ப்பவன்தான். என் பெயர் நரேந்திரன்" என்று உள்ளே இருந்து ஒருவர் பதில் சொன்னார்.

"தாம் வைத்தியரா? ரணவைத்தியத்தில் உமக்கு நல்ல தேர்ச்சியுண்டா?" என்று வெளியேயிருந்து வந்த கேள்விக்கு, "ஆம்; நான் வைத்தியன்தான்! ரண வைத்தியம் அநேகருக்குச் செய்திருக்கிறேன்" என்று நரேந்திரர் பதில் தந்திட்டார்.

"ஆனால் சரி; கதவைத் திறக்கலாம்! நீர் உடனே உம்முடைய ரணவைத்தியக் கருவிகளையும், முக்கியமான மருந்துகளையும் எடுத்துக்கொண்டு என்னுடன் வரவேண்டும். மிகவும் அவசரம்! ஒருவருடைய உயிர் உம்முடைய கையில்தான் இப்போதிருக்கிறது. நீர் எவ்வளவு பணம் கேட்டபோதிலும் கொடுக்க நான் தயாராக விருக்கிறேன்" என்று வெளியிலிருந்து பதில் வரவே நரேந்திரர் தம்முடைய வீட்டின் கதவைத் திறந்து வெளியே இருந்தவரை உள்ளே வரும்படியாகச் சொல்லிவிட்டு உள்ளே தம்முடைய வைத்திய அறைக்குள் விளக்கேற்றப் போனார். இதற்குள் அவரை அழைக்க வந்தவர் உள்ளே சென்று அங்கே கிடந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார்.

நரேந்திரர் விளக்கை ஏற்றிவிட்டு "ஏன்! உள்ளே வரலாம்! வாருங்கள்!" என்று சொல்லவே, வெளியில் நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர் எழுந்து உள்ளே சென்றார்.

ஆ! உள்ளே வந்ததைப் பார்த்ததும் நரேந்திரருக்கு உண்டான ஆச்சரியம் இவ்வளவென்று சொல்ல முடியாது. அவர் ஒன்றுந் தோன்றாமல் சில நிமிஷம் ஸ்தம்பித்து நின்றார். ஏன்? கண்ணைக் கவரும்படியான பேரழகும், அழகுக்குத் தகுந்த யௌவன பருவமும், அந்தப் பருவத்திற்கு ஏற்ற முகவிலாசமும் உடைய மங்கை ஒருத்தி எதிர்பாராத விதமாய் எதிரில் தோன்றினால் அவருக்கு ஆச்சரிய முண்டாகாதா? தாமரைப் புஷ்பத்தில் உள்ள தேனையுண்டு மதிமயங்கிக் கிடக்கும் வண்டினங்களைப்போல், நரேந்திரர் அந்தப் பெண்மணியின் முககமலம் சொரிந்த குளிர்ந்த பார்வைத்தேனை அருந்தி மதிமயங்கிவிட்டார்.

அவளுடைய பேரழகு அவருடைய மனத்தை அடியோடு கொள்ளைகொண்டுவிட்டது. அந்தப் பெண் மணியின் நிறம் பத்தரைமாற்றுப் பசும் பொன்னைப் போல் தோன்றிற்று. அவளுடைய மேனியின் காந்தியும் பொற்பிரகாசமாகவே இருந்தது. ஆனாலும் பொற்கட்டியைப்போல் கடினமா யிராமல், பஞ்சி னும் மென்மையாக அவளுடைய சரீரம் இருந்தபடியால் பசும்பொன்னை அவளுக்கு உவமானமாகக் கூறுவதற்கு இடமில்லை. அதிக உயரமாயு மில்லாமல் குட்டையாயு மில்லாமல், நடுத்தரமான உயரமும், அந்த உயரத்துக்கேற்ற பருமனும் உடையவளாய்த் துவளும் இயல்புடைய பூங்கொம்பைப்போ லிருந்த அந்த அணங்கின் தலைமயிர் சுருண்டு சுருண்டிருந்த போதிலும், முழந்தாள் வரையில் தொங்கிக்கொண் டிருந்தது. எண்ணெய் தடவி வாரப்படாமலும், வாசியின்மீது சவாரி வந்ததால் ஒழுங்கற்றுப் பலவிதமாய்க் கலைந்தும், இருந்த அவளுடைய கூந்தல் அவளுடைய அழகை மிகுதிப்படுத்திற்றே ஒழியக் குறைக்கவில்லை. இவ்வளவு அழகுடன் அந்த நங்கையைச் சிருஷ்டித்த பிரமதேவனின் மதிவன்மை மிகவும் சிலாகிக்கத்தக்கதேனும், ஒரு விஷயத்தில் அவர் தவறியேவிட்டார், — அதாவது அவளுடைய இடையை அவர் மிகவும் சிறிதாக அமைத்துவிட்டார்.

உண்டோ இல்லையோ என்னும்படி அவ்வளவு நுண்ணிதாக அவளுடைய இடை தோன்றியது, பார்வைக்கு மிகவும் அழகாய் இருந்ததென்பதில் சிறிதும் தடையில்லை. ஆனாலும், நான்முகன் அவளைப் படைத்தபோது, பின்னொரு காலத்தில் அவள் மங்கைப் பருவத்தை அடைய நேரிடுமென்பதையும், அச்சம

யத்தில் அவளுடைய இடை சிறிதாக இருந்தால் முற்றத் துறந்த முனிவர்களையும் பற்றியிழுக்கும் அவளுடைய தனபாரங்களை அது தாங்கமாட்டா தென்பதையும், அதனால் அவள் வருந்த நேரிடுமென்பதையும் மறந்து, நுண்ணிய இடையாக அமைத்துவிட்டது பெருங் குற்றமேயாகும். அந்த யௌவனயுவதி அவ்விதம் வருந்தினாள் என்பதிலும் தடையில்லை. ஏனெனில், அவளுடைய பருவம் அப்படிப்பட்டதன்றோ? ஆனாலும், நரேந்திரனைக் கண்டதும் அவளுக்கு ஒருவிதமான ஆறுத லுண்டாயிற்று. தன்னுடைய தனபாரங்கள், நுண்ணிய தன் இடைக்கு அளவுக்கு மிஞ்சிய சுமையைக் கொடுத்து அதை வருத்தியபோதிலும், பதிலுக்குப் பதில் அவைகளை நரேந்திரன் வருத்தாமல் வருத்தித் தன்னுடைய வருத்தத்தை ஒருகாலத்தில் நீக்குவான் என்னும் ஒருவிதமான நம்பிக்கை காரணமின்றியே அவளுக்கு உண்டாயிற்று. நம்பிக்கை யுண்டாகவே திருப்தியும், சந்தோஷமும் அடைந்தாள். நரேந்திரனே சுந்தர புருஷன்; இப்போதுதான் அவனுக்கு இருபத்து நான்கு வயதுஆயிற்று. இயற்கையிலேயே பேரழகும் பெருங் குணமும் வாய்ந்து விளங்கும் அவனுக்கு, அழகே உருவெனத் திரண்டு வந்திருக்கும் ஒரு குணவதியைக் கண்டதும் காதலுண்டாகாம லிருக்குமா? நரேந்திரன் வைத்தியத் தொழிலை மேற்கொண்டிருப்பதனால் அவனுக்குச் சுகாதார முறையும், சரீரக் கூறுபாடும் நன்றாய்த் தெரியுமென்பது நாம் சொல்லாமலே விளங்கும். இயற்கை யழகும், பாலியதசையும் ஒருங்கே வாய்த்திருக்கும் ஒருவனுக்கு சுகாதார முறையைத் தெரிந்து நடக்கும் பாக்கியமும் கிடைத்தால் அவனுடைய தேகம் பரந்து விரிந்து பலமுடையதாய் இருக்கு

மென்பதைக் கேட்கவும் வேண்டுமோ? ஆகவே நரேந்திரன் தேகக் கட்டோடும், சரீர திடத்தோடும் விளங்கினனென்பது ஓர் ஆச்சரிய மன்று; அப்படிப் பட்ட ஒரு புருஷ சரீரத்தைக் கண்டு, ஒரு யௌவன யுவதி காதல் கொண்டதும் ஆச்சரியமன்று; ஆனல் பின்னல் நடக்கப்போகும் விஷயங்களை மறந்து நாம் இவ்விருவரைப் பற்றிமட்டும் இவ்வளவு நேரம் பிரஸ் தாபித்துக்கொண் டிருந்துவிட்டதுதான் பெரிய ஆச் சரியம்! ஆதலால் நரேந்திரன் அவளைக் காதலித்தான்; அவள் அவனைக் காதலித்தாள் என்றுமட்டும் இப் போது சொல்லிவிட்டு அந்தப் பெண்மணி வந்த காரி யத்தைப் பற்றிக் கவனிப்போம்.

“வைத்தியரே! நானே மிகவும் அவசரமான காரி யத்தை முன்னிட்டு இங்கே வந்திருக்கிறேன். கால தாமதம் செய்வதில் பிரயோஜனம் இல்லை. உடனே புறப்பட்டு என்னோடு வரவேண்டும். விவரம் பின்பு சொல்லுகிறேன். சீக்கிரம் புறப்படும்!” என்று அந் தப் பெண்மணி மிகுந்த பரபரப்புடன் கூறி நரேந்தி ரனை அவசரப்படுத்தினள்.

“அம்மா! இரண்டு நிமிஷம் காத்துக்கொண்டிரு; நான் உள்ளேபோய் உடை தரித்துக்கொண்டு ஒரு நொடியில் வருகிறேன்!” என்று சொல்லிவிட்டு வைத் தியர் வீட்டின் பின்புறத்துக்குச் சென்றூர்.

நரேந்திரர் உள்ளே சென்று உடை தரித்துக் கொண்டு மறுபடியும் வைத்திய அறைக்கு வந்தார். அங்கு உட்கார்ந்திருந்த பெண் மிகுந்த கோபத்து டன் அவரை எதிர்த்துச் சென்றாள். அவளுடைய முகம் இரத்தம்போல் சிவந்திருந்தது; கண்களில் தீப் பொறி பறந்தது.

"அந்த மனிதன் இங்கே வந்துவிட்டுப் போயி ருக்கிறான்! தன்னுடைய கைக்கு மருந்து போட்டு சொஸ்தம் செய்துகொள்ளுவதற்காக உம்மிடம் வந் திருக்கிறான்! நீர் அதை மறுக்க முடியாது! இதோ பாரும்! இதை நான் அதோ எரிந்துகொண்டிருக்கும் கணப்புக்குச் சமீபத்தில் கிடந்தெடுத்தேன்!" என்று சொல்லி ஒரு பச்சை நிறமான காகிதத்தை நரேந்திர னிடம் அந்தப் பெண் காண்பித்தாள்.

"அது வென்ன?" என்று நரேந்திரர் ஆவலோடு உசாவினார்.

"இது ஒரு கடிதம் ! இதில் எழுதப்பட்டிருக்கும் விஷயம் இன்னதென்று எனக்கு நன்றாய்த் தெரியும்! யாருடைய கையெழுத்து என்பதையும் நான் அறி வேன்! இந்தக் கடிதத்தைக் கொளுத்திவிடக் கருதி அவன் இதை எரிந்துகொண்டிருக்கும் கணப்பில் எறிந்திருக்கிறான், — ஆனால் தெய்வச் செயலாய் இது நெருப்பில் விழுந்துவிடாமல் சற்று எட்டி விழுந்து விட்டது. அவனோ கடிதத்தை நெருப்புக்கு இரை யாக்கிவிட்டதாக நினைத்துக்கொண் டிருக்கிறான்! இரு ந்தாலும் இந்தக் கடிதம் அவனுக்குத் தகுந்த தண் டனை விதிக்கும்! ஏனெனில், உண்மை யென்னவென் பதை இக் கடிதம் சொல்லுகிறது!" என்று அந்தப் பெண் ஆத்திரத்தோடு சொன்னாள்.

"எனக்கு நீ சொல்லுகிற விஷயம் சிறிதும் விளங்கவில்லையே?" என்று நரேந்திரன் அச்சத் தோடு கேட்டார்.

"அந்த மனிதன் யார் என்றும், எங்கிருந்து வந் தான் என்றும், அவனுடைய பெயர் என்னவென்

றும் உமக்குத் தெரியுமா?" என்று அந்த மங்கை மிகுந்த உக்கிரத்தோடு வினவினுள்.

"எனக்கு ஒன்றுமே தெரியாது!" என்றூர் வைத்தியர்.

"என்னேடு கூடவாரும்! அந்த மனிதன் செய்துவிட்டுப் போயிருக்கும் அநியாயமான வேலையைக் காண்பிவிக்கிறேன்! உம்முடைய வண்டிக்காரனை உடன் அழைத்து வரவேண்டாம்; நீரே உம்முடைய வண்டியை ஓட்டிக்கொண்டு வரவேண்டும்! முதலில் இரகசியத்தை வெளியிடுவதில்லை யென்று எனக்குச் சத்தியம் செய்துகொடும்!" என்று அவள் கேட்டாள்.

அந்தப் பெண் விரும்பியபடியே நரேந்திரர் சத்தியம் செய்துகொடுத்தார். பிறகு அவள் தன்னுடைய குதிரையில் ஏறிக்கொண்டு முன்னே சென்றூள். நரேந்திரர் தம்முடைய வண்டியில் ஏறிக்கொண்டு அவள் பின்னே சென்றூர். தேன் மெழுகு எடுக்க உள்ளே போன சமயத்தில் அந்த மனிதன் மேற்படி காகிதத்தை நெருப்பில் எறிந்திருக்கக் கூடுமோ என்று நரேந்திரர் போகும்போதே ஆலோசித்துப் பார்த்தார். வேறு காரணம் அவருக்குப் புலப்படாமையால் அப்படித்தான் இருக்கவேண்டு மெனத் தாமே முடிவு செய்துகொண்டார். அவனிடத்தில் பொன்னையும், மாணிக்கத்தையும் வாங்கிக்கொள்ளாமலிருந்தால் நலமா யிருந்திருக்குமே என்று சிந்தித்தார். குதிரைமீது செல்லும் பெண்ணே கடிதத்தின் ஒருபாகம் அகப்படவில்லையே என்று சிறிது வருத்தப்பட்டு ஆலோசித்தாள். ஆனுலும் கடிதத்தின் ஒருபாகம் கிடைத்ததற்காகப் பின்பு அவள் சிறிது திருப்தியடைந்தாள்.

குதிரைமீது செல்லும்போதே அவள் நரேந்திரருடன் பேசிக்கொண்டு போனாள்.

"அந்த மனிதன் எந்தத் திசையை நோக்கிச் சென்றான் என்று தங்களுக்குத் தெரியுமா?" என்று அந்தப் பெண் கேட்டதற்கு நரேந்திரன் தெரியாதென்று பதில் சொல்லிவிட்டார்.

"இருந்தாலும் பாதகமில்லை; எவ்விதத்தாலும் அவனைக் கண்டுபிடிக்கிறேன்! இதனால் என்னுடைய உயிர் போவதா யிருந்தபோதிலும் சரியே!" என்று அந்தப் பெண் சபதம் கூறினாள். இப்படியாக இவர்களிருவரும் சம்பாஷித்துக்கொண்டே குறித்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

எங்கு பார்த்தாலும் ஒரே இருள் சூழ்ந்திருந்தமையால் அந்தப் பெண் தன்னை அழைத்துக்கொண்டு எந்த வழியாக வந்தாளென்றும், எந்த ஊரில் இருக்கிறாளென்றும் நரேந்திரனுக்குத் தெரியவில்லை. "இப்போது வந்தவழிதான் குறுக்கு வழி" என்று அந்தப் பெண் சொன்னாள். சுமார் இரண்டுமணி நேரம் பிரயாணம் செய்திருப்பதாக மட்டும் நரேந்திரனுக்குத் தெரிந்தது. ஒரு பெரிய தோட்டத்தின் மத்தியில் ஒரு மாளிகை காணப்பட்டது, அதைச் சுற்றிலும் வெறும் மரங்களும் செடிகளுந்தான் இருந்தன. அக்கம்பக்கத்தில் வீடுகளே இல்லாமல் அந்த மாளிகை தனித்திருப்பதைப் பார்க்கவே, நரேந்திரனுக்கு ஒருவிதமான ஆச்சரிய முண்டாயிற்று. அந்தப் பெண், துரங்கத்திலிருந்து இறங்கி நரேந்திரனை அழைத்துக்கொண்டு ஒரு மாளிகையினுட் சென்றாள். வீட்டு வாயிற்படியினில் கூன் விழுந்துபோன ஒரு வயோதிகன் கவலையோடு நின்றுகொண்டிருந்தான்.

"எப்படியிருக்கிறது?" என்று அவனைக் கேட்டாள்.

"அப்படியேதானிருக்கிறது! கொஞ்சமும் குணத்தைக் காணவில்லை!" என்று அவன் வருத்தப்பட்டுச் சொன்னான்.

"சரி; இருக்கட்டும்! நான் வைத்தியரை அழைத்து வருவதற்காகத் திருமுகக் கோட்டைக்குப் போயிருந்தேன்!" என்று அவனுக்குப் பதில் சொல்லிவிட்டு அவள் நரேந்திரனை அவ்வீட்டின் வடபுறத்திலிருந்த ஒரு அறைக்குள் அழைத்துச் சென்றாள். கூன் முதுகையுடைய வயோதிகனும் அவ்வறைக்குள் நுழைந்தான். ஒரு கட்டிலின்மேல் ஒரு மெத்தை விரிக்கப்பட்டிருந்தது. அதில் ஒருவர் படுத்திருந்தார். அவருடைய சரீரம் முழுவதும் சிவப்புக் கம்பளத்தால் மூடப்பட்டிருந்தது. அவர் இரண்டொரு நிமிஷங்களுக்கு ஒருதரம் "உஸ்! அப்பா! அம்மா! அடடா! ஐயோ! வலிக்கிறதே! வலிக்கிறதே! ஆ!" என்று மெதுவாகப் புலம்புவதையும், சிறிதுநேரம் ஒன்றும் பேசாமல் பிரக்ஞையற்றுக் கிடப்பதையும் கண்ட நரேந்திரன் அவர்தான் வியாதியஸ்தர் என்று தெரிந்துகொண்டார். அவர்தான் வியாதியஸ்தர் என்றும், அவருக்குத்தான் சிகிச்சை செய்யவேண்டுமென்றும் அந்தப் பெண் நரேந்திரருக்குச் சொல்லி, அந்த நோயாளி போர்த்திருந்த சால்வையை நீக்கினாள். நரேந்திரர் பயத்தினால் மூளை கலங்கி நின்றார். நோயாளியின் இடப் பக்கத்துத் தாடையும் புஜமும் நறுக்கப்பட்டு இரத்தம் பெருகிக்கொண்டே இருந்தது. அவருடைய நெற்றியில் ஒரு பலமான வெட்டுக்காயமிருந்தது. அவருடைய இருதயத்தில் ஒரு இருப்புச்

சலாகை பாய்ந்திருந்தது. நரேந்திரர் வேண்டிய மருந் துகளைப் போட்டுச் சிகிச்சையை சீக்கிரத்திலேயே முடித்தார்.

ஏதோ ஒரு பெரிய வெடி விபத்தினாலேயே இவ் வளவு பலமான காயம் அந்த நோயாளிக்கு ஏற்பட் டிருக்கவேண்டுமென்பதை எளிதில் அறிந்துகொண்ட நரேந்திரர், "வெடிவிபத்து எந்த இடத்தில் நேர்ந் தது?" என்று அந்த நோயாளியைக் கேட்டார்.

"எனக்கு ஒன்றுந் தெரியாது. அந்த விஷயத் தைப் பற்றித் தேவகி உங்களுக்கு விவரமாய்ச் சொல்லு வாள்" என்று அந்த நோயாளி வாய்குழறத் தயங்கித் தயங்கிப் பதில் உரைத்தார்.

நரேந்திரருக்கு உண்மையை அறியவேண்டுமென் னும் விருப்பம் உண்டாயிற்று. ஏனெனில், அங்கு நடந்த சம்பவம் ஆச்சரியத்தையும் அதிசயத்தையும் அவருக்கு விளைவித்தது. "வெடிவிபத்து எங்கே உண் டாயிற்று? அது உண்டாகக் காரணமென்ன? இவ் வளவு பெரிய வீட்டில் ஒரு வயோதிகனும், கூனனும், அழகிற் சிறந்த ஒரு மங்கையும் தனியாக இருப்பா னேன்? தேவகி என்று அந்த நோயாளி குறிப்பிட்டது என்னை அழைத்துவந்த பெண்ணினுடைய பெயரா யிருக்குமோ? நோயாளிக்கும் அந்தப் பெண்ணுக்கும் என்ன சம்பந்தமிருக்கக்கூடும்?" என்று நரேந்திரர் தனக்குள்ளேயே யோசனை செய்துபார்த்தார். எவ் வளவுக்கு எவ்வளவு அவருடைய ஆலோசனை அதிக மாயிற்றோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவருடைய சந் தேகமும் அதிகமாயிற்று! ஒரு விதமான முடிவுக்கும் வரமுடியாமல் அவர் தயங்கினார்.

"இப்போது என்னமா யிருக்கிறது?" என்று தேவகி மிகுந்த விசனத்தோடும், பயத்தோடும் கேட்டாள். நோயாளி இறந்துபோய்விடுவார் என்னும் அச்சம் அந்தப் பெண்ணுக்கு அதிகமிருந்த தென்பதை அவள் முகக்குறி விளக்கிற்று.

"அவருடைய உயிருக்கு அபாயம் எதுவும் நேரிடாது. எவ்விதத்திலும் பிழைத்துக்கொள்ளுவார் என்று நம்புவதற்கு இடமிருக்கிறது" என்று வைத்தியர் தேறுதல் சொன்னார்.

"ஆனால், இன்னமும் பிரக்ஞை இல்லாமல் இருக்கின்றாரே? வாயைத் திறந்து பேசினாலல்லவா உண்மையைத் தெரிந்துகொள்ளலாம். அவரைக் கொல்லுவதற்காக யாரோ சூழ்ச்சி செய்திருக்கிறார்கள் போல் எனக்குத் தோன்றுகிறது. இல்லாவிடில், இத்தகைய சம்பவம் நேரிடக் காரணமில்லை" என்று அந்தப் பெண் சொன்னாள்.

"அப்படிச் சூழ்ச்சி செய்தவன் அநேகமாய்த் தன்னுடைய சதியாலோசனையை நிறைவேற்றிவிட்டான் என்றே சொல்லவேண்டும்" என்றார் நரேந்திரர்.

தேவகி உதட்டைக் கடித்தாள். பற்களை நெரித்தாள். அவளுடைய புருவங்கள் சுருங்கின. அவளுடைய பார்வை பயங்கரமா யிருந்தது. பழிக்குப் பழி வாங்கவேண்டு மென்று அவள் நினைத்ததை அவளுடைய முகம் வெளிப்படுத்திற்று.

"இருந்தபோதிலும் பாதகமில்லை! எவ்விதத்திலும் நான் அவனைக் கண்டுபிடிக்கிறேன்! இதனால் என்னுடைய உயிர் போவதா யிருந்தபோதிலும்

சரியே!" என்று வருகிற வழியில் அந்தப் பெண் சபதங்கூறியது, நரேந்திரனுடைய ஞாபகத்துக்கு வந்தது. தன்னிடம் வந்து வைத்தியம் செய்து கொண்டுபோன மனிதனிடத்திற்றான் அவளுக்குச் சந்தேகமிருக்கிறது என்பதை நரேந்திரர் தெரிந்து கொண்டார். நோயாளி யிருந்த வீட்டில் எவ்விதமான அடையாளமும், வெடிவிபத்து நேர்ந்த தென்பதைக் குறிப்பிட, காணப்படவில்லை. இதனால் நரேந்திர னுடைய ஆச்சரியம் இன்னும் அதிகப்பட்டது. அவர் நோயாளியின் அறையை மிகுந்த கவனத்துடன் பார்த்துக்கொண்டிருந்தபோது, அவருடைய கண்ணுக்கு ஒரு துண்டுக் கண்ணாடி அறையின் ஓர் மூலையில் தென்பட்டது. அதை நரேந்திரர் ஒருவருக்கும் தெரியாமல் எடுத்துப் பார்த்தார். வெளியே இருக்கும் ஜன்னல் கண்ணாடி என்பதை அவர் எளிதில் அறிந்து கொண்டார். உடனே அந்த ஜன்னலை நெருங்கி அதில் மாட்டியிருந்த திரையை நீக்கிவிட்டுப் பார்த்தார். ஜன்னல் முழுவதும் தூகள் தூகளாய் உடைந்து போயிருப்பதையும், சுற்றுப்பக்கங்கள் நெருப்பினால் கருகிப்போயிருப்பதையும் கண்டார். ஆகவே, வெடி விபத்து வீட்டுக்கு வெளியேதான் சம்பவித்திருக்கிற தென்று நரேந்திரர் அறிந்துகொண்டார். தேவகி, அந்தக் கூனனை ஏதோ ஒரு வேலையாய் மாடிக்கு அனுப்பிவிட்டு, நரேந்திரரைப் பார்த்து "வைத்தியரே! இந்த விஷயத்தை நீங்கள் அதிரகசியமாய் வைத்திருக்கவேண்டும்! இங்கே வந்ததாக ஒருவரிடமும் பிரஸ்தாபிக்கக் கூடாது!" என்று கேட்டுக் கொண்டாள்.

"கண்மணி! தேவகி! உன் விருப்பப்படியே நான் இந்த விஷயத்தை ரகசியமாய் வைத்துக்கொள்

ளுகிறேன் !'' என்று நரேந்திரர் உறுதிமொழி கூறி னார். அவள்மீது அவருக்கிருந்த காதலின் பெருக்கு அவரை அவ்விதம் செய்யும்படிச் செய்தது. இவர்க ளிப்படிப் பேசிக்கொண் டிருந்தபோது நோயாளி தேவகியை நோக்கி ''தேவகி! நாம் கண்டுபிடிக்கப் பட்டுவிட்டோம்! நீ உன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் வழியைத் தேடிக்கொள்! அவர்கள் உன்னைக் கொல் லப் பார்க்கிறார்கள் !'' என்று உரத்துக் கூவினார்.

''ஆ ! இதென்ன? விநோதமான எச்சரிக்கை யாக இருக்கின்றதே?'' என்று நரேந்திரர் ஆச்சரியப் பட்டார்.



## 3. ஆச்சரியத்தை அதிகப்படுத்துகிறது



''கந்தா! கந்தா!'' என்று தேவகி இரண்டு மூன்று முறை உரத்துக் கூப்பிட்டாள். கூன்விழுந்த வேலைக் காரன் ''ஏன்! ஏன்!'' என்று கேட்டுக்கொண்டே வெகு விரைவாக அறைக்குள் ஓடிவந்தான். அவன் வந்தவுடன் தேவகி அவனிடம் ஒரு சங்கதியும் சொல் லாமல் நோயாளியையே உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தாள். கந்தனும் நோயாளியின் அருகில் வந்து மிகுந்த பரிதாபத்துடன் பார்த்தான். ஆனால், வைத் தியர் நரேந்திரர்மட்டும் கந்தனை உற்று நோக்கினார். கந்தன் என்பது அவனுடைய பெயர்தான் என்பதை நரேந்திரர் எளிதில் அறிந்துகொண்ட பின், அவனி டம் அவருடைய கவனம் அதிகமாகச் சென்றது.

"தைரியமில்லாத பயங்காளிகள்! நான் இங்கே இருந்திருந்தால் அவர்கள் இவ்விதம் செய்திருக்க மாட்டார்கள். சிநேகிதர்களைப்போல் வெளி வேஷம் போட்டார்கள். ஆனால், உண்மையில் பெரும் பகைவர்களாகவே இருந்திருக்கிறார்கள். இப்போது அவர்களுடைய கருத்து என்னவென்று புலப்பட்டுவிட்டது. இனி தேவகி மிகுந்த ஜாக்கிரதையோடு இருத்தல் வேண்டும். தேவகி — ஜாக்கிரதை —!" என்று காவி படிந்த பற்களைக் காட்டிக்கொண்டு கந்தன் சொன்னான்.

"கந்தா! நீ ஒன்றும் எனக்கு எச்சரிக்கை செய்ய வேண்டாம். நீ வெளியே போய் காவல் புரிந்து கொண்டிரு. நான் உன்னைக் கூப்பிட்டாலொழிய நீ இங்கே வரவேண்டாம்" என்று தேவகி அவனுக்குக் கட்டளையிடவே, எஜமானன் நோக்கத்தை அறிந்த நாய்போல் அவன் வெளியே போய்விட்டான்.

"வைத்தியரே! மதிவதனனுக்கு எப்போது பிரக்கினை வரும்? இன்னமும் கண்ணை மூடிக்கொண்டு தன்னை மறந்து கிடக்கின்றாரே?" என்று தேவகி கேட்டாள்.

"இன்னும் ஒருமணி நேரத்திற்குள் அவருக்குப் பிரக்கினை உண்டாகிவிடும்; பயப்படவேண்டாம்!" என்று சொல்லிக்கொண்டே நரேந்திரர் மேஜையின் மீது வைக்கப்பட்டிருந்த சில ஆயுதங்களை ஆச்சரியத்தோடு பார்த்தார். அவர் அவ்விதம் பார்த்ததைக் குறிப்பா லறிந்துகொண்ட தேவகி அவருடைய கவனத்தை வேறு வழியில் திருப்புவதற்காக "நரேந்திரரே! தாங்கள் வண்டியில் நெடுநேரம் சவாரி வந்தபடியால் மிகவும் களைத்திருக்கிறீர்கள்! ஏதாவது சிற்

றுணு எடுத்துக்கொள்ளுங்கள்! உள்ளே, சாப்பாட்டு அறைக்கு, வாருங்கள்!'' என்று சொல்லி அவரைத் தன்னுடன் வேறொரு அறைக்கு அழைத்துச் சென்ருள். ஏனெனில், அந்த ஆயுதங்களை நரேந்திரர் பார்க்கக் கூடாதென்பது அவளுடைய எண்ணம்.

நரேந்திரரும் தேவகியும் சென்ற அறை மிகச் சிறிதாயும் அழகாயு மிருந்தது. அந்த அறையில் இரண்டு ஜன்னல்கள் இருந்தனவாயினும் அவைகள் சாத்தப்பட் டிருந்தன. அறையின் ஒரு மூலையில் ஒரு சிறு விளக்கு மிகவும் மங்கலாக எரிந்துகொண் டிருந்தது. அறையின் மத்தியிற் கிடந்த மேஜையின் மீது சுத்தம் செய்யப்படாத சிறு தட்டுகள் கிடந்தன. மேஜையைச் சுற்றி ஐந்தாறு நாற்காலிகள் போடப் பட்டிருந்தன. அங்கு வாழைப்பழத் தோல்களும், கிச்சிலிப்பழத் தோல்களும், வாழையிலைத் துண்டுக ளும் கிடந்தன. அவைகளைக் கொண்டு சிறிது நேரத் திற்கு முன்புதான் ஐந்தாறுபேர் அந்த இடத்தில் சிற்றுணவு சாப்பிட் டிருக்கிருர்க ளென்பதை நரேந் திரர் அறிந்துகொண்டார். நரேந்திரர் ஒரு நாற்காலி யில் உட்கார்ந்தார். தேவகி அவருக்கு எதிரில் மற்ெருரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். மேஜையின்மீது விரிக்கப்பட்டிருந்த ஒரு வெள்ளைத் துணியின் ஒரு கோடியில் சுமார் ஒரு அடி சதுரத் துக்கு சிவப்பு நிறமான கறை யிருந்ததை வைத்தியர் உற்று நோக்கினர். அவர் அந்தக் கறையைக் கூர்ந்து கவனித்ததைப் பார்த்த தேவகி, "கந்தன் சாராயத் தை ஊற்றிவிட்டான்! அவன் எந்த வேலையையும் அஜாக்கிரதையாகவே செய்து கெடுத்துவிடுகிருன்!'' என்று நரேந்திரருக்குச் சமாதானம் சொன்னுள்.

அவள் சொன்னதற்கு வைத்தியர் யாதொரு பதிலும் சொல்லாமல் மேஜையின்மீது வைக்கப்பட்டிருந்த பழவர்க்கங்களையும் தித்திப்புப் பண்டங்களையும் சாப்பிட்டுவிட்டு, ஒரு பாத்திரத்தில் வைக்கப்பட்டிருந்த பாலையும் எடுத்து அருந்தினர். பிறகு நாற்காலியை விட்டு எழுந்து அந்த அறையில் உலாவிக்கொண்டிருப்பவரைப்போல் இரண்டொருதரம் ஒரு கோடிக்கும் மற்றொரு கோடிக்கும் மெதுவாக நடந்துகொண்டே இருந்தார். தேவகி வேறொரு புறமாய்த் திரும்பியபோது, மேஜையை நெருங்கித் தம்முடைய கண்ணுக்கு முதலிலேயே புலப்பட்ட சிவப்புக் கறையை விரலினல் அழுத்திப்பார்த்தார். கையில் பிசுபிசுவென்று அது ஒட்டிற்று. அவளுக்குத் தெரியாமலே தம்முடைய விரலை முகர்ந்துபார்த்தார்; இரத்த வாசனை வீசிற்று. அந்தக் கறை இரத்தக்கறையே என்பது அவருக்கு நிச்சயமாய்ப் புலப்பட்டுவிட்டது. உண்மையை மறைப்பதற்காகவே, சாராயத்தை வேலைக்காரன் ஊற்றிவிட்டானென்று தேவகி கந்தன் மேல் குற்றஞ்சாட்டினள் என்பதையும் நரேந்திரர் அறிந்துகொண்டார். இந்த அறையிலும் ஏதாவது பயங்கரமான கொலை நடந்திருக்கக் கூடுமோவென்று வைத்தியர் சந்தேகித்தார். கந்தனிடத்தில் ஒரு சங்கதி சொல்லிவிட்டு வருவதாகத் தேவகி நரேந்திரரிடம் கூறிவிட்டு வெளியே, கதவைத் தனக்குப் பின்னல் சாத்திக்கொண்டு, சென்றாள்.

தேவகி போனபின்பு அறைக்குள் நரேந்திரர் தனித்து இருந்ததால் அந்த அறையை நன்றாய்ப் பரிசோதனை செய்ய அவருக்குத் தகுந்த சமயம் வாய்த்தது. மேஜையின்மேல் விரித்திருந்த துணி

யின் ஓர் மூலையில் இருந்த கறையை இன்னும் நன்ருய்ப் பரிட்சித்துப் பார்த்தார். அது இரத்தக்கறை என்பதைக் கொஞ்சமும் சந்தேகமின்றி அவர் தெரிந்து கொண்டார். பிறகு கீழே தரையில் விரிக்கப் பட்டிருந்த ஜமக்காளத்தை ஊன்றி நோக்கினர். அவர் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து அறையின் வாயிற்படி வரையிலும் இரத்தம் வழியெல்லாம் சிந்தி உறைந்து போயிருந்ததையுங் கண்டார். நாற்காலியில் உட்கார்ந்திருந்த யாரோ ஒருவரைத் திடீரென்று அடித்துத் தள்ளியோ, அல்லது குத்தியோ, வெளியே இழுத்துக்கொண்டு போயிருக்கிருர்களென்றும், அவ்விதம் போனபோதே இரத்தம் வழியில் சிந்தியிருக்கிற தென்றும் வைத்தியர் யூகித்தார். வாஸ்தவத்திலேயே அந்த ஏகாந்தமான மாளிகையானது அநேக ஆச்சரியங்க ளடங்கிய ஒரு ஸ்தலமாகவே நரேந்திரருக்குத் தோன்றிற்று. தரையில் ஏதோ ஒரு வெண்மையான வஸ்து கிடந்தது. அதை நரேந்திரர் எடுத்துப் பார்க்கவே, அது ஒரு பெண்மணியின் — கைக்குட்டையாக இருந்தது. தேவகியினுடையதாகவே, தமக்குத் தோன்றிய நிச்சயத்தினல், அது இருக்கவேண்டுமென்று நினைத்தார். இவ்விதமாக நரேந்திரர் அந்த அறைமுழுதும் நன்ருகச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்தபோது, மெதுவாக வாய்க்குள் யாரோ ஒருவர் பேசிக்கொண்ட சத்தம் அவருடைய காதில் விழுந்தது. அறைக்குள் யாரோ ஒருவர் இருந்து பேசுவதுபோல் அவ்வளவு சமீபத்திலிருந்து அந்தச் சத்தம் வருவதாக வைத்தியருக்குத் தோன்றிற்று. சிறிது நேரத்திற் கெல்லாம் அந்தச் சத்தம் நன்ருயும் தெளிவாயும் வைத்தியருடைய காதில் விழுந்தது. அந்தச் சத்தம் பின்வருமாறு:—

"ஆனல் இரகசியத்தை வெளியிடக் கூடாது — ஞாபகத்தி லிருக்கட்டும்! எவ்வளவு கெடுதல் உண்டா வதா யிருந்தபோதிலுஞ் சரியே, — இரகசியம் காப் பாற்றப்பட வேண்டும்!"

இந்த வார்த்தைகள் நரேந்திரர் காதில் வெண்கல மணி யோசையைப்போல் தெளிவாய் விழுந்தன. அவர் திகைத்து அசையாது நின்ருர். அறையின் நாலாபக்கத்தையும் சுற்றிப் பார்த்தார். ஒருவரும் அவருடைய கண்ணுக்குத் தென்படவில்லை. இந் தச் சத்தம் எங்கிருந்து வந்ததென்று அவருக்குப் புலப்படவில்லை. ஒருவிதமான அச்சத்தால் மூளை கலங்கித் தலை சுழல்வதுபோல் அவருக்குத் தோன் றிற்று. கதவோ சாத்தப்பட்டிருக்கிறது. "இந்தச் சத்தம் ஆச்சரியத்தை அதிகப்படுத்துகிறது" என்று நரேந்திரர் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டு மறு படியும் அறையைச் சுற்றிப்பார்க்க ஆரம்பித்தார்.

மறுபடியும் யாரோ கதவைத் திறந்த சத்தங் கேட்டது. நரேந்திரர் திரும்பிப் பார்த்தார். கத வைத் திறந்துகொண்டு தேவகி உள்ளே வந்தாள். அவளுடைய முகம் சிவந்திருந்தது.

"வைத்தியரே! மதிவதனனுக்கு உடம்பு எவ் வித மிருக்கிறதென்று பார்த்துவருவதற்காக நான் போயிருந்தேன்" என்று கூறினள் தேவகி.

"கூடிய சீக்கிரத்தில் அவருக்குப் பிரக்ஞை வந்து விடும். நான் முதலில் உத்தேசித்ததுபோல் அவ்வ ளவு பலமாக அவருடைய காயங்கள் இல்லை", என்று நரேந்திரர் சொன்னர்.

"அவருக்கு இந்தக் கிராமத்தில் சரியான ஆகாரமும் போஷணையும் கிடைப்பது சாத்தியமாகாத விஷயம். ஆதலால் கூடிய சீக்கிரத்தில் அவரை இந்த இடத்திலிருந்து அப்புறப் படுத்திவிட வேண்டுமென நினைக்கிறேன். சென்னை நகரில் வசித்தல் அவருக்குச் சௌகரியமாயிருக்கும். ஏனெனில், அங்கே பலவிதமான சௌகரியங்களுண்டு, தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று தேவகி அவரை ஆலோசனை கேட்டாள்.

"கூடாது! இப்போது அவரைப் படுக்கையை விட்டு அசையும்படிச் செய்தால் ஆபத்து உண்டாகும். அவரை, உடம்பு சிறிது சௌக்கியப்பட்டபின்னர், மாடிக்குக் கொண்டு போகலாம்" என்று நரேந்திரர் சொன்னார்.

"மாடியா!" என்று அந்தப் பெண் ஆச்சரியத்தோடும் பயத்தோடும் கேட்டுவிட்டு, "அங்கேயே எவ்வளவு காலம் இருக்கும்படி நேரிடும்?" என்று வைத்தியரை வினவினாள்.

"ஏன்? குறைந்தது இரண்டு வாரங்கட்கு அவர் படுக்கையை விட்டு எழுந்திருக்கவே கூடாது! மாடியின்மீது, நல்லகாற்று வரக்கூடிய இடத்தில், அவருக்குப் படுக்கை ஏற்படுத்துங்கள்!" என்று மறுபடியும் நரேந்திரர் கூறினார்.

"இப்போதே அவரை இந்த வீட்டிலிருந்து அப்புறப் படுத்திவிட்டால் என்ன? சென்னையிலிருந்தால் பலவித சௌகரியங்களுண்டு!" என்று தேவகி மீண்டும் நவின்றாள்.

"கூடவே கூடாது! அவருடைய சரீரம் இப்போ திருக்கின்ற நிலைமையில் சிறிதேனும் அசையுமானால் அவருடைய உயிருக்கே ஆபத்து உண்டாகும்! அவ்வளவு கெடுதலாயும், பலவீனமாயும் அவருடைய சரீரநிலைமை இருக்கிறது!" என்று மறுபடியும் வைத்தியர் வற்புறுத்திக் கூறினார்.

நரேந்திரர் இங்ஙனம் வற்புறுத்திச் சொன்னதற்குக் காரணம், அந்தப் பெண் மூலமாக உண்மையைத் தெரிந்துகொள்ளவேண்டு மென்னும் ஆசையேயாம்.

ஏனெனில், அவளோ ரத்தக்கறையை மறைப்பதற்காகக் கந்தன் சாராயத்தை ஊற்றிவிட்டானென்று பொய் சொல்லி நரேந்திரனை ஏமாற்றப் பார்த்தாள். நரேந்திரனுக்கோ அந்தப் பெண் பொய் புகல்வதில் கொஞ்சமும் இஷ்டமில்லை. அழகிற் சிறந்த அந்தப் பெண், தன்னைச் சந்தோஷப்படுத்துவதற்காகவே பூலோகத்தில் அவதரித் திருக்கிறா ளென்றும், அவளுடைய உருவத்தைக் கண்ணால் கண்டு களிப்பது மட்டும் போதாது; மனத்திலேயும் அழகொழுக எழுதிப் பார்த்து ஆனந்திக்க வேண்டுமென்றும் நினைத்திருக்கும் நரேந்திரருக்கு, அவள் பொய் சொன்னால், வருத்தமும் கோபமும் உண்டாகாவா? மேலும், தேவகியைப்போன்ற அந்தஸ்தும், கௌரவமுமுடைய பெண்கள் பொய் சொல்லி ஏமாற்றப் பார்ப்பது சிறிதும் தகுதியன்று என்பது வைத்தியருடைய கொள்கை. அவள் பேசும்போது அவளுடைய அங்க அமைப்புகளால் செய்யப்படும் சைகைகளும், உண்டாகும் குயிலினு மினிய இனிய குரலும், அவளுடைய கண்களில் உண்டாகும் பிரகாசமும், முகத்தி லுண்டாகும் புன்சிரிப்பும், நரேந்திரர் தன்னை மறந்

தாலும் அவளை மறக்க முடியாதபடி, அவரைச் செய்து விட்டன. அவளுடைய கண்களின் பார்வை உலகப்பற்றை அடியோடு ஒழித்த யோகிகளின் மூளையைக் கலங்கச் செய்யும்! தபோதனர்களின் தலையைக் கிறுகிறு வென்று சுழலச் செய்யும்! முனிவர்களின் அறிவை மயங்கச் செய்யும்! இருடிகளின் மனத்தைக் குலையச் செய்யும் அத்தகைய பார்வை கேவலம் யௌவன புருஷனான நரேந்திரனை என்னதான் செய்யாது? அன்பும் கருணையும், காதலும் அழகும், அவளுடைய கண்களில் குடியிருக்கின்றன என்றே நரேந்திரர் நினைத்தார். ஆனாலும் ஸ்திரீகளுக்கு இயற்கையாயுள்ள குறும்புத்தனம் அந்தக் கண்களில் இடை யிடையே தோன்றுகிற தென்பதையும் அவர் அறியாதிருக்கவில்லை. "நரேந்திரர், நோயாளியாகிய மதிவதனனை இப்போது அப்புறப் படுத்தக் கூடாதென்று சொல்லிவிட்டாரே! என்ன செய்கிறது?" என்று கவலை கொண்டவளைப்போல் தேவகி ஒரு நாற்காலியில் அசைவற்று உட்கார்ந்து விட்டாள். நரேந்திரரோ, தேவகியின் அழகில் மயங்கித் தன்னையும் மறந்து, வேறொரு நாற்காலியில் சாய்ந்துவிட்டார். சுமார் கால்மணி நேரம் வரையில் ஒருவரோடொருவர் பேசவில்லை. இருவரும் மௌனம் சாதித்தார்கள். கடைசியில் தேவகியின் வாய் மெதுவாகத் திறக்கப்பட்டது.

"இங்கு நடந்த சம்பவங்களை அதிரகசியமாய் வைத்துக்கொள்ளுவதாயும், ஒருவரிடமும் அவற்றை வெளியிடுவதில்லை யென்பதாயும் முதலில், நரேந்திரரே, எனக்குச் சத்தியம் செய்துகொடும். இந்த விஷயங்கள் உமக்கு மிகுந்த ஆச்சரியத்தையும் வியப்பை

யும் உண்டாக்கு மென்பதை நான் அறிந்தே இருக்கின்றேன். ஆனாலும் என்ன செய்யலாம்? இச்சமயத்தில் நான் ஒன்றும் வாய்திறந்து சொல்லக் கூடாதவளாக விருக்கின்றேன். ஒரு பெரிய ராச்சியம் பயங்கரமான அபாய நிலைமையி லிருக்கிற தென்றும், நானும் இச்சமயம் ஒன்றும் சொல்லாமல் நீரும் இரகசியங்களை வெளியிடாமல் இருந்தால் அந்த அபாயத்தை அநேகமாய் நீக்கலா மென்றும், இதற்கு மாறாக நடந்தால் அபாயம் கட்டாயம் சம்பவிக்கு மென்றும் குறிப்பாக உமக்கு நான் இப்போது சொல்லுகிறேன். இதற்குமேல் ஒன்றும் என்னால் தற்சமயம் சொல்லமுடியாது. நான் சொன்னதைக் கொண்டு நீர் திருப்தி யடைய வேண்டியதுதான்" என்று தேவகி மிகுந்த பரிதாபத்துடன் நரேந்திரருக்குச் சொன்னாள்.

நரேந்திரருக்கு ஒன்றும் தோன்றவில்லை. சந்தேகத்தின்மேல் சந்தேகம் அவருக்கு உண்டாயிற்று. பலத்த காயங்களுக்கு ஆளாயின மனிதனுக்கும் இந்தப் பெண்ணுக்கும் என்ன சம்பந்தம் இருக்கக் கூடு மென்று யோசித்தார். அவன் ஒருசமயம் இவளுடைய காதலனாக இருக்கக்கூடுமோவென்று சந்தேகித்தார். தன்னுடைய வீட்டில் வந்து சிகிச்சை செய்துகொண்டு தனக்கு ஆயிரம் பொன் கொடுத்துச் சென்ற மனிதனுடைய ஞாபகம் அவருக்கு உடனே வந்தது.

"ஒரு பெண்மணியின் மானமும் கௌரவமும் ஒரு மனிதனுடைய கையில் இருக்கின்றன. அவைகளைக் காப்பாற்ற வேண்டியது அவனுடைய கடமையாக விருக்கிறது" என்று அந்த மனிதன் சொன்

னது, நரேந்திரருடைய காதில் இப்பொழுதும் விழுந் துகொண்டிருப்பதைப் போல் அவருக்குத் தோன் றிற்று. அந்தப் பெண் ஒருகால் தேவகிதானே வென்று நரேந்திரர் சந்தேகித்தார். ஆனாலும், ஒரு விதமான நிச்சயத்துக்குவர அவரால் முடியவில்லை. தன்னையும் மறந்து ஆழ்ந்த யோசனையில் அவர் ஆழ்ந் திருந்தார்.

“வைத்தியரே! நான் சொன்ன விஷயங்களுக்கு ஒன்றும் பதில் சொல்லவில்லையே?” என்று மறுபடி யும் தேவகி வினவினாள்.

“இரகசியம் வெளிவந்துவிடு மென்கிற அச்சம் உனக்குக் கிடையாதல்லவா? நான்தான் உன்னுடைய விருப்பப்படியே ரகசியத்தை வெளியிடுகிறதில்லை யென்று சத்தியம் செய்து கொடுத்துவிடுகிறேன். என்னையன்றி மற்றவர்களால் வெளிப்பட்டுவிட்டால் என்ன செய்கிறது?” என்று நரேந்திரர் கேட்டார்.

“மற்றவர்கள் யார்?” என்று தேவகி வினவி னாள்.

“என்னிடம் சிகிச்சை செய்துகொண்டு போன ஞனே? அந்த மனிதனால் வெளிபட்டுவிட்டால்—?” என்று வைத்தியர் விடை இறுத்தார்.

தேவகியினுடைய புருவங்கள் சுருங்கியதையும், அவளுடைய கண்கள் பாதி மூடப்பட்டுக் கருவிழிகள் மேலே சென்றதையும், நெற்றியில் பல மடிப்புக்கள் விழுந்ததையும் கண்ட நரேந்திரர், அவள் இவ்விஷய மாகவே ஆழ்ந்து ஆலோசனை செய்கிறாள் என்றும், இதற்குமுன் இந்த விஷயம் அவளுடைய மனத்திற் படவில்லை யென்றும் அறிந்துகொண்டார்.

சிறிதுநேரம் பேசாமலிருந்துவிட்டு, அப்போது தான் தேவகி நித்திரையிலிருந்து விழித்தவள்போல் "வைத்தியரே! நீர் சொல்லுவதும் அவசியம் ஆலோசிக்கப்படவேண்டிய விஷயந்தான். அந்த மனிதன், மதிவதனனுக்கு எப்படிக் கெடுதல் செய்துவிட்டு ஓடிவிட்டானே அப்படியே, எனக்கும் ஏதாவது இன்னல் விளைவிக்க முற்படுவான். ஆனாலும் என் அழிவைக் கருதி அவன் ஒரு வார்த்தை சொன்னாலும், தன்னுடைய உயிர் நிலைக்காது என்கிற பயம் அவனுக்கு இல்லாமல் இல்லை" என்று சொன்னாள்.

"அவன் மன்னார்குடியில்தானே வசிக்கிறான்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"சில சமயங்களில் மன்னார்குடியில் வசிக்கிறான். ஆனால், பெரும்பாலும் வெளியூர்களிலேயே சுற்றுப் பிரயாணஞ் செய்துகொண்டிருக்கிறான்" என தேவகி விடையளித்தாள்.

"என்னிடம் சிகிச்சை செய்துகொள்ள வந்த போது அவன் ஒரு உயர்ந்த குதிரைவண்டியிலன்றோ வந்தான்? ஒருசமயம் அந்த மனிதன் மன்னார்குடிக்கே சென்றிருத்தல் கூடுமோ?" என்று வைத்தியர் அவளை உசாவினார்.

"நிச்சயமாக எவ்விதம் சொல்லமுடியும்? ஒரு சமயம் அங்கே போயிருந்தாலு மிருக்கலாம். அல்லது வேறு எந்த இடத்துக்குப் போனானோ?" என்றாள் தேவகி.

"ஆம்; நாம் நிச்சயமாக என்ன காரணத்தைக் கொண்டு சொல்லுகிறது?" என்று வைத்தியரும் ஒத்து ஊதினார்.

"அதிருக்கட்டும்; நரேந்திரரே! நான் சொல்லு வது உமக்கு ஆச்சரியமா யிருக்கலாம். ஆனாலும் சொல்லுகிறேன். என்னுடைய நிலைமையே மிகுந்த அபாயத்துக்கு இடமாயிருக்கிறது" என்று அந்தப் பெண் சொன்னாள்.

"சரிதான், எனக்குத் தெரிகிறது! அந்த அறை யில் படுத்திருக்கும் நோயாளி உனக்கு எந்த வகையில் பாத்தியப்பட்டவர்? உன்னுடைய — காதலனோ?" என்று வைத்தியர் கேட்டார்.

"என்னுடைய காதலனா—? பேஷ்! என்ன புத்தி சாலித்தனமான கேள்வி கேட்கிறீர்! ஓ! அப்படிப் பட்ட சந்தேகமா இருக்கிறது? அவருக்குப் பிரக்ஞை வந்தபிறகு அவரையே கேட்டுத் தெரிந்துகொள் ளும்" என்று பதிலுரைத்தாள்.

"பெண்ணே! நீ என்னிடம் ஒளிமறைவின்றிப் பேசியபடியால் நானும் வெளிப்படையாகவே உன் னிடம் பேசுகிறேன். இந்த மேசை விரிப்பின் ஒரு மூலையில் இருக்கும் இரத்தக் கறை எப்படி வந்தது என்று எனக்குச் சொல்லக்கூடுமோ?" என்று நரேந் திரர் அவளைக் கேட்டு அந்தக் கறையையும் கையால் சுட்டிக் காட்டினார்.

தேவகி மிரள மிரள விழித்துப் பார்த்தாள். அவளுடைய முகம் வெளுத்தது.

"கந்தன் சாராயத்தை ஊற்றிவிட்டான் என்றும் அந்தக் கறைதான் அது என்றும் அப்போதே சொன் னேனே?" என்று சொல்லிக்கொண்டே தேவகி ஒரு பாத்திரத்தில் மேசையிலிருந்த சாராயத்தில் கொஞ் சம் ஊற்றி அவருக்குக் குடிக்கக் கொடுத்தாள். நரே

ந்திரர் சாராயம் குடிக்கும் வழக்க மில்லையாயினும் தேவகி கொடுத்ததை வேண்டாமென்று சொல்லக் கூடாதென நினைத்து அதைச் சாப்பிட்டார்.

"வைத்தியரே! இங்கேயே இருங்கள்! நான் போய் மதிவதனனுக்கு உடம்பு எப்படி யிருக்கிற தென்று பார்த்து வருகிறேன்" என்று தேவகி சொல்லி வெளியே சென்றாள்.

தான் உட்கார்ந்திருக்கும் அறை அந்தரத்தில் சுழல்வதுபோல் நரேந்திரருக்குத் தோன்றிற்று. அவருடைய கண் கிறு கிறுவென்று சுழல்வதுபோலவும், தலை சுற்றுவதுபோலவும் அவருக்குப் புலப்பட்டது. பேசுவதற்குப் பிரயத்தனப்பட்டார், ஆனால் பேச முடியவில்லை. அவருடைய உணர்வு அவருக்கு இல்லை. ஆனாலும், அந்த அறையில் நடக்கும் விஷயங்கள் அவருடைய கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலும் புலப்பட்டன. சிறிதுநேரம் கழிக்கவே அவருடைய பிரக்ஞை தவறிப்போய்விட்டது. என்ன நடந்த தென்றும் என்ன நடக்கிறதென்றும் அவருக்குத் தெரியவே இல்லை. நெடுநேரம் வரையில் தான் சித்த சுவாதீனமில்லாமல் இருந்ததாகமட்டும், அவர் பிறகு உணர்ந்தார். ஆனால் சில விஷயங்கள் அவருக்கு அள வற்ற பயத்தை விளைவித்துவிட்டன.



## 4. இன்னுஞ் சில நூதனங்கள்



அந்தச் சமயத்தில் நரேந்திரர் பட்ட கஷ்டத்தையும், அடைந்த பயத்தையும் அவர் பிறகு மறக்கவே இல்லை. அவைகளை இங்கு விஸ்தரிக்கவும் முடியாது. இதை

வாசிக்கும் நண்பர்கள் தாங்களே ஆலோசனை செய்து பார்த்துக்கொள்ள வேண்டியதுதான்.

பழுக்கக் காய்ச்சிய இருப்புக்கோலை கண்களில் செருகினால் எவ்வித மிருக்குமோ அவ்விதம் அவருடைய கண்கள் இருந்தன. அவருடைய புருவங்கள் இருப்புச்சங்கிலியால் கட்டப்பட்டிருந்தன வென்று அவர் நினைத்தார். அவருடைய தொண்டை சுருங்கிக் கட்டிக்கொண்டது. அவரால் பேச முடியவில்லை. கண்ணைத் திறந்து பார்த்தார். இரத்தம்போல் சிவந்திருந்த ஒருவகைத் தோற்றம், அவருடைய கண்ணொளியைப் பார்க்க முடியாதபடி மறைத்திருப்பது போல் அவருக்குப் புலப்பட்டது. அவருடைய சரீரத்தில் ஒருவகையான வலி உண்டாயிற்று. நரேந்திரருக்குச் சுய அறிவு இச்சமயம் இல்லாவிட்டாலும் அவர், தம்முடைய சித்த சுவாதீனத்தை அடியோடு இழந்து, பிரக்ஞையற்றுக் கிடக்கவில்லை. நடந்த விஷயங்களை ஆதியிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாகத் தம்முடைய ஞாபகத்துக்குக் கொண்டுவந்து பார்த்தார். ஆனாலும், சரியானபடி ஒன்றும் அவருடைய ஞாபகத்துக்கு வரவில்லை. ஏனெனில் மிகவும் சாமர்த்தியமாய் அவருக்குக் கொடுக்கப்பட்ட மயக்க மருந்தானது, அவருடைய மூளையைக் கலங்கச் செய்து விட்டது. சென்ற காலத்தில் நடந்த விஷயங்களை ஞாபகத்துக்குக் கொண்டுவரவாவது, நிகழ்காலத்தில் நடக்கிற விஷயங்களை அறிந்துகொள்ளவாவது அவர் முற்றும் அசக்தராக இருந்தார். ஆனாலும் சிறிது நேரங் கழிக்கவே, அவர் மறுபடியும் சித்த சுவாதீனத்தைக் கொஞ்சங் கொஞ்சமாய் அடைந்தார். நல்ல பிரக்ஞையும் சுய அறிவும் அவருக்கு உண்டாயின.

சரியான பிரக்ஞை வந்தபிறகு, என்னென்ன விஷயங்கள் நடந்தனவென்று ஞாபகப்படுத்தியும், என்னென்ன விஷயங்கள் நடந்திருக்கக்கூடுமென்று யூகஞ்செய்தும், நரேந்திரர் பார்த்தார். சுமார் இரண்டுமணி நேரம் வரையில் தாம் சித்த சுவாதீன மிழந்து கிடந்ததாக அவருக்குத் தோன்றிற்று. ஜன்னல்கள் மூடப்பட் டிருந்தபோதிலும், உள்ளே எரிந்துகொண் டிருந்த விளக்கு வெளிச்சம் ஜன்னல்களின் இடுக்குவழியாக நன்றாய்த் தெரிவதை நரேந்திரர் கண்டார். ஆனாலும் இச்சமயம் அவர் எந்த இடத்தில் இருக்கிறார் என்பதை அறிந்துகொள்ள அவரால் முடியவில்லை. தான் அந்த அறைக்குள் நிச்சயமாக இல்லையென்பதையும், பூமிக்குக் கீழே ஒரு கற்பாறையில் தான் விழுந்து கிடப்பதையும் அவர் அறிந்துகொண்டார். தாம் இருக்கும் இடத்தையும், அதைச் சுற்றியுள்ள வஸ்துக்களையும் ஒரு முறை இருந்த இடத்திலிருந்தே சுற்றிப்பார்த்தார். தேவகி அழைத்துக்கொண்டு வந்த வீட்டில் தான் இல்லையென்பதையும், தான் இருக்கிற இடம் பயங்கரமான ஒரு சுரங்க மென்பதையும், நரேந்திரர் அறிந்துகொண்டார். அச்சமயம் அவருக்குண்டான பயத்தை யாரே கூறவல்லார்? தாம் இருக்கும் இடத்தை நோக்கவே அவருக்குப் பயமும், தாம் இருக்கும் நிலைமையை நோக்கவே அவருக்கு ஆச்சரியமும் மாறி மாறி உண்டாயின. முறையே அழுவதும், சிரிப்பதுமாகச் சிறிதுநேரம் இருந்தார்.

பிறகு ஒருவாறு நரேந்திரர் தன்னைத்தானே தைரியப் படுத்திக்கொண்டு மெதுவாக எழுந்து, மங்கலான விளக்கு வெளிச்சம் வந்த வழியே சென்றார்.

ஒரே இருளாயிருந்ததால் எதிரில் தென்படும் வஸ்துக்களைக் கையால் தடவித் தடவிப் பார்த்துக்கொண்டே போனார். ஒரு பெரிய ஜன்னல் சாத்தப்பட்டிருப்பதுபோல் அவருடைய கைக்குத் தோன்றிற்று. மெதுவாக அதைத் தடவிப்பார்த்தார். ஒரு பெரிய இரும்புச் சட்டம்போட்டு அந்த ஜன்னல் சாத்தப்பட்டிருக்கிறது என்பதை அறிந்துகொண்டார். தன் பலமெல்லாம் செலுத்தி அவர் அந்தச் சட்டத்தைத் தூக்கிக் கீழே வைத்துவிட்டு ஜன்னலைத் திறந்தார். தண்மதியின் வெண்கதிர்கள் ஜன்னல் வழியாகச் சுரங்கத்துள் பாய்ந்தமையால் அங்குள்ள அதிசயங்களை, நிலவொளியால், நன்றாய்ப் பார்வையிடலா மென்னும் சந்தோஷம் அவருக்கு உண்டாயிற்று. மேலும், ஜன்னல் வழியாய்க் குளிர்ந்தகாற்று உட்புகுந் தியங்கியதால் அவருக்கு ஒருவிதமான ஆறுதல் ஏற்பட்டது. அச்சுரங்கம் இயற்கையாயுள்ள தன்றென்பதையும், ஏதோ காரணத்தை முன்னிட்டுச் சிலர் அச்சுரங்கத்தை ஏற்படுத்தியிருக்கிறார்களென்பதையும் நரேந்திரர் தெரிந்துகொண்டார். உடனே, சுரங்கத்தைச் சுற்றிபார்க்க அவர் ஆரம்பித்தார்.

சுரங்கத்தைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வந்த போது, அவர் ஒரு மூலையில் அதிசயக்காட்சி ஒன்றைக் கண்டார். அப்போது அவருக்கு உண்டான ஆச்சரியத்துக்கு அளவே இல்லை. அவர் அசையாமல் சிறிது நேரம் பிரமித்து நின்றார். அநேகஞ் சிறு யந்திரங்களும் ஒரு பெரிய யந்திரமும் அந்த இடத்திற் காணப்பட்டன. நரேந்திரருக்கு ஆச்சரியத்தை விளைவித்தன அவைகளேயாம். ஒரு பெரிய வண்டிஉருளைபோன்ற இரும்புச் சக்கர மொன்று, சுமார் அரையடி சுற்றள

வுள்ள பருத்த இரும்புக் கம்பியில் கோக்கப்பட்டிருந்தது. கம்பியின் இரண்டு நுனிகளும் இரண்டு பக்கத்துச் சுவர்க்குள் புதைக்கப்பட்டு இருந்தன. சிறு பற்கள் பல உடைய சிறு சக்கரங்கள் பல அந்தப் பெரிய சக்கரத்தோடு இணைக்கப்பட்டிருந்தன. ஒரு யந்திர சாலையாக, அந்த இடம் இருக்குமோ என்று, நரேந்திரர், நினைத்தார். இரும்பு உருளைகள் பல, பெரிய பட்டைவார்களினால், அவ்விரும்புக் கம்பியுடன் சம்பந்தப்படுத்தப்பட் டிருந்தன. பெரிய யந்திரம் வேலை செய்வதற்காக, நீராவி தயார்ப்படுத்துவதற்கேற்ற, ஒரு பெரிய இரும்புத்தொட்டி அதைச் சேர்ந்தாற்போ லிருந்தது. இவைகளையெல்லாம் பார்த்தவுடன் அந்த இடம் ஒரு பெரிய யந்திரசாலையாகவே இருத்தல்வேண்டுமென்று நரேந்திரர் உறுதி செய்துவிட்டார். அந்த அற்புதமான காட்சிகளை யெல்லாம் பார்த்துக்கொண்டே அவர் அச்சுரங்கத்தைச் சுற்றி வந்தார். ஒரு இரும்புத்தடி தனியாய் ஒரு மூலையில் கிடந்தது. அதைத் தன்னுடைய கையில் எடுத்துக் கொண்டார். யாராவது திடீரென்று தன்னை வந்து எதிர்த்தால், அவர்களை அடித்து விரட்டுதற்கும், தன்னைக் காப்பாற்றிக்கொள்ளுதற்கும், சாதகமாக அந்த இருப்புக்கோல் உதவுமென்று நினைத்து அவர் அதைத் தம் கையில் எடுத்துக்கொண்டாரே தவிர வேறில்லை. அதைக் கையில் எடுத்துக்கொண்டு இன்னும் சிறிது தூரம் செல்லவே, ஒரு பெரிய கதவு வெளிப்பக்கத்தில் பூட்டப்பட்டிருப்பதைக் கண்டார். அந்த இரும்புத் தடியின் உதவியால் பூட்டை உடைத்துக் கதவைத் திறந்தார். கதவின் வெளிப்புறம் இரும்புத் தகடு வைத்து மூடுக்கப்பட் டிருந்தது. கதவு திறக்கப்பட்டவுடன் ஒரு சிறு அறை யிருப்பதுபோல் நரேந்திரருக்

குத் தோன்றிற்று. உடனே உள்ளே நுழைந்து பார்க்கவே சுற்றிச்சுற்றிச் செல்லும் படிகள் பல இருப்பதாக அவருக்குப் புலப்பட்டது. உள்ளே ஒரே இருளா யிருந்தபடியால் அந்தப் படிகள் எங்கே கொண்டுபோய் விடுமென அவருக்கு நிச்சயமாய்த் தெரியவில்லை. ஆனாலும், காலைத் தட்டித்தட்டி வைத்துப் பார்த்துக்கொண்டே அந்தப் படிகளில் ஏறி அவைகள் செல்லும்வழியே சென்றார். கடைசியாக ஒரு பெரிய மாடிமீது அவர் வந்து சேர்ந்தார். அந்த மாடியில் விளக்கு எரிந்துகொண் டிருந்தபடியால், அங்குள்ள அதிசயங்களை நன்றாய்ப் பார்த்துக்கொண்டார், மாடியிலிருந்து கீழே போவதற்கு வேறோர் பக்கத்திலும் படிகள் வைத்துக் கட்டப்பட்டிருந்தன. அந்தப் படிகளின் வழியாய்க் கீழே வந்தார். கீழே வந்ததும், சுற்றிப்பார்த்தார். தான் ஒரு பெரிய தோட்டத்தின் மத்தியில் நிற்பதைக் கண்டவுடன் அவருக்குண்டான ஆச்சரியத்துக்கு எல்லையில்லை. தான் இறங்கிவந்த படியைச் சேர்ந்தாப்போல் ஒரு சுவர் விழுந்துகிடப்பதையும், அதனருகே அநேக இயந்திரங்கள் உடைந்து கிடப்பதையும் பார்த்தவுடன் அவருடைய ஆச்சரியம் இன்னும் அதிகமாயிற்று. பெரிய வெடி விபத்து உண்டானதினலேயே இச்சம்பவங்கள் நேரிட்டன என்று நினைத்தார். இவை யெல்லாம் புதுமையாகவும் நூதனமாகவும் நரேந்திரருக்குத் தோன்றின. இன்னுஞ் சில நூதனங்கள் காணப்பட்டாலும் படலாம் என்று நினைத்து அந்தச் சுவரின் மற்றப் பாகங்களையும் பரிசீலனை செய்து பார்த்துக்கொண்டே அவர் சென்றார்.

இப்படியாகச் செல்லும்போது ஒரு கண்ணாடி ஜன்னல் அவர் கண்ணுக்குத் தென்பட்டது. அவ்வி

டத்திற் சென்று, அந்த ஜன்னலைக் கூர்ந்து கவனித்தார். அதனுடைய கண்ணாடிகள் துகள் துகளாய்ச் சிதறிக் கீழே விழுந்து கிடப்பதையும், ஜன்னல் அடியோடு பிடுங்கப்பட்டிருப்பதையும், அந்த இடத்தைச் சுற்றிலும் கரி அடைந்திருப்பதையும், உட்பக்கத்தில் ஒரு சிறு திரை தொங்கவிடப்பட் டிருப்பதையும் நரேந்திரர் பார்த்தார். ஒரு பெரிய வெடிவிபத்து நேரிட்டிருக்கிறதென்றும், அவ்வெடியினாலேயே ஜன்னல் பிடுங்கிக்கொண்டதென்றும் வைத்தியருக்குத் தோன்றிற்று. உடனே உள் நுழைந்து பார்க்க வேண்டுமென்னும் ஆசை அவருக்குக் காரணமின்றியே உண்டாயிற்று. அந்த ஜன்னல்பக்கமாகவே ஏறி அவர் அத்திரையை நீக்கிக்கொண்டு உள்ளே குதித்தார். தாம் ஒரு அறைக்குள் நிற்பதைக் கண்டார்.

ஆ! நரேந்திரருக்கு அப்போது உண்டான ஆச்சரியத்தை வர்ணிப்பது யாங்ஙனம்? எந்த மனிதனுக்கு சிகிச்சை செய்யவேண்டுமென தேவகி அவரை அழைத்து வந்தாளோ, அந்த மனிதன் படுத்திருந்த அறையினில் தாம் நிற்பதைக் கண்டவுடன் நரேந்திரருக்கு ஆச்சரியம் உண்டாகாதா? அந்தரத்தில் அம்மனைகள் சுழல்வதுபோல், அவருடைய தலை சுற்ற ஆரம்பித்தது. அவருடைய மூளை கலங்கிவிட்டது. சிறிது நேரம் தன்னையே மறந்து அவர் நின்றார். சுரங்கத்திற் கண்ட காட்சிகளையும், வெளியே நேர்ந்த வெடிவிபத்தையும் நினைத்துப் பார்த்தார். வெடி விபத்து தற்செயலாக உண்டானதன்றென்றும், யாரோ விரோதத்தின்மேல் சிலரைப் பழிவாங்கும் பொருட்டு வேண்டுமென்றே வெடி விபத்து உண்டாகும்படி

செய்திருக்கிறார்க ளென்றும் நரேந்திரர் கருதினார். அவ்விதம் கருதுவதற்குப் பல நிச்சயமான காரணங்கள் அவருக்குப் புலப்பட்டன. இன்னொரு விஷயம் அவருடைய ஆச்சரியத்தை இன்னும் அதிகப்படுத்திற்று. அதாவது, தாம் சிகிச்சை செய்த மதிவதனன் அவ்வறையில் காணப்படாமையே. அறை முழுவதும் சுற்றிப் பார்த்தார்; நோயாளியைக் காணவில்லை. அவர், அவரை அப்புறப்படுத்திவிட்டார்களென்று, தெரிந்துகொண்டார். அந்த அறையைவிட்டுத் தாம் முதலில் உட்கார்ந்து பழங்கள் சாப்பிட்டுக்கொண் டிருந்த அறைக்குச் சென்றார். அங்கேயும், அவர் நினைத்தபடியே, ஒருவரும் காணப்படவில்லை. மேசையும், நாற்காலிகளும் கிடந்தன. சாராயம் ஊற்றிவிட்டதால் ஏற்பட்ட கறையென்று தேவகி சொல்லி அவரை ஏமாற்றப் பார்த்த மேஜை விரிப்பும், இரத்தக் கறையுடன் மேஜையில் விரிக்கப்பட்டபடியே, இருந்தது. தாம் முதலில் பார்த்த போது இருந்த சாமான்கள் எல்லாம் அப்படியே கிடக்கின்றனவென்றே நரேந்திரர் நினைத்தார். வீட்டின் மாடிமேற் போய்ப் பார்க்கவேண்டு மென்னும் பேரவாவுடன் அந்த அறையை விட்டு நீங்கினார். மாடிமேற் சென்ற நரேந்திரர், மாடியின் வடக்குக் கோடியில் உள்ள ஒரு அறைக்குள் நுழைந்தார். அவ்வறையில் உயர்ந்த கருங்காலி மரத்தினால் செய்யப்பட்டிருந்த கட்டில் ஒன்று கிடந்தது. அதனுடைய வேலைப்பாட்டையும், அதில் விரித்தபடியே கிடந்த வெல்வெட் மெத்தையையும், உயர்ந்த பட்டினால் அமைக்கப்பட்டிருந்த மேற் கட்டியையும் பார்த்த நரேந்திரர், அந்தப் படுக்கை ஒரு பெரிய சீமானுடைய அல்லது சீமாட்டியினுடைய படுக்கையாகவே

இருத்தல்வேண்டுமென்று ஊகித்தார். ஆனால், அது ஒரு சீமானுக்குச் சொந்தமானதா அல்லது சீமாட்டிக்குச் சொந்தமானதா என்பதைமட்டும் முதலில் நிச்சயமாய்த் தெரிந்துகொள்ள அவரால் முடியவில்லை. இரண்டுபேருக்கும் சொந்தமான தன்றென்பதுமட்டும் அவருக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. ஏனெனில், அந்தக் கட்டில் மிகவும் விலையுயர்ந்ததாயிருந்த போதிலும் ஒருவரே சயனிக்கக்கூடியதாய், சிறிதாயும் குறுகலாயும், இருந்தது. தமக்குண்டான சந்தேகத்தை நிவர்த்திசெய்துகொள்ளவேண்டும் என்னும் கருத்துடன் நரேந்திரர் அந்த அறையை நன்றாய்ப் பரிசீலனைசெய்ய ஆரம்பித்தார். ஒரு பெரிய தோம்புத் தட்டியில் ஒரு உயர்ந்த புடைவையும், அநேகம் பாவாடைகளும், பல ரவிக்கைகளும் கிடந்தன. அந்தத் தட்டி ஒரு மறைவான இடத்தில் இருந்ததால், முதலில் அவைகள் வைத்தியருடைய கண்ணுக்குப் புலப்படாமற்போயின. அந்தத் தட்டிக்குப் பின்புறத்தினில் ஒரு பெரிய பெட்டி இருந்தது. அதை நரேந்திரர் திறந்து பார்த்தார். அதனுள்ளும் ஸ்திரீகள் தரித்துக் கொள்ளக்கூடிய உயர்ந்த ஆடைகளே காணப்பட்டன. இவைகளையெல்லாம் கண்ட பிறகு, நரேந்திரருக்கு, அந்தப் படுக்கை அறை ஒரு பெண்மணிக்குச் சொந்தமானதென்பதும், அந்தப் பெண் விவாகமாகாதவளாகவோ, அல்லது விவாகமாகி யிருப்பினும் கணவனைப் பிரிந்திருப்பவளாகவோ இருத்தல்வேண்டு மென்பதும், கரதலாமலகம்போல் விளங்கிற்று. நரேந்திரர் அதிசயப்பட்டுக்கொண்டு அறையின் வேறொரு புறத்துக்குச் சென்றார். அங்கே சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு தலைப்பாகை மூலையில் ஒரு புடைவை சரிவர மடிக்கப்

படாமல் உதறியபடியே ஒழுங்கின்றி அவசரத்தில் அவிழ்த்துப் போடப்பட்டிருப்பதைப்போல் தொங்கிக்கொண் டிருந்தது. அதனைக் கண்டதும் நரேந்திரருக்கு உண்டான ஆச்சரியம் இவ்வள வென்று சொல்ல முடியாது. ஏனெனில், அந்தக் கட்டில் யாருக்குச் சொந்தம் என்பதை அப்புடைவைதான் அவருக்கு உள்ளபடியே விளக்கிற்று. தேவகி தன்னைக் கூப்பிட வந்தபோது எந்தப் புடைவையை உடுத்திக்கொண்டு வந்தாளோ, அவள் இவுளிமீதிவர்ந்து காற்றினுங்கடுகிச் சவாரி செய்துகொண்டு வந்தபோது எந்தப் புடைவை காற்றில் கொடியைப் போல், அசைந்துகொண் டிருந்ததோ, அந்தப் புடைவையாகவே அது இருந்தமையால், அந்தப் படுக்கை அறை தேவகிக்குச் சொந்தம் என்பதை அவர் நிச்சயமாய் அறிந்துகொண்டார்.

இவ்வறைக்கு நேர் முகமாகவே, மாடியின் தென்புறத்தில் வேறொரு அறை யிருந்தது. நரேந்திரர், அந்த அறைக்குள்ளும் நுழைந்து அங்கு என்ன அதிசயம் இருக்கிறதென்று அறிந்துகொள்ளவேண்டுமென்னும் நோக்கத்துடன் அதனுட் சென்றார். அந்த அறையில் வைத்தியருடைய கவனத்தை இழுக்கக் கூடிய புதுமைகள் அவ்வளவாய்க் காணப்படவில்லை. சாதாரணமான ஒரு படுக்கையும், கிழிந்து போன புடைவைகளும், பழைய சேலைகளும், சாதாரணமான இரண்டொரு வெள்ளை ரவிக்கைகளும் கிடந்தன. அவைகளைக்கொண்டு அவ்வறையும் ஒரு ஸ்திரீயினுடைய படுக்கை அறைதான் என்பதை அவர் தெரிந்துகொண்டார். அந்த அறையில் சயனிக்கும் ஸ்திரீ சாதாரணமான ஒரு வேலைக்காரி யாகவோ

அல்லது சேடியாகவோ இருக்கவேண்டு மென்பதை அந்த அறையிற் கிடந்த வஸ்திரங்கள் நரேந்திரருக்குக் குறிப்பித்தன. நரேந்திரர் இயற்கையிலேயே மிகுந்த நுட்ப அறிவு வாய்ந்தவராதலால், அந்த அறையில் கிடந்த ரவிக்கைகளைக்கொண்டே, அந்த அறைக்குரிய வேலைக்காரி தகுந்த யௌவன பருவமுடைய மங்கை யாக இருக்கவேண்டுமென்று ஒருவாறு தீர்மானித்துக் கொண்டார். ஆனாலும் அந்த மங்கை யாராயிருக்கக் கூடுமென்று அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஏனெனில், அவர் அந்த அதிசயமான வீட்டுக்குள் பிர வேசித்தது முதல், தேவகி என்பவளைப்பற்றி மட்டும் அங்கு இருந்த நோயாளியும், கந்தனும் பேசினார்களே ஒழிய வேறு பெண்ணைக் குறித்துப் பேசவே இல்லை. அவருக்கோ தேவகி ஒருத்தியைத்தான் தெரியும். தேவகியும் வேறு பெண் ஒருத்தியைப் பற்றிப் பேச வில்லை. இதனால் நரேந்திரருக்கு இந்த விஷயத்தை அறிந்துகொள்வதற்கு ஏதுவில்லாமற் போயிற்று. மறுபடியும் அவர் தேவகியின் படுக்கை அறைக்குட் சென்று அங்கு ஏதாவது கடிதங்கள், பத்திரங்கள், தஸ் தாவேஜிகள் இருக்கக்கூடுமோ என்று ஆராய்ந்து பார் த்தார், — ஒன்றும் அகப்படவில்லை. இருந்திருக்கக் கூடிய சிற்சில கடிதங்களும் கொளுத்தப்பட்டுக் கரியா ய்க் கிடந்தன. மாடி முழுவதையும் நன்றாய் மறுபடியும் சோதித்துப் பார்த்துவிட்டுக் கீழிறங்கிப் பின்புறத்தி லிருந்த சமையல் அறைக்குள் அவர் சென்றார். அங்கே தரையில் கிடந்த ஒரு வஸ்து அவர் கண்ணுக்குப் புலப் பட்டது. அதனைக் கையில் எடுத்துப் பார்க்கவே, ரத் தக்கறையுடைய ஒரு கைக்குட்டையாக அது இருந் தது. நரேந்திரர் திகிலடைந்து அதைக் கீழே பதறிக்

கொண்டே போட்டார். அதிலிருந்து ஒரு வஸ்து கீழே விழுந்தது. அதைக் கையில் எடுத்துப் பார்த்தார், — அது ஒரு அறுந்துபோன காது என்று கண்டார்.

ஆ! நரேந்திரருடைய உடல் நடுங்கிற்று. அவருடைய நெஞ்சம் படபடவென்று துடித்தது. அவருக்கு உண்டான பயத்தை இங்கே விஸ்தரித்தல் சாத்தியமாகாத விஷயம். அழகாயும் சிறிதாயும் இருந்த அந்தக் காதை அவர் பலமுறையும் திருப்பித்திருப்பிப் பார்த்தார். ஒரு பெண்மணியின் காது அது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அந்தச் செவியின் அழகிய அமைப்பைக்கொண்டும், மிகவும் சிறிய தோடு மட்டும் போடுவதற்காக அக்காதில் இருந்த ஒரு சிறு துவாரத்தைக் கொண்டும், அது சிறந்த அழகும், தகுந்த யௌவனமும், உயர்ந்த கல்வியும், முதிர்ந்த நாகரிகமும் வாய்ந்த ஒரு பெண்மணியின் காதாகவே இருக்கவேண்டும் என்று நரேந்திரர் நிச்சயித்தார். ஒரு மங்கை கொலை செய்யப்பட்டிருக்கிறாள் என்றும், அவளைக் கொலை செய்தவர்கள் அவளுடைய சரீரத்தை அடையாளங் கண்டுபிடிக்க முடியாதபடி துண்டந் துண்டமாய் வெட்டிப் பற்பல இடங்களில் போட்டு மறைத்திருக்கக்கூடுமென்றும், அவ்விதம் செய்ததில் அவர்களுக்குத் தெரியாமலே அந்தக் காது சமயலறையில் விழுந்திருக்க வேண்டுமென்றும் நரேந்திரர் யூகித்தார். இவ்விதமான கொடிய கொலைக்குத் தன்னை ஆளாக்கிக்கொண்ட பெண்மணி யாரா யிருக்கக்கூடுமென்று, வைத்தியர் ஆலோசித்துப் பார்த்தார்,— ஆனால் அவருக்கு ஒன்றும் புலப்படவில்லை. தான் பழங்கள் சாப்பிட்ட அறையில் கிடந்த மேஜைமீது விரிக்கப்பட்டிருந்த மேஜைவிரிப்பில் காணப்பட்ட

இரத்தக்கறை அவருடைய ஞாபகத்துக்கு வந்தது. தான் சாப்பிடுதற்கு முன்பு அங்குச் சிலர் சாப்பிட்டுக்கொண் டிருந்திருக்கவேண்டுமென்றும், அவ்விதம் சாப்பிட்டுக்கொண் டிருந்தவர்களுள் கொலைசெய்யப்பட்ட பெண்ணும் ஒருத்தியாக இருக்கக்கூடு மென்றும், சாப்பிட்டுக்கொண்டு இருந்த தருணத்தில் அங்கே அவளை யாராவது கொலைபுரிந்திருக்கவேண்டுமென்றும், அப்படி கொலை செய்யப்பட்டபோது சிந்திய இரத்தமே மேஜை விரிப்பில் காணப்பட்ட கறையென்றும் நரேந்திரர் அனுமானித்தார். ஆனாலும் தன்னுடைய அனுமானம் சரியாயிருக்குமென்று நம்புவதற்கு அவரால் முடியவில்லை. இதற்குள் வேறொரு எண்ணம் அவருடைய மனத்தில் உதித்தது. கொலை செய்யப்பட்ட பெண் தேவகியா யிருக்குமோ என்று சந்தேகித்தார். "தேவகி! நாம் கண்டுபிடிக்கப்பட்டு விட்டோம்! நீ உன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் வழியைத் தேடிக்கொள், அவர்கள் உன்னைக் கொல்லப் பார்க்கிறார்கள்!" என்று நோயாளியாகிய மதிவதனன் உரத்துக் கூவிய சத்தம், நரேந்திரருடைய ஞாபகத்துக்கு இப்போது வந்தது. தன்னிடத்தில் மிகுந்த அன்பு உடையவள்போல் நடித்து மயக்க மருந்தை சாராயத்தில் கலந்து கொடுத்துவிட்டு வெளியேபோன தேவகியை, அவளுடைய விரோதிகள் கொலை செய்திருக்கக்கூடுமோ என்று அவர் எண்ணினார். "மதிவதனன் தேவகியை அவ்விதம் எச்சரித்ததைப் பார்த்தால் இவ்விதந்தானே நினைக்கவேண்டியிருக்கிறது" என்று தனக்குள் அவர் சொல்லிக்கொண்டார். அப்படியானால், தேவகி இருந்தபோதே மேஜை விரிப்பில் இரத்தக் கறை இருக்கக் காரணமென்னவென்று சிந்தித்தார்.

நரேந்திரர் எவ்வளவுதான் யோசனைசெய்து பார்த்தபோதிலும் இந்தக் கொலைசம்பந்தமாய் நிச்சயமான முடிவு செய்ய அவரால் முடியவில்லை. இவ் விஷயமாய்ப் பின்பு ஆலோசிக்கலாமென்று நினைத்துக் கொண்டு சமையலறையை இன்னும் நன்றாய்ப் பரிசோதிக்க அவர் ஆரம்பித்தார். அந்த அறையின் ஒரு மூலையில் தரையில் சுமார் ஐந்தடி சதுரத்துக்கு ஒரு பித்தளைத்தகடு நிலத்தோடு நிலமாய்ப் பதிக்கப்பட்டிருந்ததைக் கண்டார். அந்த இடத்தை நெருங்கி அவர் ஊன்றி நோக்கினார். பித்தளைத் தகட்டில் ஒரு விரல் நுழையும்படியான துவாரமிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டு மெதுவாகத் தனது விரலைச் செலுத்தித் தகட்டை மேலே தூக்கினார். அது மிகவும் மெல்லிய தகடா யிருந்ததால் சுலபமாகவே வெளியே வந்தது விட்டது. அதை அப்புறம் வைத்துவிட்டுக் கீழே நோக்கினார். கருங்கற் படிகள் வைத்துக் கட்டப்பட்டு ஒரு வழி கீழ்நோக்கிச் செல்லுவது போல் அவருக்குத் தோன்றிற்று. தம்முடைய மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு அந்தப் படிகளின் வழியாய் உள்ளே இறங்கிச் சென்றார். அவரை ஒரு பெரிய சுரங்கத்திற் கொண்டுபோய் அந்த வழி விட்டது. சுரங்கத்துள் ஒரே இருள் சூழ்ந்திருந்தமையால் தன்னுடைய சட்டைப்பையி லிருந்த மெழுகு வர்த்தியை எடுத்துக் கொளுத்தினார். சுரங்கத்தில் ஏழு இரும்புப் பெட்டிகள் வரிசையாக வைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். ஐந்து இரும்புப் பெட்டிகள் நாலடி உயரமும், இரண்டடி அகலமுங் கொண்டதா யிருந்தன. ஆனால், மற்ற இரண்டுமோ மிகப் பெரிதா யிருந்தன. ஆறடி உயரமுள்ள ஒரு மனிதனை அத

னுள்ளே தாராளமாய் நிற்கவைத்துப் பூட்டக்கூடிய அவ்வளவு உயரமாயும் அகலமாயும் அவ்விரண்டு இரும்புப்பெட்டிகளு மிருந்ததைக் கண்டவுடன், நரேந்திரருக்கு உண்டான ஆச்சரியம் கொஞ்சமன்று. அவைகள் இரண்டையும் அவர் கவனித்துப் பார்த்தார். ஒரு பெட்டியின் கைப்பிடியிலும், கதவின் வாயிலினும், வேறு சில பாகங்களினும் இரத்தக் குறிகள் தோன்றின. "ஆ! இதென்ன? ஆச்சரியமாக இருக்கின்றதே? இன்னுஞ் சில நூதனங்கள் காணப்படினும் படலாமென்று நான் முதலில் நினைத்தது சரியாய் இருக்கிறதே?" என்று நரேந்திரர் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டார். கொலைசெய்யப்பட்ட பெண்ணினுடைய சரீரம் அந்த இரும்புப் பெட்டிக்குள் வைத்துப் பூட்டப்பட்டிருக்கலாமென்று அவர் சந்தேகித்தார். அந்தப் பெட்டிகள் ஏன் அவ்வளவு பந்தோபஸ்தாய் ஒருவரும் கண்டுபிடிக்க முடியாத விதமாக வைக்கப்பட்டிருக்கின்றனவென்று யோசித்தார். ஆனால், காரணம் அவருக்குப் புலப்படவில்லை. மிகுந்த பயங்கொண்டவராய் மறுபடியும் வெளியே வந்து தகட்டைப் போட்டுச் சுரங்கவாயிலை மூடிவிட்டு மறுபடியும் அந்தக் கட்டிடத்தை சுற்றிப் பார்த்துவிட்டுத் தோட்டத்துக்கு வெளியே வந்து தன்னுடைய வண்டியைப் பார்த்தார். ஆனால், வண்டி காணப்படவில்லை. பொழுது விடியுஞ் சமய மாகிவிட்டதால் திருமுகக்கோட்டைக்கு நடந்தே சென்று சதானந்தரின் வைத்தியசாலையை அடைந்தார். நரேந்திரரும் தன்னுடைய வீடுபோய்ச் சேர்ந்தார்; காலைக் கதிரவனும் கீழ்த்திசையில் உதயமானன். வண்டியும் குதிரையும் காணமற்போனதற்காக நரேந்திரர் சிறிதும்

வருத்தப்படவில்லை, — சந்தோஷமே அடைந்தார். தான் வீட்டை விட்டுப் புறப்பட்டது முதல் காலையில் திரும்பிவந்து சேர்ந்த வரையில் நடந்த சம்பவங்களை ஒவ்வொன்றாகச் சிந்தித்துப்பார்க்க ஆரம்பித்தார். ஆனாலும், முதல்நா ளிரவு நிகழ்ந்த அநேக ஆச்சரிய மான சம்பவங்களைக் கண்டு அவருடைய மூளை கலங்கி இருந்ததால், இப்போது அவர் சிந்தித்துப்பார்க்க ஆரம்பித்தது, அலைகடலில் வீசிய பெரும் புயலில் அகப்பட்டு உடைந்துபோன சிறு தோணியின் பல பாகங்களையும் ஒன்றுசேர்த்துப் பின்னர் கரைசேர முயல்கின்ற ஒரு மீகாமனின் முயற்சியை ஒத்திருந்த தே யன்றி வேறில்லை.



## 5. வசந்தமாலை என்பவள் யார்?



"நோயாளியான மதிவதனனின் கதி என்னவா யிற்று? அவன் பிழைப்பதே அரிது என்று நினைக் கும்படி அவனுடைய சரீர நிலைமை அவ்வளவு பயங் கரமா யிருந்ததே? அவன் அந்த அறையை விட்டு அப்புறப்படுத்தப்பட்டதற்குக் காரணமென்ன? உயி ருடன் அவனை அப்புறப்படுத்தி விட்டார்களா, அல் லது என்னுடைய சிகிச்சை பயன்படாமல் அவன் இறந்துபோன பின்பு அவனை அப்புறப்படுத்தினார் களா? உயிரோடு மதிவதனனை அப்புறப்படுத்தியிருந் தால் எந்த இடத்துக்கு அவனைக் கொண்டுபோயிருப் பார்கள்? தேவகியினுடைய கதி என்னவாயிற்று? அவள் உயிருடன் இருக்கின்றாளா, அல்லது கொல்லப் பட்டு, எனக்குத் தோன்றுகிறபடி, அந்தப் பெரிய

இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டப்பட்டிருக்கின்றாளா? கூன் முதுகனான கந்தனுடைய நிலைமை என்னவாயிற்று? அந்த அதிசயமான வீட்டின் சொந்தக்காரர் யாராயிருக்கலாம்? மதிவதனன், கந்தன், தேவகி மூவரும் அதில் இருந்ததற்குக் காரணமென்ன? பிரக்ஞையற்றுக் கிடந்த நான் மறுபடியும் என்னுடைய சுய அறிவை அடைவதற்குள் அந்த மூன்று பேருமே மறைந்து போனதற்கு முகாந்திரமென்ன? நான் ஏறிச்சென்ற வண்டியும் அதில் கட்டப்பட்டிருந்த தூரகமும் காணமற் போவானேன்?" என்று நரேந்திரர் தன்னையே கேட்டுக்கொண்டு தன்னுடைய வீட்டின் ஒரு அறையில் உட்கார்ந்திருந்தார்.

முதல்நா ளிரவு நடந்த விஷயங்கள், வாஸ்தவத்திலேயே நரேந்திரருக்கு, மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்தன.

எவ்விதத்திலு முண்மையை அறிந்துகொள்ள வேண்டும். அவ்வதிசயங்களின் நோக்கத்தைக் கண்டுபிடிக்கவேண்டும், என்கிற ஆசை நரேந்திரருக்கு மென்மேலும் அதிகரித்தது. தன்னுடைய முயற்சியில் தனக்குக் கூட இருந்து உதவி செய்யவும், தனக்குத் துணையாயிருக்கவும் தகுந்த ஒரு மனிதன் இருந்தால் நலமாயிருக்குமென்று அவருக்குத் தோன்றிற்று. சென்னபட்டினத்தி லிருக்கும் தன்னுடைய மைத்துனருக்கு உடனே ஒரு தந்திகொடுத்து, அவரை வரவழைக்கக் கருதினர். கருதியபடியே தந்தி பேசிவிட்டு வரும்படியாக ஒரு வேலைக்காரனை மன்னார்குடிக்கு அனுப்பிவிட்டு, இவர் திருமுகக்கோட்டையிலுள்ள ஒரு சிறிய போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று, தான் சவாரி போயிருந்த வண்டியுங் குதிரை

யுங் காணமற்போய்விட்டதைப் பற்றி எழுதி வைத்து விட்டு வீட்டுக்குத் திரும்பினர். வண்டியும் புரவியும் சதானந்தருக்குச் சொந்தமானதால் அவருக்கு நஷ்ட முண்டாக்கிவைக்க நரேந்திரருக்குச் சிறிதும் இஷ்ட மில்லை. அதனலேயே போலீஸுக்குத் தெரிவித்தார்.

அன்றுதினம் வேறு வேலை ஒன்றும் நரேந்திரர் செய்யவில்லை. சென்னபட்டினத்துக்குத் தந்தி கொடுத்தும், போலீஸில் எழுதிவைத்ததுந்தான் அவர் செய்த வேலைகள். மறுநாள் காலை பத்துமணி சுமாருக்குப் பூபேந்திரர் திருமுகக் கோட்டைக்கு வந்து சேர்ந்தார். பூபேந்திரர் விவாகமாகாதவராயும், அதி பாலியராயும், நல்ல கல்விமானயும், பெருஞ் செல்வமும் வரும்படியும் உள்ளவராயும் இருந்ததால் உலகத்தின் பலபாகங்களையும் சுற்றிப்பார்த்து உலகஞானமும் அனுபவமும் பெற்று விளங்கினர். தம்முடைய மைத்துனராகிய பூபேந்திரனிடத்தில், முதல் நாள் இரவு ஒரு மனிதன் குதிரைவண்டியில் வந்து தம்மிடம் வைத்தியம் செய்துகொண்டு ஆயிரம் பொன்னையும் விலையுயர்ந்த மாணிக்கத்தையும் கொடுத்துச் சென்றதுமுதல் நடந்த விஷயங்களை ஆதியோடந்தமாய், நரேந்திரர் சொன்னர். பூபேந்திரருக்கு இந்த விஷயம் மிகுந்த உற்சாகத்தையும் ஆச்சரியத்தையும் உண்டாக்கியபடியால், நரேந்திரருடைய முயற்சியில் தாமும் கூட இருந்து உதவிசெய்வதாக அவர் சந்தோஷத்துடன் ஒப்புக்கொண்டார். இருவரும் சாப்பிட்டுவிட்டு உடனே மன்னர்குடிக்கு வந்து சேர்ந்தார்கள். உளவறிவதற்குச் சரியான இடம் சாப்பாட்டு விடுதியே என்று நினைத்து, மன்னர்குடியிலுள்ள ஒரு சோற்றுக் கடையில் தங்கினர்கள். அங்கு

வேறு இரண்டு மூன்று மனிதர்கள் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்த நரேந்திரரும், பூபேந்திரரும் அவர்களுடைய பேச்சில் கலந்துகொள் ளும் பொருட்டு அவர்களை அணுகிச் சென்றார்கள்.

"ஐயா! உங்களுக்கு எந்த ஊர்?" என்று ஒரு மனிதன் நரேந்திரனைக் கேட்டான்.

"நாங்க ளிருப்பது வேலூர். இந்தப் பக்கத்தில் நல்ல தண்ணீர்ப் பாய்ச்சலுள்ள நிலங்கள் விலைக்குக் கிடைக்குமென்று கேள்விப்பட்டோம். எங்களுக்கு ஐந்தாறு வேலி நிலங்கள் வேண்டும். அதற்காகவே வந்திருக்கிறோம்" என்று நரேந்திரர் பதில் சொன்னார்.

"திருமுகக்கோட்டை, வடசேரி, ஒவர்ச்சேரி, பஞ்ஞாநாடு முதலான கிராமங்களைச் சென்று பார்வை யிட்டோம். இருந்தபோதிலும், நன்னிலம், சீர்காழி, திருநகரி முதலான இடங்களில் உள்ள நிலங்களைப் போல் அவ்வளவு செழிப்பாய் இந்தக் கிராமங்களில் நிலங்கள் இல்லை" என்று பூபேந்திரர் சொன்னார்.

"ஆனாலும் பஞ்ஞாநாட்டில் நாம் பார்த்த தோட் டமும் அதற்குள்ளிருக்கும் வீடும் எவ்வளவு சிலாக்கி யமானவைகளா யிருக்கின்றன" என்றார் நரேந்திரர்.

"எந்த வீட்டைச் சொல்லுகிறீர்கள்?" என்று அவரை இன்னொரு மனிதன் ஆவலோடு கேட்டான்.

"தனியாக ஒரு நடுத்திடலில் கட்டப்பட்டிருக் கின்ற வீட்டைச் சொல்லுகிறார்கள்போ லிருக்கின் றது" என்று மூன்றாவது மனிதன் பதில் சொன்னான்.

"ஆமாம்; அந்த வீடுதான்! நாலாபக்கங்களி லும் தென்னை மரங்களும், மாமரங்களும் சூழ்ந்திருக்

கும். தோட்டத்தினுள் வீடு இருப்பதாக, வெளியே இருந்து பார்த்தால் தெரியாது; ஆனால் உள்ளே நுழைந்து பார்த்தாலோ ஒரு பெரிய அரண்மனையைப்போ லிருக்கும் அந்த வீடு. அதைத்தான் நான் சொல்லுகிறேன்" என்று நரேந்திரர் அவர்களுக்கு விளக்கமாகச் சொன்னார்.

"ஆ! அந்த வீடா? சிலாக்கியமான வீடு தான்......" என்று சொல்லிக்கொண்டே ஒரு மனிதன் மற்ற இருவர்களை நோக்கிச் சிரித்தான்.

"என் சிரிக்கின்றீர்கள்? அந்தை வீட்டைப்பற்றி உங்களுக்கு நன்றாய்த் தெரியும்போல் இருக்கிறது. ஏதாவது விசேஷமிருந்தால் எனக்குச் சொல்லுங்கள்" என்று நரேந்திரர் அம் மூவரையும் கேட்டார்.

"கற்பகவிலாஸத்தைப்பற்றி விசேஷம் எதையும் நாங்கள் அதிகமாய் உண்மையில் அறியோம்" என்று அம்மூவரும் பதில் சொல்லிவிட்டு, ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

"கற்பகவிலாஸம் என்றால் என்ன?" என்று அவர்களை நரேந்திரர் கேட்டார்.

"அந்த வீட்டுக்குக் 'கற்பகவிலாஸம்' என்று பெயர். மரங்களும் செடிகளும் கொடிகளும் நெருங்க அடர்ந்து தேவேந்திரனுடைய தோட்டத்தைப்போல் விளங்கும் சோலை மத்தியில் அந்தவீடு இருப்பதால், அதற்கு அவ்விதம் பெயர் வைத்திருக்கிறார்களென்று ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள்" என்று அம் மூவருள் ஒருவன் விடை பகர்ந்தான்.

"ஆ! அப்படியா? அந்த வீட்டில் வசிப்பவர்கள் யார்?" என்று பூபேந்திரர் சமயத்தோடு சமயமாய்க் கேட்டார்.

"அந்த வீட்டில் வசிப்பவர் இன்னாரென்று நிச்சயமாய்த் தெரியாது; அவரைப் பார்த்தால் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவரைப்போல் காணப்படுகிறார்; ஆனால் அவர் தமிழ் பேசுகிறதைப் பார்த்தால் பாண்டியநாட்டைச் சேர்ந்தவர் என்று நினைக்க இடமில்லாமலிருக்கிறது. தெலுங்கு நன்றாய்ப் பேசுகிறார்; தமிழ் அவ்வளவு நன்றாய்ப் பேச அவருக்குத் தெரியாதுபோல் தோன்றுவதால் வடநாட்டைச் சேர்ந்தவராகவே இருக்கவேண்டுமென இவ்வூரார் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அவர் ஒரு பெரிய பணக்காரர் என்றும், கற்பகவிலாசத்தில் வசித்துவருகிறார் என்றும் நிச்சயமாய்த் தெரிகிறது. மற்றப்படி ஒன்றும் நிச்சயமாய்த் தெரியவில்லை" என்று ஒருவன் சொன்னான்.

"என்ன? நீர் சொல்லுவது ஆச்சரியமா யிருக்குதே? ஒரு பெரிய பணக்காரனா யிருந்தால், ஜனசஞ்சார மில்லாத ஒரு நாட்டுப்புறத்தில் வெட்டவெளியிலிருக்கும் தனி வீட்டில் வசிப்பானா?" என்று நரேந்திரர் கேட்டார். இன்னும் அவர்களிடமிருந்து விஷயங்களைக் கிரகிக்கவேண்டு மென்னும் எண்ணத்துடனேயே நரேந்திரர் இவ்விதம் கேட்டார்.

"வசிக்கின்றார் என்றால், அங்கேயே சதா சர்வ காலமும் இருக்கிறார் என்று அர்த்தமா, என்ன? அவரும் அவருடைய புத்திரியும் இரண்டு வருஷங்களுக்கு முன்பு அந்தத் தோட்டத்தை விலைக்கு

வாங்கி, அதில் அந்த வீட்டைக் கட்டினார்கள். ஆனால், அவர்கள் எப்போதும் அந்த வீட்டில் வசிப்பது கிடையாது. அவர்கள் சென்னபட்டினத்திற்றான் அநேகமாய் இருப்பார்களாம். அந்தத் தோட்டத்துக்கு மாதம் ஒருமுறையோ அல்லது இரு முறையோ வருவார்களாம். அப்படி வந்தாலும் இரண்டொரு தினங்கட்குமேல் அங்கே தங்கமாட்டார்களாம்'' என்று இன்னொரு மனிதன் கூறினான்.

“அதிருக்கட்டும்; அவருடைய புத்திரி யென்றீரே? அவள் யார்? அவள் எப்படிப்பட்டவள்?'' என்று நரேந்திரர் கேட்டார்.

“அந்தப் பெண் தங்கமான குணமுடையவள். அவளுடைய சரீரத்தின் நிறமும் தங்கந்தான். அதிக உயரமா யில்லாமல் நடுத்தரமான உயரமும் அதற்கேற்ற தேகபுஷ்டியும் உடையவள். அவளுடைய தலைமயிர் சுருண்டு சுருண்டு நெளிந்திருக்கும். அவளுக்கு வயது பதினேழு அல்லது பதினெட்டுக்கு மேலிராது. அடிக்கடி அவள் மன்னார்குடிக்கு வந்து கடையில் சாமான் வாங்குவது வழக்கம். நாங்கள் அவளை அநேக முறை பார்த்துப் பேசியிருக்கிறோம். அவள் மிக அன்பாயும் சந்தமாயும் பேசுவள்'' என்று அந்த மூன்று மனிதர்களும் சொன்னார்கள்.

“அவளுடைய பெயரென்ன?'' என்று நரேந்திரர் மிக அலட்சியத்துடன் கேட்பவரைப்போல் அவர்களை வினவினார்.

“அவருடைய பெயர் ஞானசேகரர்! அவருடைய புத்திரியின் பெயர் வசந்தமாலை!'' என்று அவர்களுள் ஒருவன் சொன்னான்.

"ஞானசேகரருக்குப் பயித்தியம் பிடித்திருக்குமோ? இல்லாவிட்டால் ஆயிரக்கணக்காய்ப் பணத்தைச் செலவு செய்து மனிதசஞ்சாரமில்லாத கிராமத்தில் வீட்டைக் கட்டுவாரா? அதுதான் போகட்டுமென்றால்; கட்டின வீட்டைப் பூட்டிப்போட்டுவிட்டு சென்னபட்டினத்தில் வசிப்பாரா?" என்று நரேந்திரர் தானகப் பேசிக்கொள்ளுபவரைப்போல் அந்த மூன்று மனிதர்களுடைய காதில் விழும்படியாகவே சொன்னார். இவ்விதம் சொன்னால் அவர்கள் இன்னும் சில விஷயங்கள் சொல்லுவார்கள் என்று நினைத்தார். ஆனால் அவர்கள் வாயை மூடிக்கொண்டார்களே ஒழிய ஒன்றும் வெளியிடவில்லை. நரேந்திரர் வைத்தியராயிருந்தும் அவரிடத்தில் உண்மையை அவர்கள் மறைத்தார்கள்.

"அவர் பயித்தியம் பிடித்தவராகவே இருக்க வேண்டும்" என்று பூபேந்திரர் சொன்னார்.

"பயித்தியம் மட்டுந்தான் என்று சொல்லுவதற்கில்லை. வாஸ்தவத்தில் அவர்—ஒரு அதிசயமான மனிதனாகவே இருக்கின்றார்" என்று ஒருவன் சொன்னான்.

'கற்பகவிலாஸ்'த்தில் நேர்ந்த வெடிவிபத்தைப் பற்றியாவது அங்கு நடந்த படுகொலையைப்பற்றியாவது நரேந்திரருக்குத் தெரியுமே ஒழிய, அக்கம்பக்கத்திலுள்ள மற்ற ஜனங்களுக்கு இதுவரையில் ஒன்றுமே தெரியாது. அந்தத் தோட்டத்துக்குள் எப்படிப்பட்டவர்களும் போக இடம்பெறுகிறதில்லை. ஏனெனில், கந்தன் ஜாக்கிரதையாய் காவல்புரிந்து கொண்டு வந்திருக்கிறான். ஞானசேகரருக்கு வெளியூர்களிலிருந்து கடிதங்கள் வந்தால் அவைகளைத் தபாற்சேவகன் வீட்டில் கொண்டுபோய்க் கொடுக்கும்

வழக்கமில்லை. கந்தனே தபால் ஆபீசுக்குச் சென்று அவைகளை வாங்கிவந்துவிடுவான். தவிர, அந்த வீட்டிலோ கந்தன் ஒருவனைத்தவிர வேறு வேலைக்காரர்கள் இல்லை. வீட்டுவேலை செய்வது சமையல் புரிவது, கடைக்குப்போய் சாமான்கள் வாங்குவது முதலிய எல்லா வேலைகளையும் அவன் ஒருவனே கவனித்துச் செய்துவந்தான். எல்லாச் சாமான்களையும் அவ்வப்போது கந்தன் பணங் கொடுத்தே வாங்கிவிடுகிற வழக்கமாதலால், கடைக்காரர்களாகட்டும், மற்றவர்கள்தான் ஆகட்டும், நிலுவை வசூல் செய்வதை முன்னிட்டாவது அந்தத் தோட்டத்துக்குள் போகிறதற்கு ஏதுவில்லாமற் போயிற்று. ஆகவே, அங்கு நடந்திருக்கும் விசேஷங்கள் ஊராருக்குத் தெரிய பலநாட்கள் ஆகுமென்று நரேந்திரர் நினைத்தார். வேறு விசேஷங்கள் அந்த மனிதர்கள் மூலமாய்க் கேள்விப்பட ஏதுவில்லையென்பதைத் தெரிந்துகொண்ட நரேந்திரர், தம்முடைய மைத்துனரை அழைத்துக்கொண்டு மறுபடியும் திருமுகக்கோட்டைக்குத் திரும்பிவிட்டார். அங்குச் செல்லவே சதானந்தர் மாளவ தேசத்திலிருந்து திரும்பி வந்திருப்பதைக் கண்டார்.

மதிவதனன் என்பவனே தன்னுடைய பெயரை ஞானசேகரனென்று மாற்றி வைத்துக்கொண்டிருக்க வேண்டுமென்றும், தேவகி என்பவளே தன்னுடைய பெயரை வசந்தமாலை என்று மாற்றி வைத்துக்கொண்டிருக்கவேண்டுமென்றும், தங்களுடைய உண்மையான பெயர்கள் மன்னார்குடியிலும், அதைச் சுற்றியிருக்கப்பட்ட கிராமங்களிலும் தெரிந்தால் பின்னால் ஒரு சமயம் கெடுதல் உண்டாக ஏதுவாகுமென்று

யோசனைசெய்தே, அவ்விதம் பொய்ப்பெயர் அமைத்துக்கொண்டார்க ளென்றும், ஆனால் தான் சிகிச்சை செய்யப் போனபோது நோயாளியை மதிவதனனென்று அந்தப் பெண் கூப்பிட்டபடியாலும், அவளைத் தேவகி என்று அவன் கூப்பிட்டபடியாலும், பின்னால் சொல்லப்பட்ட பெயர்களே அவர்களுடைய உண்மையான பெயரா யிருக்கவேண்டு மென்றும் நரேந்திரர் அனுமானஞ் செய்துகொண்டார். ஆதலால், சாப்பாட்டு விடுதியில் பேசிக்கொண் டிருந்த போது அந்த மூன்று பேரும் "ஞானசேகரர்" "வசந்தமாலை" என்று சொன்னதை அவர் அலட்சியம் செய்துவிட்டார். அந்தப் பெயர்களைப்பற்றி ஊன்றி அவர் கவனிக்கவில்லை. வீட்டுக்குத் திரும்பிவந்ததும் நரேந்திரர், எல்லா விஷயங்களையும் ஆதியோடந்தமாய் வைத்தியசாலையின் சொந்தக்காரராகிய சதானந்தரிடம் சொல்லி, சதானந்தரின் வண்டியுங் குதிரையும் காணமற் போனதைப் பற்றியும், அதைப்பற்றி போலீஸில் எழுதிவைத் திருப்பதைப்பற்றியுங் கூறினர். சதானந்தருக்கும் இந்த விஷயங்களெல்லாம் அதிக ஆச்சரியத்தையே விளைவித்தன. மத்தியானத்துக்கு மேல், சாப்பிட்டுவிட்டு, நரேந்திரர், பூபேந்திரர், சதானந்தர் ஆகிய மூவரும் சாவகாசமாய் உட்கார்ந்து கொண்டு இவ்விஷயங்களைக் குறித்து ஒருவரோடொருவர் கலந்து யோசிக்க ஆரம்பித்தார்கள்.

"வண்டியில் வந்து அன்றிரவு நம்முடைய வைத்தியசாலையில் சிகிச்சை செய்துகொண்டுபோன மன்னிதனே வெடியுண்டாகும்படி செய்து மதிவதனனைக் கொல்லப் பார்த்திருக்கின்றான். மதிவதனனாலேயோ அல்லது நரேந்திரரிடம் சாப்பாட்டு விடுதியில் இருந்த

வர்கள் சொன்னபடி ஞானசேகர னென்பவனாலே யோ—தனக்குக் கெடுதியுண்டாகுமென்று நினைத்தே அவன் இந்தக் கொடுந்தொழிலைச் செய்திருக்கவேண்டும். அதிற் கொஞ்சமும் சந்தேகமே இல்லை'' என்று சதானந்தர் சொன்னார்.

"அப்படியானால், வசந்தமாலை என்று அழைக்கப்படும் தேவகியும், அந்த மனிதனுடைய செய்கையால், ஆபத்துக்கு ஆளாகியிருக்க வேண்டுமே?'' என்று நரேந்திரர் கேட்டார்.

"ஆம், எனக்கும் அவ்விதந்தான் தோன்றுகிறது. நரேந்திரரிடம் வந்து சிகிச்சை செய்துகொண்டு போனவன் மறுபடியும் கற்பகவிலாஸத்துக்குத் திரும்பி வந்து தேவகியையும் நோயாளியாய்க் கிடந்த மதிவதனையையும் கொன்று அவர்களுடைய சரீரத்தை எங்கேயாவது மறைத்திருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது'' என்று பூபேந்திரர் அபிப்பிராயம் தெரிவித்தார்.

"ஆ! அந்த யோசனை எனக்கு இதுவரையில் தோன்றாமற் போய்விட்டதே? பூபேந்திரர் சொல்லுவதுபோல் அவர்க ளிருவரையும் கொன்று அந்தப் பெரிய இரும்புப் பெட்டியில் அவன் அவர்களுடைய சரீரத்தைப் பூட்டி வைத்திருக்கிறான் என்று எனக்கு இப்போது தோன்றுகிறது. சமையல் அறையில் அறுந்து கிடந்த காது மிகவும் அழகாயிருந்ததைக் கொண்டும், மன்னார்குடியில் சாப்பாட்டுக் கடையில் பேசிக்கொண் டிருந்தபோது அந்த மூவர்களும் வசநதமாலை என்பவளைப் பற்றிச் சொன்ன அங்க அடையாளங்களைக் கொண்டும் தேவகிதான் கொலையுண்டது என்று எனக்கு நிச்சயமாய்த் தெரிகிறது.

ஆ! தேவகி! நான் கொண்ட எண்ணம் வியர்த்த மாயிற்றே!" என்று நரேந்திரர் சொன்னார். பின் வாக்கியத்தைமட்டும் மற்ற இருவர்களுடைய காதில் விழாதபடி தனக்குள்ளேயே நரேந்திரர் சொல்லிக் கொண்டார்.

"எது எப்படியிருந்தபோதிலும், நரேந்திரரே, உமக்கு ஆயிரம் பொன்னும், மாணிக்கமும் கொடுத்து விட்டுச் சென்ற மனிதனை, நாம் கண்டுபிடிக்கவேண் டும். அவனைக் கண்டுபிடித்தா லொழிய உண்மை புலப்படாது. ஞானசேகரர் சுரங்கத்தில் யந்திரங்கள் வைத்து என்ன வேலை செய்துகொண் டிருந்தார் என்று எனக்குப் புலப்படவில்லை. அந்த விஷயம் எனக்கு ஒரு பெரிய ஆச்சரியமாகவே இருந்துவருகி றது. ஆனாலும், நூதனமாக ஏதோ கண்டுபிடிப்ப தற்காகவே அவர் யந்திரங்கள் வைத்து வேலை செய்தி ருக்கவேண்டு மென்றுமட்டும் எனக்குத் தெரிகிறது. இரும்புப் பெட்டிகள் இருப்பதற்குக் காரணமும் இப் போது தோன்றுகிறது. நவீன முறையாக ஒன்றைக் கண்டுபிடிக்கும் யந்திர வேலைக்காரர்கள், தாங்கள் கண்டுபிடித்ததைப் பிறர் அறியமுடியாதபடி பத்திரப் படுத்திவைப்பது சகஜந்தான். ஆகவே, ஞானசேக ரர் தாம் கண்டுபிடிக்கும் விஷயங்களைப் பத்திரப்படுத் துவதற்காகவே அந்தப் பெரிய இரும்புப் பெட்டிகளை வைத்திருக்கக் கூடும்" என்று பூபேந்திரர் சொன்னார்.

இவ்விதமாக இவர்கள் மூவரும் பேசிக்கொண் டிருந்தபோது திருமுகக் கோட்டையி லிருக்கும் போலீஸ் சேவகன் ஒருவன் நரேந்திரரிடம் ஒரு தந்தியைக் கொண்டுவந்து காண்பித்தான். அந்தத் தந்தியின் விவரம் பின்வருமாறு:—

"நரேந்திரருக்குக் கும்பகோணம் போலீஸ் தலைவர் எழுதியது. நீர் திருமுகக்கோட்டைப் போலீஸில் சதானந்தருடைய வண்டியும் குதிரையும் காணாமற் போயினவென்று எழுதிவைத்தீர் அன்றோ? அந்த விஷயமாக நாங்களும் இங்கே விசாரித்துவந்தோம். கடைசியில் குதிரை வண்டியில் பூட்டப்பட்டபடியே கும்பகோணத்துக்கடுத்த திருநாகேசுரத்தில், ஒரு பைந்திடலில் மேய்ந்துகொண்டிருந்ததைப் போலீஸார் கண்டுபிடித்துவிட்டார்கள். வண்டிக்குள்ளிருக்கும் மெத்தை ரத்தத்தால் நனைந்துபோயிருக்கிறது. உம்முடைய வண்டி காணாமற்போவதற்கு முன்பு மெத்தையில் ரத்தக்கறை இருந்ததுண்டா? உடனே தெரிவிக்கவும்" இத்தந்தியைப் படித்துப் பார்த்துவிட்டு "காணாமற்போவதற்கு முன்பு வண்டியில் இரத்தக் கறை இல்லை" என்று நரேந்திரர் பதில் அனுப்பிவிட்டார். இத்தந்தியால் நரேந்திரருக்குப் பலவித சந்தேகங்கள் உண்டாயின. மதிவதனனையும், தேவகியையும் கொன்று இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டியிருக்கிறார்கள் என்று இதுவரையில் நினைத்திருந்த நரேந்திரர், அவ்விதம் இராதென்று இப்போது நினைத்தார். அவர்களிருவரும் இரும்புப் பெட்டிக்குள் பிணமாய்க் கிடக்கிறார்கள் என்பது வாஸ்தவமானால், வண்டியின் மெத்தையி லிருக்கும் இரத்தக் கறை எவ்விதம் உண்டாயிருக்கக் கூடுமென்று யோசித்தார். நோயாளியாகிய மதிவதனனைத் தூக்கி வண்டியில் போட்டுக்கொண்டு, தேவகியும் கந்தனும், போயிருக்கக்கூடுமோவென்று சிந்தித்தார். அல்லது ஆயிரம் பொன் தனக்குக் கொடுத்த மனிதனே அவர்களிருவரையும் கொன்று வண்டியிற்

போட்டுக்கொண்டு போய்க் கும்பகோணத்துக்குப் பக்கத்தில் எங்கேயாவது புதைத்துவிட்டு வண்டியை யும் குதிரையையும் அங்கேயே விட்டுப்போயிருக்கக் கூடுமோவென்று சந்தேகித்தார். இரும்புப் பெட்டி யில் இரத்தக்குறி இருப்பானேன் என்றும், சிறுகாது அவ்வறையில் கிடப்பானேன் என்றும் யோசித்தார். தேவகி என்பவளும், வசந்தமாலே என்பவளும் ஒரே பேர்வழிதானு அல்லது இரண்டு பேர்வழிகளா என்று சந்தேகித்தார். இரண்டு பேர்வழிகளானல், வசந்த மாலே என்பவள் யார்? என்பதை எவ்விதம் அறிகிற தென்று யோசனைசெய்தார்.



## 6. பழைய காதலின் ஞாபகம்



நரேந்திரருக்கு இப்போது இரண்டு பெரிய சந்தே கங்கள் உண்டாகிவிட்டன வாதலால் அவர் ஒருவித மான முடிவுக்கும் வரமுடியாமல் மயங்கினர்.

"தேவகி என்பவள் உயிரோ டிருக்கிருளா, அல்லது கொலேயுண் டிறந்தாளா வென்பதைத்தான் நாம் முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். அந்த விஷயம் நிச்சயமானல் மற்றவைகளை வெகு சுலப-மாகக் கண்டுபிடித்துவிடலாம்" என்று பூபேந்திரர் நரேந்திரருக்குச் சொன்னர்.

"அவள் கொலேயுண்டு இறந்திருக்கவேண்டு மென்றே எனக்குத் தோன்றுகிறது" என்ருர் நரேந்திரர்.

"எனக்கும் அவ்விதந்தான் தோன்றுகிறது" என்றார் சதானந்தர்.

"அப்படியானால், மதிவதனன் கதி யென்னவா யிருக்கக் கூடும்?" என்று பூபேந்திரர் கேட்டார்.

"பூபேந்திரா! நான் சொல்லுவதைக் கவன மாய்க் கேள்! என்னிடம் ஆயிரம் பொன் கொடுத்து விட்டுச் சென்றவன் மறுபடியும் கற்பகவிலாசத்துக்கு வந்து, நான் அறிவிழந்து கிடந்த சமயத்தில், தேவகி யைக் கொன்று அந்த இரும்புப் பெட்டியில் போட் டுப் பூட்டியிருக்கவேண்டும். அப்படி செய்துவிட்டு அவன் மறுபடியும் மதிவதனன் படுத்திருந்த அந்த அறையை வந்து பார்த்திருப்பான். மதிவதனனு டைய நிலைமை நான் பார்த்தபோதே மிகவும் அபாய கரமா யிருந்தபடியால், அவன் படுக்கையிலேயே இறந்துபோயிருப்பான் என்பதிற் சந்தே கமில்லை. இறந்துபோய்க் கிடக்கும் அந்த நோயாளியை அந்த இடத்திலேயே போட்டுவிட்டால் பின்பு ஒருசமயம் ஏதாவது தீங்கு விளையுமென்று நினைத்து அந்த மனி தன் மதிவதனனை வண்டியில் தூக்கிப் போட்டுக் கொண்டு போய் எங்கேயோ ஒரு இடத்தில் புதைத்து விட்டுப்போயிருக்கவேண்டும். மேலும்......!" என்று நரேந்திரர் சொல்லிக்கொண்டிருந்தபோது, "குதிரை யையும் வண்டியையும் திருநாகேசுரத்தில் கண்டுபிடித் ததாகக் கும்பகோணம் போலீஸார் சமாசாரம் அனுப்பியிருக்கிறார்களே? அந்த இடத்தைப் போய்ப் பார்த்தால், பிணம் புதைக்கப்பட்டிருப்பதை எவ் விதத்திலும் கண்டுபிடித்துவிடலாம்" என்று நரேந் திரரை நோக்கிச் சதானந்தர் கூறினார்.

"பிணத்தைப் புதைத்த இடத்தில் அவன் வண்டியை விட்டுவிட்டுப் போயிருப்பானென்று நினைக்கிறீர்களோ? ஒருபோதும் அவ்விதம் செய்யமாட்டான். பிணத்தைப் பாபநாசத்தில் புதைத்திருந்தால், வண்டியைத் திருநாகேசுரத்தில் விட்டிருப்பான். பிணம் புதைக்கப்பட்ட இடத்தைக் கண்டுபிடிப்பது முடியாத விஷயம். வண்டி திருநாகேசுரத்தில் நின்றபடியால், பிணம் அங்கே புதைக்கப்படவில்லையென்பதுமட்டும் நிச்சயமாய்த் தெரிகிறது" என்று பூபேந்திரர் சொன்னார்.

"ஆம்; நீங்கள் சொல்லுவது வாஸ்தவந்தான்" என்று சதானந்தர் பூபேந்திரருக்குச் சொல்லிவிட்டு "நரேந்திரரே! மேலும்......என்றீரே? அப்புறம் சொல்லும்" என்று கேட்டார்.

"மேலும் இறந்துபோன மதிவதனனைத் தூக்கிப் போய் அவ்விரும்புப் பெட்டியில் வைத்துப்பூட்டுவது அவனுக்குக் கஷ்டமாக இருந்திருக்கலாம். ஏனெனில், பெட்டிகள் பாதாளச் சுரங்கத்தி லிருக்கின்றன. தவிர, வண்டியில் இரத்தக்கறை இருப்பதை யாராவது பார்த்தால், கொலை வீட்டில் நடந்ததாகத் தெரிந்தபோதிலும், கொலையுண்டவர்கள்—மனிதனோ அல்லது ஸ்திரீயோ—அப்புறப்படுத்தப் பட்டார்கள் என்று நினைத்து வீட்டைச் சோதிக்க மாட்டார்களெனக் கருதி இவ்வித யுக்தியை அந்த மனிதன் செய்திருக்கவுங் கூடும்" என்று நரேந்திரர் தமக்குத் தோன்றியதைச் சொன்னார்.

"அப்படியானால் தேவகி என்பவள்தான் வசந்தமாலையா யிருக்கவேண்டுமென்று நீர் நினைக்கின்றீரோ?" என்றார் சதானந்தர்.

"ஆம்; அவ்வாறுதான் எனக்குத் தோன்றுகிறது" என்று நரேந்திரர் பதில் சொன்னார்.

"ஆனால், தேவகி இருந்தபோதே மேசைவிரிப்பில் இரத்தக்கறை யிருந்ததாகச சொல்லுகிறீரே? அந்தக் கறை எப்படி வந்தது?" என்று சதானந்தர் கேட்டார்.

"ஆ! அதை நான் கவனிக்காமலே பேசுகின்றேன்!" என்று சொல்லி நரேந்திரர் பெருமூச்சு விட்டார்.

"நரேந்திரரே! மேசைவிரிப்பில் இரத்தக்கறை இருந்ததற்குக் காரணத்தைக் கண்டுபிடிப்பது அசாத்தியம்" என்று சதானந்தர் கூறினார்.

"ஆனால், அதைக் கண்டுபிடிக்கிறவரையில் வசந்தமாலை என்பவள் யார் என்பதைக் கண்டுபிடிப்பதும் அசாத்தியமே! அதிற் சந்தேகமில்லை" என்று நரேந்திரர் நம்பிக்கையைக் கைவிட்டார்போன்று அயர்ந்து சொன்னார்.

"நரேந்திரா! நாம் இங்கிருந்து வீண்யோசனை செய்வதில் பிரயோஜனமில்லை. ஞானசேகரர் என்பவர் சென்னபட்டினத்தில் பெரும்பாலும் இருக்கிற வழக்கமென்று மன்னார்குடியில் சாப்பாட்டு விடுதியில் இருந்தவர்கள் சொல்லவில்லையா? இன்று சாயந்திரமே புறப்பட்டு சென்னைக்குப் போவதுதான் நல்லது. சதானந்தர் வந்துவிட்டபடியால் நீ இனி வைத்திய வேலையைக் குறித்துக் கவலைப்படவேண்டியதில்லை; அவர் பார்த்துக்கொள்ளுவார். நாம் இருவரும் இவ்வதிசயத்தைக் கண்டுபிடிப்பதில் நமது வாழ்நாளையே

செலவு செய்தபோதிலும் பாதகமில்லை. நீ என்ன சொல்லுகிறாய்?'' என்று பூபேந்திரர் கேட்டார்.

அவ்விதம் செய்வதுதான் நலமென்று சதாநந்தரும் கூறவே, அன்று சாயந்திரமே புறப்பட்டு மன்னார்குடிக்கு வந்து இரயிலேறி சென்னை நகரம் செல்லுவதற்காகப் பூபேந்திரரும் அவருடைய மைத்துனரும் தீர்மானித்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

இவர்கள் இவ்விதம் தீர்மானித்துக்கொண்டு திருமுகக் கோட்டையில் இருக்க, பஞ்ஞாநாட்டில் நடந்த விசேஷங்களைக் கொஞ்சம் கவனிப்போம். அந்தக் கிராமவழியாய்ப் போன எவனோ ஒரு வழிப்போக்கன் கற்பகவிலாஸத்தைப்போய்ப் பார்த்தான். அந்தத் தோட்டத்துக் குள்ளிருந்த வீட்டண்டை போகவே, அங்கே சுவர்களும் ஜன்னல்களும் வெடிவிபத்தினால் வீழ்ந்திருக்கின்றன என்பதை அறிந்தான். அவன் பயத்தினால் வெளியே ஓடிவந்து வேறு சிலரைக் கூப்பிட்டுக் காட்டவே அந்த இடத்தில் பெருங்கூட்டம் கூடிவிட்டது. மூங்கிற் காட்டில் நெருப்புப் பிடிப்பதைப்போல் இந்தச்செய்தி சுற்றுப் பக்கங்களில் உள்ள கிராமங்களிலும் ஒரு நிமிஷத்திற் பரவிவிட்டது. திருமுகக் கோட்டையிலும் இச்செய்தி பரவி, வைத்தியரின் வேலைக்காரனான ஒற்றைக் கண்ணன் வந்து சமாசாரத்தை அவரிடம் கூறினான். மறுபடியும் பஞ்ஞாநாட்டுக்குப் போய் அங்கு என்ன நடக்கிறதென்பதைப் பார்த்துக்கொண்டு பிறகு சென்னைக்குப் போகிறதென்று தீர்மானித்து, நரேந்திரரும் பூபேந்திரரும் உடனே புறப்பட்டு பஞ்ஞாநாடு சென்றார்கள். அங்குச் செல்லவே கற்பகவிலா

ஸத்திற்கு வெளியே கிராமவாசிகள் பலர் கூட்டங் கூடி ஒருவரோடொருவர் ரகசியமாயும், ஆச்சரிய மாயும் பேசிக்கொண்டிருப்பதையும், ஒரு போலீஸ் சேவகன் அந்த ஜனங்களை உள்ளே நுழையவொட்டா மல் தடுத்துக்கொண்டிருப்பதையும் இவர்கள் கண் டார்கள். ஆனல், இவர்களிருவரையும் உள்ளே போகும்படி அந்தப் போலீஸ் சேவகன் சொல்லிவிட் டான். இருவரும் உள்ளே சென்று முதலில் சாப் பாட்டு அறையில் நுழைந்தார்கள். அங்கே தஞ்சை ஜில்லா போலீஸ் தலைவரும், பஞ்ஞாநாட்டைச் சேர்ந்த ஒரு போலீஸ் சேவகனும் நின்றுகொண்டிருந்தார் கள். போலீஸ் தலைவருக்கு நரேந்திரரைத் தெரியு மாதலால், உபசாரமாக இரண்டொரு வார்த்தை கூறிவிட்டு மறுபடியும் அவர் அறையைக் கவனித்துக் கொண்டே சுற்றிப்பார்த்தார். சேவகன், தலைவர் செல்லுமிட மெல்லாம் பின்தொடர்ந்து சென்று கொண்டிருந்தான். நரேந்திரரோ ஒன்றும் தெரியா மல் திகைத்து நின்றார்.

ஏனெனில், மேஜையின்மீது விரிக்கப்பட்டிருந்த இரத்தக் கறையுடைய மேஜைவிரிப்பு இப்போது காணப்படவில்லை. மேஜையின் கீழே கிடந்த இலைகள், பழங்களின் தோல்கள் முதலியவையெல்லாம் அப் புறப் படுத்தப்பட்டிருந்தன. கீழே விரிக்கப்பட்டிருக் கும் ஜமக்காளத்தில் இரத்தஞ் சிந்தியிருந்ததை முன்பு எங்கெங்கே பார்த்தாரோ, அந்த இடங்களெல்லாம் கொளுத்தப்பட்டு துவாரங்களா யிருந்தன. இவை களை யெல்லாம் கண்டவுடன் நரேந்திரருக்கு உண் டான ஆச்சரியம் கொஞ்சமன்று.

விருந்தாட்டு அறைதான் இவ்வித மிருந்ததென்றால், கீழே பாதாளச் சுரங்கத்திற் போய்ப் பார்த்தாலோ, இரும்புப்பெட்டியின் கைப்பிடியிலும் மற்றைப் பாகங்களிலும் இருந்த இரத்தக்கறைகள் சுத்தமாய் அழிபட்டிருந்தன. மொத்தத்தில் அந்த இடத்தில் கொலை நடக்கவில்லை யென்று நினைக்கும்படி முன்பு காணப்பட்ட இரத்தக்கறைகள், வேறு அடையாளங்கள், எல்லாம் அழிந்தே போயிருந்தன. சமையலறையில் முன்பு கிடந்த அறுந்துபோன காதும் காணப்படவில்லை. போலீசாருக்கு உண்மை தெரியாதென்றே நரேந்திரர் நினைத்தார். இவைகளையெல்லாம் யார் வந்து அப்புறப்படுத்தியிருக்கக்கூடுமென்று நரேந்திரர் யோசித்தார். அன்றிரவு அந்த வீட்டிலிருந்து திரும்பியபின் சிலர் வந்துவிட்டுப் போயிருக்கிறார்கள் என்பதுமட்டும் அவருக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. சுரங்கத்திலிருந்த பெரும் பெரும் யந்திரங்களும் வெடியினால் விழுந்துபோயிருக்கும் சுவர்களும், பெயர்ந்துபோயிருக்கும் ஜன்னல்களும், சுரங்கத்தில் காணப்பட்ட ஏழு இரும்புப் பெட்டிகளும் போலீஸ்தலைவருக்கு ஆச்சரியத்தையே விளைவித்தன. அவ்வீட்டுக்குச் சொந்தக்காரராகிய ஞானசேகரர் என்பவரும், அவருடைய புத்திரி என்று ஊராரால் சொல்லப்படும் வசந்தமாலை என்பவளும், வேலைக்காரனான கந்தனும் திடீரென்று மறைந்துபோனதை ஜனங்களால் சொல்லக்கேட்ட போலீஸ் தலைவர் இன்னும் அதிக ஆச்சரியப்பட்டார். இருந்தபோதிலும், கொலை நடந்திருக்கிற தென்பதையாவது, அந்தப் பெரிய இரும்புப் பெட்டியில் இறந்துபோன சரீரம் ஒன்று ஒளிக்கப்பட் டிருக்கிற தென்பதையாவது

போலீஸ் தலைவர் அறிந்துகொள்ளவில்லை; அறிந்து கொள்ள வழியும் இல்லாமற் போயிற்று. இவ்வளவு துணிகரமாய் அன்றிரவு வந்து கொலை செய்யப்பட்டிருப்பதை ருசுப்படுத்தக்கூடிய அடையாளங்களையெல்லாம் அழித்துவிட்டுப் போனது யாராயிருக்கக் கூடுமென்று, நரேந்திரர் தன்னால் கூடியவரையில் பல விதமாய் ஆலோசனை செய்துபார்த்தார். கூன் முதுகனான கந்தனாயிருக்குமோ வென்று ஐயப்பட்டார். ஒரு சமயம் குதிரை சவாரியில் மிகுந்த சாமர்த்தியத்தைக் காட்டின தேவகியாக இருக்குமோவென்று சந்தேகித்தார். ஆனால், நிச்சயமான முடிவுக்கு வர அவரால் முடியவில்லை. போலீஸ் தலைவருடன் பேசிப் பார்க்கலாமென்று நினைத்து அவரிடம் வார்த்தையாட ஆரம்பித்தார். பூபேந்திரரோ ஏதும் பேசாமல் மௌனமா யிருந்தார்.

"நண்பரே! இந்த வீட்டில் காணப்படும் அதிசயத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று நரேந்திரர் போலீஸ் தலைவரைக் கேட்டார்.

"நரேந்திரரே! இவ் வீடு ஒரு அதிசயமான வீடென்றும், ஞானசேகரர் ஒரு அதிசயமான மனிதர் என்றும், இவ்வூர் வாசிகள் நினைத்து ஆச்சரியப்படுவதாக எனக்குத் தெரிகிறது. ஆனால், எனக்குத் 'தெரிந்தவரையில் ஞானசேகரர் மிகுந்த சாந்தமும் சிறந்த குணமும் வாய்ந்த ஒரு கௌரவமான மனிதரென்றே சொல்லுவேன். போலீஸ் சாதக நிதிக்கு அவர் பிரதிவருஷமும் ஆயிரம் ரூபா நன்கொடை அளித்து வருகிறார். இரண்டொரு முறை அவர் தஞ்சைக்கு வந்து என்னுடன் நேரில் பேசிக்கொண்டு

மிருந்திருக்கிறார். இந்த இடத்தில் தாம் வசித்துவரு வதாகவும், சென்னை நகரம் ஜனநெருக்கமாக இருப் பதால் தேக சுகத்துக்கு ஒத்துக்கொள்ளுவதில்லை யெனவும், அதனாலேயே தனியாய் இந்த வீட்டில் இருப்பதாகவும் ஒருமுறை என்னிடம் அவர் கூறினார். தவிர, ஒருவகையான நூதன யந்திரத்தைக் கண்டு பிடிக்கத் தாம் முயன்றுவருவதாகவும், அதனுடைய விவரம் மற்றவர்களுக்கு, அது கண்டுபிடிக்கப்படும் வரையில், தெரியாம லிருக்கவேண்டியது அவசியமா யிருப்பதாகவும், அதுபற்றியும் ஏகாந்தமாக இருக்க நேரிட்டிருப்பதாகவும் சொன்னார். அக்கம் பக்கத்தி லுள்ள கிராமவாசிகள் தன்னைச் சந்தேகத்துடன் பார்க்கிறார்க ளென்றும் என்னிடம் தெரிவித்திருக் கிறார். மொத்தத்தில், அவர் கள்ளங் கபடற்றவர் என்றும், மிகவும் நல்லவரென்றும் எனக்குத் தோன்று கிறது" என்று நரேந்திரரிடம் அந்தப் போலீஸ் தலைவர் சொன்னார்.

போலீஸ் தலைவர் சொன்ன இந்த விஷயங்களால் நரேந்திரருக்கு வேறொரு சங்கதியும் தெரியவந்தது. அதாவது, பின்னால் ஒரு சமயம் போலீஸார் தன்மீது சந்தேகப்படும்படி நேரிடுமென்று தெரிந்து, முன் யோசனையாகவே சாமர்த்தியமாய்ப் போலீஸ் தலை வரிடம் பேசி, போலீஸார் எக்காலத்திலும் தன் னிடம் சந்தேகம் கொள்ளாம லிருக்கும்படியான வழியை ஞானசேகரர் தேடிக்கொண்டார் என்பதே. தவிர, இந்தப் போலீஸ் தலைவருக்கு மட்டும், ஞான சேகரரிடம் சந்தேகம் உண்டாயிருக்கிற தென்பதை யும் வைத்தியர் அறிந்தார்.

"அதிருக்கட்டும்; இங்கு நேர்ந்திருக்கும் சம்பவத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று நரேந்திரர் போலீஸ் தலைவரைக் கேட்டார்.

"நினைப்ப தென்ன? பெரிய வெடி விபத்து நேரிட்டிருக்கிற தென்று பரிஷ்காரமாய்த் தெரிகிறது. ஆனாலும், வெடியினா லுண்டான சத்தத்தை அண்டை அயலார்கள் ஒருவரும் கேட்காம லிருந்திருப்பது தான் எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது" என்று போலீஸ் தலைவர் பதில் சொன்னார்.

"வெடிவிபத்து ராத்திரியில் ஒரு சமயம் நேர்ந்திருக்கக் கூடும். அச்சமயம் காற்றும் பலமாய் அடித்திருக்கலாம். ஆகவே, சத்தம் காற்று வீசிய திசையை நோக்கிப் பரவிப் போயிருக்கவேண்டும். அதனால் தான் ஒருவருடைய காதிலும் வெடியுண்டான சத்தம் விழவில்லைபோ லிருக்கிறது" என்று நரேந்திரர் அபிப்பிராயப்பட்டுச் சொன்னார்.

"இருந்தாலு மிருக்கலாம்; ஆனாலும் வெடி விபத்து தற்செயலாக உண்டாகவில்லை யென்றும், வேண்டு மென்றே வெடிவைத்துக் கொளுத்தியிருக்கிறார்களென்றும் எனக்குப் படுகிறது. யந்திரசாலையை நான் நன்றாய்ப் பரிசோதித்தேன். தற்செயலாக வெடி உண்டாயிற்று என்று நினைப்பதற்கு யாதொரு ஆதாரத்தையும் காணவில்லை" என்று போலீஸ் தலைவர் சொன்னார்.

"அப்படி செய்தவர்கள் யாரா யிருக்கலாம்?" என்று வைத்தியர் கேட்டார்.

"ஞானசேகரரே அநேகமாய் அவ்விதம் செய்திருக்கக் கூடும். திடீரென இந்த இடத்தைவிட்டுப்

போகும்படியான அவசர சந்தர்ப்பம் ஏதாவது அவருக்கு நேரிட்டிருக்கலாம்; அல்லது தான் கண்டு பிடித்து வருவதாக அவர் சொன்ன நூதன யந்திரம் இதுவரையில் கண்டுபிடிக்கப்பட் டிருக்கலாம்; இவை களை இவ்விதமே வைத்துவிட்டுப் போய்விட்டால், தான் மிகுந்த சிரமப்பட்டு புத்தியையும் மூளையையும் செலவு செய்து கண்டுபிடித்திருக்கும் நவீன முறையை வேறு யாராவது பார்க்க நேரிடுமென்றும், அவ் விதம் பார்த்துவிட்டால் அந்த நூதன முறையை அவர்கள் கற்றுக்கொண்டுவிடுவார்க ளென்றும் கருதி அவர் வெடிவைத்து அழித்திருக்கவேண்டு மென்றே தோன்றுகிறது'' என்றார் போலீஸ் தலைவர்.

நரேந்திரருடைய கண்களும், பூபேந்திரருடைய கண்களும் ஒன்றையொன்று சந்தித்தன. இந்த எண்ணம் அவர்களிருவருக்கும் இதுவரையில் உதிக்க வில்லை யென்பதை அந்தக் கண்களின் சந்திப்பு விளக் கிற்று. இதற்குள் அஸ்தமான சமய மாகிவிட்டதால் அவர்க ளிருவரும் போலீஸ் தலைவரிடம் விடை பெற் றுக்கொண்டு மறுபடியும் திருமுகக் கோட்டைக்குத் திரும்பிவிட்டார்கள்.

“நரேந்திரா! முதலில் நாம், உனக்கு ஆயிரம் பொன் கொடுத்துவிட்டுப் போன மனிதனைக் கண்டு பிடிக்க முயலவேண்டும்'' என்று பூபேந்திரர் மறுநாட் காலையில் சதானந்தரின் வைத்திய அறையில் உட்கார் ந்துகொண்டு சொன்னார்.

“நீ சொல்லுவது வாஸ்தவமே. ஆனால், அவனை நாம் எங்கே கண்டுபிடிப்பது? முதலில் அவனுடைய அங்க அடையாளமே சரிவர எனக்குத் தெரியவில்லை யே?'' என்று நரேந்திரர் தளர்வோடு கேட்டார்.

"அவன் சென்னை நகரத்திற்றான் இருப்பான். அதிற் சந்தேகமே இல்லை" என்றார் பூபேந்திரர்.

"சென்னபட்டினம் பெரிய ஊராயிற்றே? அவனை அந்த இடத்தில் எங்கே கண்டு தேடுவது?" என்று முற்றும் நம்பிக்கை இழந்தவர்போல் வைத்தியர் கேட்டார்.

"அப்படியே கஷ்டப்பட்டுக் கண்டுபிடிக்கலாமென்றாலும், மத்தியில் ஒரு பெரிய தடை ஏற்பட்டிருக்கிறதே? அதை நீ கவனிக்கவில்லை போலும்!" என்றார் பூபேந்திரர்.

"எனக்கு அப்படி ஒன்றுந் தோன்றவில்லையே? என்ன தடை ஏற்பட்டிருக்கிறது?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நீ அந்த விநோதமான வீட்டை விட்டுப் புறப்பட்டு வந்துவிட்டபிறகு, யாரோ அங்குச் சென்று இரத்தக்கறைகளை அழித்துவிட்டுப் போயிருக்கிறார்கள் என்பது நிச்சயமாய் ஏற்பட்டுவிட்டது. அவ்விதம் அழித்துப் போனவர்கள்,— அவர்கள் புருஷர்களாயினும் சரியே, ஸ்திரீகளாயினும் சரியே,— உன்னுடைய சரீரம் அந்தக் கற்பாறையில் கிடக்கிறதாவென்று கவனித்திருப்பார்கள். ஏனெனில், மயக்க மருந்து கலக்கப்பட்ட சாராயத்தைக் குடித்து நீ சித்தமிழந்து சாப்பாட்டு அறையில் கிடந்திருக்கிறாய்; நீ இறந்துபோய் விட்டாய் என்று நினைத்து அவர்கள் உன்னை அந்தக் குகைக்குள் கொண்டுபோய்க் கற்பாறையில் போட்டுவிட்டார்கள்; மறுபடியும் வந்து பார்த்தபோது உன்னுடைய சரீரம் அதில் காணப்படாம லிருப்பதைக்கொண்டு, நீ இறவாமல் உயிர்

பிழைத்துத் தப்பித்துப் போய்விட்டாய் என்பதை அறிந்திருப்பார்கள். எப்போது நீ உயிருடனிருக்கிருயோ, அவர்களுக்கு ஆபத்துதான் என்பது அவர்களுக்குத் தெரியாத விஷயமன்று. ஆதலால், உன்னை ரகசியமாய்த் துப்புவைத்துப் பார்த்துக் கொண்டிருந்து சமயம் வாய்த்தபோது உன்னுடைய உயிருக்கே ஹானி தேடுவார்கள் என்பது நிச்சயம். இதைத்தான் ஒரு தடை என்று நான் சொன்னேன்'' என்று பூபேந்திரர் நவின்ருர்.

பூபேந்திரர் சொன்ன இந்த விஷயங்கள் நரேந்திரரை ஸ்தம்பித்து நிற்கும்படி செய்துவிட்டன. இவ் விஷயங்கள் வைத்தியருக்கு முதலில் புலப்படவில்லை. அவர் வாய் குழற நடுநடுங்கி ''ஆனல்...என்னுடைய......நிலைமை......மிகவும்......அபாயமான...... விரோதிகள்......கையிலா......இருக்கின்றது?'' என்று பயத்தோடு கேட்டார்.

''ஆம்; அதிற் சந்தேகமே இன்று! உன்மீது குறி வைத்திருக்கிருர்கள்!'' என்ருர் பூபேந்திரர்.

எப்படி யிருந்தபோதிலும் கற்பகச் சோலையின் வினேத அதிசயத்தை அறியவேண்டுமென்னும் அவாவினல் அவர்களிருவரும் சென்னை மாநகர் புறப்பட்டுச் சென்ருர்கள். போலீஸாருக்கு ஒன்றும் தெரிவிக்கிறதில்லை யென்றும், தாங்களே உண்மையைக் கண்டுபிடிக்கிறதென்றும் நரேந்திரரும் பூபேந்திரரும் உறுதி செய்துகொண்டார்கள்.

பூபேந்திரருடைய வீடு மிகச் சிறியதாக இருந்தாலும், பார்வைக்கு அழகாயும் நல்ல காற்ருேட்டமுள்ளதாயு மிருந்தது. மேலும், மைலாப்பூர் தேக

சௌக்கியத்துக்குத் தகுந்த இடமாதலின், அவர் சந்நிதித் தெருவில் இந்த வீட்டை விலைக்கு வாங்கித் தம்முடைய இஷ்டப்படியே அதைப் புதுப்பித்திருந்தபடியால், நரேந்திரருக்கு அவ்வீடு ஒருவகையான திருப்தியையே கொடுத்துவந்தது. இவர்களிருவரும் சென்னைக்கு வந்து சேர்ந்து இரண்டொரு தினங்களாயின. ஒருநா ளிரவு பூபேந்திரரோடு பேசிக்கொண்டிருந்த நரேந்திரர் திடீரென்று "பூபேந்திரா! நம்முடைய திருமுகக் கோட்டையில் வசிப்பதை விட, இச்சென்னையில் வசிப்பது சிலாக்கிய மென்றே எனக்குத் தோன்றுகிறது. அதனாற்றான் நீ சதா சர்வகாலமும் இங்கே உறைகின்றாய்" என்று சொன்னார்.

இவ்வார்த்தைகளைக் கேட்க பூபேந்திரர் திடீரென்று "ஆ! கண்மணி! உதயகுமாரி......!" என்று தன்னையும் மறந்து கூவினார்.

"பூபேந்திரா! சென்னைக்கு வந்தவுடன் பழைய காதலின் ஞாபகம் வருகிறதோ?" என்று நரேந்திரர் கேட்டார்.

ஆனாலும், "உதயகுமாரி என்பவள் யார்?" என்ற சந்தேகம் நரேந்திரருடைய மனத்தில் இப்போது குடிகொண்டது.



## 7. நூதனமாய் நட்புக்கோள்ளல்



சென்னைநகர் போனவுடன், நரேந்திரர் தம்முடைய வைத்தியத் தொழிலை அங்கும் செய்வதற்கு ஆரம்பித்தார். ஆனால் வைத்தியம்செய்து பொருள் சம்பாதிக்க வேண்டும் என்னும் எண்ணத்துடன் சென்னை

யில் அவர் வைத்தியத் தொழிலைக் கைக்கொள்ளவில்லை. தாம் பிரவேசித்திருக்கும் முயற்சிக்குப் பெரிய சாதகமாய் அந்தத் தொழில் இருக்குமென்றும், அந்தத் தொழிலை ஒரு காரணமாக வைத்துக் கொண்டு பற்பல இடங்களுக்கும் செல்லலா மாதலால் கற்பகச் சோலை அதிசயத்தைக் கண்டுபிடிப்பதில் அதிக சிரமம் தமக்கு நேரிடாதென்றும் நினைத்தே நரேந்திரர் சென்னையில் வைத்தியத் தொழில் செய்ய ஆரம்பித்தார். சென்னையில் பிரபல வைத்தியராயிருந்த சஞ்சீவி என்பவரிடம் உதவி வைத்தியராக நரேந்திரர் அமர்ந்தார். சஞ்சீவி என்பவரும் இவரை மிகவும் அன்பாக நடத்திப் பற்பல இடங்களுக்கு வைத்தியத்தின் பொருட்டு இவரை யனுப்பிவந்தார். நரேந்திரரும் தம்முடைய வேலையைக் கவனித்துப் பார்த்துவந்தார்.

இப்படியாக இரண்டொரு வாரங்கள் கழிந்தன. கற்பகச் சோலை அதிசயம் இன்னமும் ஒரு பெரிய அதிசயமாகவே இருந்துவந்தது. அதைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. போலீஸாரும் மௌனம் சாதித்துவிட்டதாகவே நரேந்திரருக்குத் தோன்றிற்று. நரேந்திரருக்கும் ருசுவாகக்கூடிய சாட்சியம் அன்றிரவு சாப்பாட்டு அறையில், தேவகி முதலில் வெளியே போன சமயத்தில், தற்செயலாய்க் கீழே கிடந்து அகப்பட்ட அந்த கைக்குட்டையைத் தவிர வேறே எதுவும் இல்லை. ஒரு கைக்குட்டையை மட்டும் வைத்துக்கொண்டு அவர் என்ன செய்வார்? அதைக் கொண்டு ருசுப்படுத்துவதாவது அல்லது அதிசயத்தைக் கண்டுபிடிப்பதாவது இலகுவிலே முடியக் கூடிய காரியமா? ஐயோ! பாவம்! அவர் ஒன்றுந்

தோன்ருமல் திகைத்தார். மேலும், கைக்குட்டை யில் வண்ணுன் குறியாவது, அதன் சொந்தக்கார ருடைய பெயரின் முதலெழுத்தாவது இருந்தால் அவைகளைக்கொண்டாவது ஒருவாறு முயற்சிசெய்ய நரேந்திரருக்கு இடமுண்டாயிருக்கும். அப்படிப் பட்ட அடையாளங்கள் எவையும் அதிற் காணப்பட வில்லை. பூபேந்திரருக்கு இந்த அதிசயத்தைக் கண்டு பிடிப்பதில் ஏற்பட்டிருந்த உற்சாகமும் வரவரக் குறைய ஆரம்பித்தது. "நம்மால் கண்டுபிடிக்க முடி யாது. ஏன் வீண் பிரயாசை எடுக்கவேண்டும்?" என்று அவர் அடிக்கடி சொல்ல ஆரம்பித்துவிட்டார். நரேந்திரருக்கோ எவ்விதத்திலும் உண்மையைக் கண்டுபிடிக்கவேண்டும் என்கிற பிடிவாதமான கொள் கையே பலப்பட்டது. அவர் பற்பல விதமாய் யோசிப்பதும், அனுமானிப்பதுமாக இருந்துவந்தார்.

ஒரு நாள் சாயந்திரம் சஞ்சீவி என்பவர் நரேந் திரரைக் கூப்பிட்டு, திருவொற்றியூரில் ஜெயராம் என் னும் பெயருடைய ஒரு கனவான் இருப்பதாகவும், அவருடைய மூத்த புத்திரி விஜயா என்பவளுக்கு ஜுரம் என்பதாகவும், தாம் காலையில் போய்ப் பார் த்து இரண்டு வேளைக்கு மருந்து கொடுத்துவிட்டு வந்திருப்பதாகவும் சொல்லி, மறுபடியும் போய்ப் பார்த்து வரவேண்டுமென்று நரேந்திரரை அனுப்பி ஞர். அவருடைய உத்தரவுப்படியே நரேந்திரர் மாலை ஆறுமணி சுமாருக்குப் புறப்பட்டுத் திருவொற்றியூர் சென்று ஜெயராம் வீட்டை யடைந்தார்.

ஜெயராம் என்பவருடைய வீடு பெரிதாயும், நூதன முறையை அனுசரித்து அழகாய்க் கட்டப் பட்டதாயு மிருந்தது. வீட்டைப் பார்த்தவுடனே

அவ் வீட்டுக்காரர் பெரிய பணக்காரராக இருக்க வேண்டுமென்று நரேந்திரர் தெரிந்துகொண்டார். ஆனால், ஜெயராம் என்னும் பெயர் வைஷ்ணவப் பெயர் என்றும், அப்பெயரை யுடையவர் நாயுடு வகுப்பைச் சேர்ந்தவரா யிருக்கவேண்டுமென்றும், அதிலும் தெலுங்கு பேசும் வடநாட்டு நாயுடுமார்களைச் சேர்ந்தவராகவே இருக்கவேண்டுமென்றும் நரேந்திரர் முதலில் நினைத்தார். ஆனால், அங்கே சென்று பார்த்ததும், தாம் நினைத்ததற்கு நேர் விரோதமாய் இருப்பதாக நரேந்திரருக்குத் தெரிந்தது. அவ்வீட்டாரைப் பார்த்தபோது, அசல் சைவர்களைப் போலவும், செந்தமிழ் நாட்டிலேயிருந்து வளர்ந்தவர்களைப் போலவும் அவருக்குத் தோன்றிற்று. அப்போது அவருக்கு உண்டான ஆச்சரியம் கொஞ்சமன்று. நரேந்திரர் போன சமயத்தில் வீட்டு எஜமானனாகிய ஜெயராம் வீட்டில் இல்லை. அவருடைய மனைவியாகிய வைதேகி நரேந்திரரை யார் என்று விசாரித்தாள். வைத்தியர் சஞ்சீவியிடமிருந்து தாம் வந்திருப்பதாக அவர் தெரிவிக்கவே, அவள் மிகுந்த உபசாரம்செய்து தன்னுடைய புத்திரி படுத்திருந்த அறைக்கு அவரை அழைத்துக்கொண்டு போனாள். நரேந்திரர், விஜயாவின் கைநாடியைப் பிடித்துப் பார்த்து, வேண்டிய மருந்துகளைக் கொடுத்துவிட்டு, சாதாரணமாய் வைத்தியர்கள் தைரியங் கூறியும், சாமர்த்தியம் பேசியும் ஒப்புவிக்கும் பாடத்தை வைதேகியிடம் ஒப்புவித்துவிட்டு, திரும்பவும் வெளியே வந்தார். அவர் கூறிய தைரிய மொழிகளால், நோயாளியாகிய விஜயாவுக்கும் அவளுடைய தாயாருக்கும் ஒருவாறு கவலை நீங்கிற்று. வைதேகி கொடுத்த தாம்பூலாதிகளை எடுத்

துக்கொண்டு நரேந்திரர் அவளிடம் விடைபெற்று, சென்னைக்குத் திரும்புவதற்காக, வீட்டு வாயிற்படியை விட்டு இறங்கினர். அச்சமயத்தில் வீட்டுக்காரரான ஜெயராம் வந்துவிடவே, மறுபடியும் அவருடன் பேசிக்கொண்டே வைத்தியர் வீட்டுக்குள் சென்றார்.

ஜெயராம் என்பவர் விபூதி தரித்துக்கொண்டு, சைவர்போன்று காணப்பட்டாராயினும், அவருடைய முகச் சாயலைக் கண்டு அவர் நாயுடு வென்பதாகவே நரேந்திரர் சந்தேகித்தார். தமிழ் தெரிந்தவரைப் போல் அவர் மிகுந்த இலக்கணத்துடன் வார்த்தையாடிய போதிலும், இடையிடையே அவருடைய பேச்சில் உண்டான குற்றங்களையும், வார்த்தை சமயத்தில் வராமல் தயங்கினதையும் நரேந்திரர் கவனித்து அவருடைய சொந்த தேசம் வடநாடென்றும், அவருடைய சுயபாஷை தெலுங்கு என்றும் அபிப்பிராயப்பட்டார். ஜெயராம் என்னும் பெயரைக் கேட்டவுடன், அவர் நாயுடுவென்றே தாம் முதலில் தீர்மானித்தது, சரியான தீர்மானந்தான் என்று உறுதிசெய்தார். ஆனல், அவருடைய மனைவியும் புத்திரிகளும் சைவர்கள் என்பதிலும், பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதிலும் வைத்தியருக்குக் கொஞ்சமும் சந்தேக முண்டாகவில்லை. இப்படியிருந்ததானது, நரேந்திரருடைய ஆச்சரியத்தை இன்னும் அதிகப்படுத்திற்று. ஜெயராம் என்பவர் மாத்திரம் தனித்து உட்கார்ந்து நரேந்திரருடன் பேச ஆரம்பித்தார்.

"வைத்தியரே! தாங்கள் இந்த ஊளுக்குப் புதியவர்போல் எனக்குத் தோன்றுகிறதே?" என்று ஜெயராம் உசாவினர்.

"ஆம்; புதிதுதான்! வைத்தியர் சஞ்சீவியை எனக்கு நன்ருய்த் தெரியும். இப்போது நான் அவரிடந்தான் உதவி வைத்தியராக வேலை பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனுல், திருவொற்றியூருக்கு நான் இதற்கு முன்பு வந்ததே இல்லை; இதுதான் முதல் தடவை!" என்று நரேந்திரர் விடை இறுத்தார்.

"இதற்கு முன்பு எங்கே இருந்தீர்கள்? யாரிடம் வேலை பார்த்தீர்கள்?" என்று ஜெயராம் உசாவினுர்.

"நான் இதற்கு முன்பு மன்னுர்குடியைச் சேர்ந்த திருமுகக்கோட்டையில் வைத்தியர் சதானந்தரிடம் வேலைபார்த்துவந்தேன். ஐயா, தங்களுக்கு என்ன வேலை யென்று நான் கேட்கலாமோ?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நான் எவரிடமும் வேலைபார்க்கவில்லை. சென்னையில் எனக்கு ஒரு சொந்தக் கடை இருக்கிறது. வியாபாரந்தான் எனக்கு உத்தியோகம்" என்ருர் ஜெயராம்.

"சரி; சந்தோஷம்! நான் போய் வருகிறேன்!" என்று நரேந்திரர் விடைபெற்றுக்கொண்டு எழுந்தார்.

அடிக்கடி தங்கள் வீட்டுக்கு வந்துபோகவேண்டு மென்றும், நோயினுல் வருந்தும் விஜயாவை அடிக்கடி வந்து பார்க்கவேண்டுமென்றும், ஜெயராம் வைத்தியருக்கு உபசாரங் கூறி அனுப்பினுர். வைத்தியரும் அப்படியே ஆகட்டும் என்று சொல்லிவிட்டு சென்னைக்குத் திரும்பினுர். மறுபடி அடிக்கடி நரேந்திரர் அந்த வீட்டுக்குப் போவதும் வருவதுமா யிருந்தார். அக் குடும்பத்தாருக்கும் இவருக்கும் உண்டான சிநேகம் வரவர பலப்பட்டுவந்தது.

ஜெயராம் வீட்டில் ஒருநாள் விருந்து நடந்தது. அதற்கு நரேந்திரரும் போயிருந்தார். இவரைத் தவிர வேறொருவரும் வந்திருந்தார். ஜெயராமும், நரேந்திரரும், புதிதாய் வந்திருந்த மற்றொருவரும் போஜனம் முடிந்தபின்பு திண்ணையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். நரேந்திரர் புதிதாக வந்திருந்தவரைப்பற்றி விசாரித்தார். அவர் மன்னார்குடியில் படித்துக்கொண்டிருந்தவரென்றும், இப்போது சென்னையில் படிக்க வந்திருக்கிறார் என்றும், அவர் சொன்னதிலிருந்து நரேந்திரர் தெரிந்துகொண்டார். பார்வைக்கு அவர் மிகவும் பால்யராகவே காணப்பட்டார். இருபத்திரண்டு அல்லது இருபத்துமூன்று வயதுதான் அவருக்கு இருக்கும். அவருடைய பெயர் சரவணன் என்பதாகவும் நரேந்திரர் தெரிந்துகொண்டார். அது முதல் சரவணனுக்கும், நரேந்திரருக்கும் சிநேகம் அதிகப்பட்டது. அடிக்கடி இருவரும் சென்னையில் சந்திப்பதும், வேடிக்கையாகப் பேசிப் பொழுது போக்குவதுமாக இருந்தார்கள். சரவணனுடைய வலப்பக்கத்துக் கன்னத்தில் நீண்டதோர் தழும்பு இருந்தது. வலப்புற மணிக்கட்டும் காயப்பட்டு பெரிய ஒரு தழும்பை உடையதா யிருந்தது. நரேந்திரர் இந்தத் தழும்புகள் உண்டாகக் காரண மென்னவென்று சரவணனைக் கேட்டபொழுது, தனக்கும் கலாசாலையில் படித்துக்கொண்டிருந்த மற்றொரு மாணாக்கனுக்கும் மல்யுத்தம் நடந்ததென்றும், அப்போது உண்டான காயங்களே இவை யென்றும் சரவணன் பதில் சொன்னான்.

விஜயாவுக்கு இன்னமும் உடம்பு சௌக்கியப்படவில்லை யாதலால், நரேந்திரர் ஜெயராம் வீட்டுக்குச்

சென்று அடிக்கடி அந்தப் பெண்ணைப் பார்த்து வந்தார். அவருடைய வீட்டிற்கு ஒரு ஐரோப்பிய ஸ்திரீ அடிக்கடி வந்து பேசிக்கொண்டிருப்பதுண்டு. ஜெயராம் தன்னுடைய மூத்த புத்திரியாகிய விஜயாவுக்கும், இளைய புத்திரியாகிய பங்காருக்கும் ஆங்கில பாஷை கற்பித்துக் கொடுப்பதற்காக இந்த ஐரோப்பிய ஸ்திரீயை ஏற்படுத்தியிருக்கிறார் என்று அவருடைய மனைவியான வைதேகி சொன்னதைக்கொண்டு நரேந்திரர் தெரிந்துகொண்டார். மேலும், அந்த ஐரோப்பிய ஸ்திரீ தமிழ்ப்பாஷை கற்றுக்கொள்ளுவதற்காக இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வந்திருக்கிறாள் என்றும், வைதேகி தமிழ்ப்பாஷையில் நல்ல ஞானமுடையவளாதலால், அவளே அந்த ஐரோப்பிய ஸ்திரீக்கு தமிழ் கற்பித்துவருகிறாள் என்றும், வைத்தியருக்குத் தெரியவந்தது. இவர் ஜெயராம் வீட்டுக்குப் போகும் போது அடிக்கடி அந்த ஐரோப்பிய ஸ்திரீயைப் பார்ப்பதும், அவ் வீட்டில் இருப்பவர்கள் அவளை "மிஸ் ரோஸ்பரி" "மிஸ் ரோஸ்பரி" என்று கூப்பிடுவதைக் கேட்பதுமாக இருந்தார். நரேந்திரருக்கு ஆங்கிலபாஷை நன்றாய்த் தெரியுமாதலால், அவர் மெதுவாக அந்த ஐரோப்பிய ஸ்திரீயுடன் சம்பாஷிக்க ஆரம்பித்தார். அவளுக்குத் தமிழ் தெரியுமாதலால், சில சமயங்களில் ஆங்கிலத்திலும், சில சமயங்களில் தமிழிலும் இவர்கள் பேசிக்கொள்வதுண்டு.

மிஸ் ரோஸ்பரி என்னும் ஆங்கிலமாதின் பெற்றோர்கள் இங்கிலாந்தில் லிவர்பூல் என்னும் நகரத்தில் வசிக்கிறார்கள் என்றும், அவள் இந்தியாவுக்கு வந்து மூன்று நான்கு வருடங்களாயினவென்றும், கடந்த இரண்டு மூன்று வருஷகாலமாய் மதுரைமா நகரத்தில்

வசித்துவந்தாள் என்றும், இப்போது சென்னைக்கு வந்திருக்கிறாள் என்றும் பங்காரு நரேந்திரருக்குச் சொன்னாள்.

மிஸ் ரோஸ்பரி அழகிற் சிறந்தவள் என்பதை அவளுடைய விரோதிகள் கூட ஒப்புக்கொள்ளுவார்கள். அவளுடைய முகம் முட்டைவடிவாய்ச் சிறிது நீண்டு உருண்டையா யிருந்தது. அழகிய சிறு கண்களின் பார்வையில் அன்பு அளவு கடந்து ததும்பிக் கொண் டிருந்தபோதிலும், அவள் மனோ வியாகூலத்துட னிருக்கிறாள் என்பதை அவைகள் குறிப்பிடாமலில்லை. அவளுடைய தலைமயிர் மேனாட்டாரின் தலைமயிரைப்போல் செந்நிறமா யிராமல் கருநாவற் பழத்தைப்போல் கருமையாயிருந்தது. நெளிந்து நெளிந்து சுருண்டிருக்கும் தலைமயிரை அவள், வாகெடுத்து முடியாமல், பின்னால் தொங்கவிட்டு ஒரு நீலநிறமான நாடாவினால் கட்டியிருந்தாள். இந்திய ஸ்திரீகளைப்போல் அவள் ஆபரணங்கள் அணிந்துகொள்ளும வழக்கமில்லையாதலின், அவளுடைய முகம் இயற்கையழகையே அழகாகக் கொண்டு பிரகாசித்தது. விதவிதமான சித்திரவேலைகளுடன் அமைக்கப்பட்டிருந்த "கவுன்" என்னும் ஒரு வகையான உடையை அவள் தரித்திருந்தாள். அந்த உடையின் வேலைப்பாட்டையும், துணியின் உயர்வையும் பார்த்தால் அவள் ஒரு பெரிய கனவான் வீட்டுப் பெண் என்றே எவரும் நினைப்பர். அவளுடைய புஜம் நன்றாய்த் திரண்டுருண்டு அழகாயிருந்ததைக் கண்டு நரேந்திரர் அடிக்கடி ஆச்சரியப்படுவார். அவளுக்கு வயது இருபது அல்லது இருபத்தொன்றுதா னிருக்கும். மேனாட்டினரைப் போல் அவள் வாள்விழியின் கருமணி, நீலநிறமா யில்லாமல்

மிகக் கருமையாக இருந்தது. அவளுடைய சரீரமோ எலுமிச்சம் பழத்தின் நிறத்தை தோற்கடிக்கச் செய்யும் இயல்புடையதா யிருந்தது. மொத்தத்தில், அவளுடைய அழகு நரேந்திரரை அவளுக்கு அடிமையாக்கி விட்டதென்றே சொல்லலாம். ஏதாவது ஒரு வீண் காரணத்தை வைத்துக்கொண்டு இவர் ஜெயராம் வீட்டுக்குப் போவதும், அவளோடு பரிகாசமாய்ப் பேசிக்கொண்டிருப்பதுமாகத் தமது காலத்தைச் சிறிதுநாள் செலவழித்தார். இப்படி யிருந்து வரும்போது ஜெயராம் வீட்டில் ஒரு சுபகாரியமான விசேஷம் நடந்தது. அதற்கு அவர் சென்னையிலுள்ள பெரிய ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களை ஒருநாள் தம் வீட்டுக்கு வரவழைத்து விருந்து வைத்தார். அதற்கு மிஸ் ரோஸ்பரியும் வந்திருந்தாள். நரேந்திரரும் போயிருந்தார். ஆங்கில கனவான்களும் ஸ்திரீகளும் மேஜையைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு கேக்கு, டீ, பழங்கள் முதலியவைகளைச் சாப்பிட்டுக்கொண் டிருந்தார்கள்.

நரேந்திரர் அவர்களுடன் உட்கார்ந்து சாப்பிடவில்லை யாயினும், அவர்களுக்குப் பக்கத்தில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு வேடிக்கையாக அவர்களுடன் நெடுநேரம் சம்பாஷித்தார். இவர் அவர்களுடன் உட்கார்ந்து பேசிக்கொண்டு இருந்ததற்கு முக்கிய காரணம் மிஸ் ரோஸ்பரி அங்கிருந்ததுதான். மிஸ் ரோஸ்பரி ஐரோப்பிய ஸ்திரீயானதால், அவள் தாராளமாய் அவர்களுடன் சேர்ந்து விருந்துண்டாள். வைத்தியர் அவளைக் கவனமாய்ப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தார். வீட்டுக்காரராகிய ஜெயராமும், அவரைச் சேர்ந்தவர்களும் இந்த

ஐரோப்பிய கனவான்களை உபசரித்து விருந்து செய்விப்பதில் முனைந்திருந்தார்கள். நிற்க; ஐரோப்பிய கனவான்களுடன் சாப்பிட்டுக்கொண்டிருந்த ரோஸ்பரி, நரேந்திரரைப் பார்த்து ஒரு சமிக்கை செய்து வெளியே வரும்படி அவருக்குத் தெரிவித்துவிட்டுத் திடீரென்று எழுந்து வெளியே சென்றாள். அவள் தன்னுடைய கண்ணால் சொல்லிய சங்கதியைக் காதால் கேட்டவரைப் போல் நரேந்திரர் அறிந்துகொண்டு, அவள் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் தானும் வெளியே சென்றார். இவர்கள் செய்துகொண்ட சைகைகளை அங்கே இருந்த மற்றவர்கள் கவனிக்கவில்லை. இவர்கள் வெளியே சென்றதைப்பற்றி அவர்கள் விகற்பமாய் நினைக்கவுமில்லை. ஜெயராம் வீட்டின் பின்புறத்தி லிருக்கும் மரமடர்ந்த ஒரு தோட்டத்தில் நரேந்திரரும் மிஸ் ரோஸ்பரியும் சந்தித்தார்கள்.

"நரேந்திரரே! மறுமுறை நீர் இங்கே வரும்போது நான் உம்மைச் சந்திக்க முடியாதே என்று விசனப்படுகிறேன். நான் இன்னும் இரண்டொரு தினங்களில் இங்கிலாந்துக்குப் புறப்பட்டு விடுவேன். பிறகு எப்போது இந்தியாவுக்கு வரப்போகின்றேனே?" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே சொன்னாள்.

"இங்கிலாந்துக்கா! உன் ஜென்மதேசத்துக்கா!" என்று ஆச்சரியப்பட்டு நரேந்திரர் கேட்டார்.

"ஆம்; நான் இந்தியாவுக்கு வந்து மூன்று நான்கு வருஷங்களுக்குமே லாகிவிட்டன. என்னுடைய பெற்றோர் என்னை வரும்படியாக எனக்குக்

கடிதமெழுதியிருக்கிறார்கள். இந்தியாவில் நான் மிகுந்த சுகமாயும் சந்தோஷமாயும் காலத்தைக் கழித்து வந்தேன் என்பதில் சந்தேகமில்லை. இப்போது இந்தத் தேசத்தைவிட்டுப் போவதென்றால் எனக்கு மிக வருத்தம் உண்டாகிறது. ஆனாலும் என்ன செய்யலாம்? ஜெயராமும் அவருடைய குடும்பத்தாரும் மிக நல்லவர்கள். இன்றையதினம் அவர்கள் ஐரோப்பியர்களுக்கு விருந்து வைத்தது போலவே நாளையதினம் இந்தியக் கனவான்களுக்கு விருந்து வைக்கப்போகிறார்கள் போலிருக்கிறதே? நீர் நாளையதினமும் இங்கு வருவீரோ?'' என்று மிஸ் ரோஸ்பரி வினவினாள்.

"உன்னை ஊருக்கு வழியனுப்பி விடுவதற்காகவா? நான், நாளையதினம் வருவதாக உத்தேசமில்லாவிட்டாலும், அந்த விருந்தை முன்னிட்டாவது நாளைக்கு இங்கே வந்தால், உன்னை இன்னொருமுறை பார்க்கலாமன்றோ? ஆதலால், அதை உத்தேசித்தாவது நாளையதினம் நான் வருகிறேன். ஆ! மிஸ் ரோஸ்பரி, நீ இங்கிலாந்துக்குப் போய்விடுவதைப் பற்றி நான் பெரிதும் விசனப்படுகிறேன்'' என்று நரேந்திரர் வருத்தத்தோடு கூறினார்.

"ஆம்; அதற்கென்ன செய்யலாம்? இந்த உலகமே பிரியும் உலகமாயிருக்கிறதே தவிர வேறில்லை. ஆனாலும் நாம் ஒருசமயம் பிற்காலத்தில் சந்தித்தாலும் சந்திக்கலாம் — யாருக்குத் தெரியும்?'' என்றாள் மிஸ் ரோஸ்பரி.

இப்படியாகப் பேசிக்கொண்டே நரேந்திரரும் மிஸ் ரோஸ்பரியும் அந்தத் தோட்டத்தில் நடந்து சென்றார்கள். அவள் ஊருக்குப் போய்விடுவதில் உண்

மையிலேயே நரேந்திரருக்கு மிகவும் வருத்தந்தான். அவருடைய மனம் துக்கத்தில் மூழ்கியிருந்ததால், அவரால் வாய்திறந்து பேசுவதற்குக்கூட முடியவில்லை. ஏனெனில், சொற்ப தினங்களுக்குள் அவர் மிஸ் ரோஸ்பரியைக் கண்டு, அவளோடு சம்பாஷித்து, அவளைக் காதலிக்க ஆரம்பித்து விட்டார். ஆனாலும் என் செய்வார் பாவம்! இவரோ இந்தியர்; அவளோ ஐரோப்பிய ஸ்திரீ! அவள் இவரை விவாகஞ்செய்து கொள்ள இஷ்டப்பட்டபோதிலும், நரேந்திரருடைய பெற்றோர்கள் அவளை மணஞ்செய்துகொள்ள இடம் சிறிதும் கொடுக்கமாட்டார்கள். பெற்றோருடைய உத்தரவும், உற்றார் உறவினருடைய சம்மதமும் வேண்டுவதில்லையென்று அவர் துணிந்து அவளை விவாகஞ் செய்துகொள்ளலாமென்றாலும், அவர் பெரும் பணக்காரராக இல்லை. தம்முடைய இயல்பையும் நிலைமையையும் குறித்துத் தானே வருத்தப்பட்டார். ஐரோப்பியனாகப் பிறந்திருந்தால் நலமாயிருந் திருக்குமே என்று நினைத்தார்.

மிஸ் ரோஸ்பரியோ சிறிது நேரம் ஒன்றும் பேசாமல் மௌனமாகவே நடந்துசென்றாள். அவளுடைய மனத்திலும் ஏதோ வருத்தமிருப்பதாக அவளுடைய முகக்குறி உணர்த்திற்று. ஒருதரம் பெருமூச்சுவிட்டு, நரேந்திரரை நிற்கச்சொல்லி, அவரிடம் ரகசியமாகச் சில வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தாள். நரேந்திரரும் அவளுடைய வார்த்தையைக் கவனமாய்க் கேட்டார்.

"வைத்தியரே! நான் உம்மிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றித் தனித்துச் சொல்லவேண்டு

மென நினைத்தே உம்மை இங்கு வரும்படி சொல்லிச் சைகை செய்தேன். கடைசியில் அதை மறந்துவிட்டு ஏதேதோ பேசிக்கொண்டிருந்துவிட்டோம்" என்று மெதுவாக அவள் சொன்னாள்.

"என்ன விஷயம்?" என்று ஆவலோடு நரேந்திரர் கேட்டார். மிஸ் ரோஸ்பரி நாலாபக்கமும் சுற்றிப் பார்த்தாள். தான் சொல்லப்போகும் சங்கதியை யாராவது மறைந்திருந்து கேட்டு விடுவார்களோ என்னும் பயத்துடன் சுற்றிப் பார்ப்பவளைப்போல் அவளுடைய பார்வை இருந்தது.

"என்ன சங்கதி? என்ன சங்கதி? சீக்கிரம் சொல்!" என்று அவசரப்பட்டு நரேந்திரர் அவளைக் கேட்டார்.

"வைத்தியரே! இந்த வீட்டுக்குள் இனிமேல் நீர் நுழையாதீர்! உம்முடைய நிலைமை ஆபத்திலிருக்கிறது! உம்முடைய உயிருக்கே அபாயம் நேரிடும்! இந்த வீட்டு மனிதர்கள் யார் என்பதாக உமக்குத் தெரியாது! ஆனால் நீர் யார் என்பதை அவர்கள் அறிந்துகொண்டிருக்கிறார்கள்!" என்று பயத்தோடும் பரிதாபத்தோடும் மெதுவாகச் சொன்னாள். நரேந்திரருக்கு ஒன்றுந் தோன்றவில்லை. எதைப்பற்றிச் சொல்லுகிறாள். எதற்காகச் சொல்லுகிறாள் என்று அவருக்குப் புலப்படவில்லை.

"ஆனால்—!" என்று ஆரம்பித்து ஏதோ சொல்ல நரேந்திரர் வாயெடுத்தார்.

"இந்தச் சமயத்தில் 'ஆனால்' வேண்டாம்! போய்விடும்! இந்த வீட்டைவிட்டு இந்த நிமிஷமே விலகி

விடும்! மறுபடியும் இந்த வீட்டில் அடியெடுத்து வைக்காதீர்! இந்த வீட்டில் நுழைகிற ஒவ்வொரு சமயத்திலும் உம்முடைய உயிர் எமனுடைய வாயில் நுழைகிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்!'' என்று மறுபடியும் மிஸ் ரோஸ்பரி வற்புறுத்திச் சொன்னாள்.

நரேந்திரருக்கு இடி விழுந்ததுபோ லிருந்தது, ரோஸ்பரி சொன்ன இந்த வார்த்தைகள். "ஆ! இதென்ன ஆச்சரியம்? நூதனமாய் நட்புக்கோள்ளல் சரியன்றென்று சந்தேகித்தேனே? ஜெயராம் என்பவருடைய நடையுடை பாவனையில் ஐயங்கொண்டேனே? நான் சந்தேகப்பட்டது இப்போது நிச்சயமாய்விட்டதோ?'' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டார். என்ன பேசுவதென்றும், என் செய்வதென்றும் தோன்றாமல் மதிமயங்கி நின்றார்.



## 8. ஆச்சரியமான அதிசயங்கள்



"நீ என்ன சொல்லுகிறாய்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! விளங்கவில்லையே!'' என்று மெய்நடுங்க, வாய் குழற, ஆவியை இழப்பவர்போல் மெதுவாக நரேந்திரர் கேட்டார்.

"நான் என்ன சொல்லுகிறேன் என்றால்: உம்முடைய உயிருக்கே ஆபத்து வரப்போகிறதென்று சொல்லுகிறேன். நான் சொன்னதைக் கவனித்துக்கொண்டு எச்சரிக்கையாக இரும். நாம் இங்கு தனித்து நிற்பதைப் பார்த்தால் அவர்கள் சந்தேகிப்

பார்கள். நான் வீட்டுக்குள் செல்லுகிறேன். நீர் உடனே இந்த வீட்டைவிட்டுப் போய்விடும். மறுபடியும் இங்கே வரவேண்டுமென்று கனவிலும் நினையாதீர்; நினையாதீர்; ஜாக்கிரதை!'' என்று மிஸ் ரோஸ்பரி வற்புறுத்திப் பழையபடியும் கூறினாள்.

“ஐயோ! நீ சொல்லுவது எனக்குத் திகிலே உண்டாக்குகிறதே? என்ன விதமாய் என்னுடைய உயிருக்கு ஆபத்து நேரிடுமென்று சொல்லுகிறாய்? அதையாவது எனக்குச் சொல்லக்கூடாதா? ஐயோ! எனக்கு அச்சமுண்டாகிறதே!'' என்று நரேந்திரர் மிகுந்த பரிதாபத்தோடு கேட்டார்.

“என்னவிதமாய் நேரிடுமென்று எனக்குத் தெரியாது. தெரிந்தாலும் நான் சொல்லக்கூடிய நிலைமையில் இல்லை. ஜாக்கிரதையாய் இருமென்று நான் உம்மை எச்சரிக்கிறேன். அவ்வளவுதான் என்னால் சொல்லமுடியும். நரேந்திரரே! நான் நாளையதினம் இந்த இடத்தை விட்டு நீங்கப்போகிறேன். அதன் பிறகு—!'' என்று மிஸ் ரோஸ்பரி சொல்லிக்கொண்டிருக்கும்போதே “அதன் பிறகு என்ன?'' என வைத்தியர் ஆவலோடு கேட்டார்.

“இந்த வீட்டில் மாறுதலுண்டாகும்'! என்றாள் மிஸ் ரோஸ்பரி.

“மாறுதலா? விவரமாகச் சொல்லக்கூடாதா?'' என்று நரேந்திரர் வினவினார்.

“கூடாது; கூடாது; விவரமாகச் சொல்ல என்னால் முடியாது. நான் உள்ளே போகிறேன். சாப்பிடுகிற இடத்தில் நான் இல்லாமலிருக்கிறதை அவர்கள் கவனித்திருந்தால், சந்தேகப்படுவார்கள். நான்

உமக்கு எச்சரித்திருக்கிறேன் என்பதை அவர்கள் அறிந்துகொள்ளுவார்களானல், நம்மிருவருக்குமே தீங்குண்டாகும்" என்று மிஸ் ரோஸ்பரி பயத்தோடு சொன்னாள்.

"ரோஸ்பரி! நீதான் விஷயத்தைச் சொல்லாமல், இங்கிலாந்துக்குப் போய்விடுகிறதாய்ப் பிடிவாதமாகச் சொல்லுகிறாய். உன்னுடைய மேல் விலாசமாவது சொல்லு. அவசியம் நேரிட்டால் கடிதமாவது எழுதுகிறேன்" என்று மிகவும் மன்றாடி நரேந்திரர் கேட்டார்.

"நான் உடனே இங்கிலாந்துக்குப் போகவில்லை. சைதாப்பேட்டையில் என்னுடைய தகப்பனாரின் சகோதரியாகிய மிஸஸ் வில்யம் இருக்கிறாள். அவளுடைய வீட்டில் கொஞ்சகாலம் தங்கியிருந்துவிட்டுப் பிறகுதான் இங்கிலாந்துக்குப் புறப்படுவேன்" என்று மிஸ் ரோஸ்பரி கூறினாள்.

"அப்படியானல், சைதாப்பேட்டை விலாஸத்தையாவது எனக்குச் சொல்லு" என்று வைத்தியர் கேட்டார்.

"நரேந்திரரே! சைதாப்பேட்டை 'பாம் ஹவுஸில்' இருக்கும் மிஸஸ் வில்யம் மேல்பார்த்து எனக்குக் கொடுக்கும்படி கடிதம் எழுதினால் எனக்கு வந்து சேரும். ஆனால், மிஸ் ரோஸ்பரி என்று எழுதாமல் மிஸஸ் ரோஸ்பரி என்று எழுதவேண்டும். நான் சொன்னது தெரிகிறதா?" என்று மிஸ் ரோஸ்பரி கூறினாள்.

"என்ன? நீ சொல்லுவது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறதே? உனக்கு விவாகமாகிவிட்டதா, என்ன?

இவ்வீட்டிலிருப்பவர்கள் உன்னை மிஸ் என்றுதானே கூப்பிடுகிறார்கள்?" என்று நரேந்திரர் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"வைத்தியரே! நான் இந்த இடத்தில் சில காரியத்தை முன்னிட்டு 'மிஸ்'* என்று சொல்லிக்கொள்ள நேரிட்டதே தவிர உண்மையில் 'மிஸஸ்' என்பதில் சந்தேகமில்லை. எனக்கு விவாகமாகிவிட்டது" என்று மிஸ் ரோஸ்பரி பதில் சாற்றினாள்.

"விவாகமான நீ, விவாகம் ஆகாதவளைப்போல் இந்த இடத்தில் நடிப்பதற்குக் காரணம் என்ன?" என்று நரேந்திரர் உசாவினார்.

"அதைப்பற்றிச் சொல்ல நான் இப்போது தயாராயில்லை. அது ஒரு பரம ரகசியமான விஷயம். நான் வீட்டுக்குள் போகிறேன். நீர் ஜாக்கிரதையாய் இருமென்று பழையபடியும் எச்சரிக்கிறேன். நான்போய் சிறிதுநேரஞ் சென்ற பின்பு நீரும் வீட்டுக்குள் வந்து ஜெயராமிடம் விடைபெற்றுக்கொண்டு போய்விடும். திரும்பவும் இந்த இடத்துக்கு வராதீர்; வராதீர்!" என்று சொல்லிவிட்டு, திடீரென்று புறப்பட்டு மிஸ் ரோஸ்பரி ஜெயராமின் வீட்டுக்குள் சென்றாள்.

---

* ஆங்கிலேயர்களுக்குள் கலியாணமாகாத பெண்களை அவர்களின் தகப்பனாரின் பெயரோடு மிஸ் என்னும் வார்த்தையைச் சேர்த்துக் கூப்பிடும் வழக்கமும், கலியாணமான பெண்களை அவர்கள் புருஷர்களின் பெயரோடு மிஸஸ் என்னும் வார்த்தையைச் சேர்த்துக் கூப்பிடும் வழக்கமும் உண்டு. மிஸ் என்னும் பதம் கலியாணமாகாத பெண்களையும், மிஸஸ் என்னும் பதம் விவாகமான பெண்களையும் குறிப்பிடும்.

நரேந்திரர் சற்றுநேரம் ஒன்றுந் தோன்றாமல், அந்தத் தோட்டத்தில் அசைவற்று நின்றுகொண்டிருந்தார். தன்னுடன் பேசிக்கொண்டிருந்த மிஸ் ரோஸ்பரி திடீரென்று வீட்டுக்குள் சென்றது ஒரு மின்னல் தோன்றி மறைந்ததுபோல் அவருக்கு இருந்தது. சிறிதுநேரங் கழித்து அவர் ஜெயராம் வீட்டுக்குள் சென்றார். வீட்டின் முதற்கட்டில் ஒரு வாலிபனோடு பேசிக்கொண்டிருந்த ஜெயராமின் மனைவியாகிய வைதேகி நரேந்திரரைப் பார்த்து "வைத்தியரே இன்றிரவிங்கே தங்கிவிட்டுப் போகலாமே? சாப்பாடு முடிந்தவுடன் சங்கீதக் கச்சேரி ஒன்று நடக்கப்போகிறது. தாங்கள் அவசியம் இருக்கவேண்டும்" என்று மிகுந்த உபசாரத்துடன் கிளந்தாள்.

"இருக்கலாம்; ஆனாலும் என்ன செய்கிறது; வண்ணார்பேட்டையில் இரண்டு வீட்டுக்கு வைத்தியத்தின் பொருட்டுப் போகவேண்டும். இராயபுறத்தில் ஒரு வீட்டுக்குப் போய் மருந்து கொடுக்கவேண்டும். இப்போதே மணி எட்டுக்கு மேலாகிறது. ஆதலால், தங்களுடைய விருப்பப்படி இருக்கமுடியாமற்போகிறதே என்று மிகவும் விசனப்படுகிறேன்" என்று நரேந்திரர் பதில் சொன்னார்.

"அப்படியானால் சிறிதுநேரமிருந்து கச்சேரி ஆரம்பமானவுடன் இரண்டு மூன்று கீர்த்தனங்களாவது கேட்டு விட்டுச் செல்லுங்கள்" என்று கூடவிருந்த வாலிபன் புகன்றான்.

"முடியவே முடியாது! இன்னும் எத்தனை இடத்துக்குப் போகவேண்டி யிருக்கிறது; நான் இங்கே உட்கார்ந்து சங்கீதம் கேட்டுக்கொண் டிருந்தால்—"

என்று நரேந்திரர் சொல்லிக்கொண் டிருக்கும்போதே ஜெயராமும் அந்த இடத்துக்கு வந்துசேர்ந்தார்.

“என்ன, நரேந்திரரே!” என்று ஜெயராம் கேட்டார்.

“ஒன்றுமில்லை; கச்சேரிக்கு இருந்துவிட்டுப் போக வேண்டுமென்று அம்மா சொல்லுகிறார்கள். எனக்கோ வேலை அதிகம் இருக்கிறது” என்றார் நரேந்திரர்.

“வேலையிருந்தால் தாங்கள் போகலாம்! ஆனால், நாளைய தினம் இந்தியக் கனவான்களுக்கு நடக்கும் விருந்துக்குத் தாங்கள் அவசியம் வரவேண்டும்” என்று ஜெயராம் கூறினார்.

“ஆஹா; அப்படியே வருகிறேன்” என்று நரேந்திரர் சொல்லிவிட்டு, ஜெயராமிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்துவிட்டார். உண்மையில் அவருக்கு நாளைய தினம் அந்த வீட்டில் அடி எடுத்து வைக்கும் எண்ணம் இல்லாவிட்டாலும், இச்சமயம் தப்பித்துக்கொள்ள இவ்விதம் சொன்னார்.

இப்போது, அலையின்மேல் அலை எழும்புவது போல், நரேந்திரருடைய எண்ணங்கள் ஒன்றுமேலொன்றாய்த் தோன்றிக்கொண்டே இருந்தன. “ஜெயராமுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? என்னைக் கொல்லுவதற்கு அவன் கருதுவானேன்? ஒரு நாளும் தன்னுடைய வீட்டில் தங்கும்படி என்னை வற்புறுத்தாத வைதேகி இன்று அவ்வளவுதூரம் பிடிவாதமாய் என்னை எதற்காகத் தங்கும்படி கேட்டாள்? ரோஸ்பரி என்பவள், உண்மையில் தான் மிஸ் அல்லளென்றும், மிஸஸ் என்பதில் கொஞ்சமும் சந்தேக

மில்லை யென்றும், என்னிடம் சொன்னாளே? அப்படியானால் எதற்காக அவள் தன்னை மிஸ் என்று பொய்யாகவாயினும் ஜெயராம் வீட்டில் சொல்லிக்கொண்டாள்? நான் அவளை சந்தித்தபோது அவளுடைய முகம் வெளுப்பானேன்? அவளுடைய புருவம் துடிப்பானேன்? ஆ! இவைகளை எல்லாம் கவனிக்கும்போது ஒன்றும் புலப்படவில்லையே? ஆச்சரியமான அதிசயங்கள் என்றல்லவோ நினைக்க வேண்டி யிருக்கிறது? என்னுடைய உயிருக்கே ஆபத்து நேரிடுமென்று மிஸ் ரோஸ்பரி சொன்னாளே? எந்த விதத்தில் நேரிடுமென்று எனக்குத் தெரிய வில்லையே? தெரிந்தாலன்றோ நான் என்னைக் காப்பாற்றிக்கொள்ளக்கூடும்?" என்று நரேந்திரர் தன்னைத்தானே கேட்டுக்கொண்டு திருவொற்றியூர் ரயில்வே ஸ்டேஷன் வந்து சேர்ந்தார்.

மிஸ் ரோஸ்பரியை நெடுங்காலமாகத் தனக்குத் தெரியுமென்று வைதேகி நரேந்திரரிடத்தில் முன்பு சொல்லி யிருந்ததை, அவர் இதுவரையில் நம்பியிருந்தபோதிலும் இப்போது சந்தேகிக்க ஆரம்பித்தார். வைதேகி சொன்னது பொய் என்றும், மிஸ் ரோஸ்பரிக்கும் ஜெயராமுடைய குடும்பத்துக்கும் சிநேகபாவ முண்டாகி சொற்ப காலந்தானிருக்குமென்றும் நரேந்திரருக்குத் தோன்றிற்று. மிஸ் ரோஸ்பரி எதற்காகத் தன்னை அவ்விதம் எச்சரிக்க வேண்டுமென்று நரேந்திரர் பழையபடியும் யோசித்துப் பார்த்தார். ஜெயராம் வீட்டார் ரகசியத்தில் பேசிக்கொண்ட ஏதோ சில விஷயங்களை அவள் மறைந்திருந்து கேட்டிருக்கக் கூடுமென்றும், அப்படி கேட்ட விஷயங்கள் பயங்கரமானவைகளா யிருக்கக்

கூடுமென்றும், அதனால்தான் தன்னை அவ்வளவு தூரம் வற்புறுத்தி எச்சரித்திருக்கிறாள் என்றும் நரேந்திரருக்கு ஒருவாறு தோன்றிற்று. ஆனாலும், அவரால் நிச்சயமான முடிவுக்கு வரமுடியவில்லை. மிஸ் ரோஸ்பரி அப்படியே கேட்டிருந்தபோதிலும், தன்னைப்பற்றி அவ்வளவு பரிதாபப்பட்டு எச்சரிக்க வேண்டிய காரணமென்ன, எச்சரித்தவள் விஷயங்களை மட்டும் விவரமாய்ச் சொல்லாமல் மறைக்கவேண்டிய காரண மென்ன என்று நரேந்திரர் ஆலோசித்தார்.

இவ்விதமாக ஆழ்ந்த யோசனையில் நரேந்திரருடைய மனம் ஆழ்ந்திருந்தபோது பின்னால் யாரோ வருவதுபோல் அவருக்குக் காலடி சத்தம் கேட்டது. திடீரெனத் திரும்பிப் பார்த்தார். ஸ்தூல சரீரமும், சாதாரண மனிதர்களைவிடக் கொஞ்சம் உயரமுமான ஒரு மனிதர் தலை நிறைய முக்காடுபோட்டுக் கொண்டு சிறிது தூரத்தில் வருவதை வைத்தியர் கண்டார். முதலில் அவனைப்பற்றி இவர் ஒன்றும் சந்தேகிக்கவில்லை. மறுபடியும் நரேந்திரர் ஸ்டேஷனுக்கு வெளியே வந்தார். அந்த மனிதனும் அவரைப்பின் தொடர்ந்து வந்தான். அப்படி அவன் வந்ததை நரேந்திரர் கவனித்தார். மறுபடியும் ஸ்டேஷனுக்குள் சென்றார். அவனும் ஸ்டேஷனுக்குள் சென்றான். நரேந்திரருக்கு அவன் மீது சிறிது சந்தேகம் உண்டாயிற்று. இதற்குள் ரெயில் வந்துவிடவே, நரேந்திரர் ஒரு இரண்டாவது வகுப்பில் வந்துட்கார்ந்தார். அவனும் அடுத்த வண்டியில் வந்து ஏறினான். ஜெயராம் வீட்டிலிருந்து அவன் அனுப்பப்பட்டிருக்கிறானென்றும், தான் போகிற இடத்தையும், செய்கிற வேலையையும் ரகசியமாய்க் கவனித்து உளவரிந்து

செல்லவே அவன் வந்திருக்கிறனென்லும், நரேந்திரர் நிச்சயமாய் இப்போது அறிந்துகொண்டார். ரெயில் வண்டி சென்டிரல் ஸ்டேஷன் வந்து சேர்ந்ததும், நரேந்திரர் வண்டியைவிட்டு இறங்கி வெளியே வந்து மிகவும் வேகமாய்ப் போகக்கூடிய ஒரு ஜட்கா வண்டியை வாடகைக்குப் பேசிப் புரசைவாக்கத்துக்கு வண்டியை விடும்படி உரக்கச் சொன்னர். அவரோடு கூட வந்த மனிதன் வேருெரு ஜட்கா வண்டியை வாடகைக்குப் பேசிக்கொண்டு நரேந்திரருடைய வண்டியைப் பின்பற்றியே அந்த வண்டியையும் ஒட்டச் சொன்னன். நரேந்திரர் வண்டியின் பின்புறத்தை மறைப்பதற்காக ஒரு வெள்ளைத் துணியைக் கட்டினர். காற்று அதிக குளிர்ச்சியாய் அடித்ததால் அவ்விதம் கட்டினர் என்று பின் வண்டியில் சென்ற மனிதன் நினைத்துக்கொண்டான். நரேந்திரர் வண்டிக்காரனிடம், அவனுக்கு இரண்டுமடங்கு வாடகை கொடுப்பதாகவும், அவன் புரசைவாக்கம் வரையில் வண்டியை ஒட்டிச் சென்று பிறகு எங்கே அவனுக்கு இஷ்டமோ அங்கே போய்விடலா மென்பதாகவும் பேசி முடித்துக்கொண்டு, பணத்தை முன்னதாகவே அவன் கையில் கொடுத்துவிட்டார். வண்டி ஆனைக்கவுனி போலீஸ் ஸ்டேஷனண்டை சென்றதும், நரேந்திரர் வண்டியின் முன்புறத்தின் வழியாய்க் கீழே குதித்துவிட்டார். இவர் குதித்ததைப் பின் வண்டியில் வந்த மனிதன் பார்க்கவில்லை. நரேந்திரருடைய வண்டிக்காரன் வண்டியை ஒட்டிச் செல்லவே, அதனைத் தொடர்ந்தே பின் வண்டியும் சென்றது. நரேந்திரரோ வேருெரு ஜட்காவைப் பிடித்துக்கொண்டு மைலாப்பூர் போய்ச் சேர்ந்தார். இவரை

ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பூபேந்திர ரிடம் வைத்தியர் விஷயங்களை முதலில் குறிப்பாகச் சொன்னார்.

"விந்தை! விந்தை! நரேந்திரா, எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கிறதென்று நான் ஆச்சரியப்படு கிறேன். ஜெயராமைப்பற்றியாவது, அவருடை குடும் பத்தைப்பற்றியாவது நீ இதுவரையில் ஒன்றும் சந் தேகப்படவில்லையே?" என்று பூபேந்திரர் தான் கையில் வைத்திருந்த சுருட்டின் நுனியைப் பார்த்துக் கொண்டே நரேந்திரரைக் கேட்டார்.

"இல்லை; இன்று இரவு எட்டுமணி வரையில் நான் சந்தேகப்படவில்லை. ஆனால், இப்போது சந் தேகம் உண்டாகி இருக்கிறது. ஜெயராமையும் அவர் களுடைய குடும்பத்தாரையும் நான் எவ்வளவோ நல்ல வர்களென்றும், சிநேகத்துக்குத் தகுந்தவர்களென் றும் இதுவரையில் நினைத்திருந்தேனே! என்ன அறி யாமை!" என்று நரேந்திரர் பதிலறிந்து, தனக்கும் மிஸ் ரோஸ்பரிக்கும் தோட்டத்தில் நடந்த சம்பாஷ ணையையும், அவள் தன்னை எச்சரித்துக் கூறியதையும், ஒரு மனிதன் தன்னைத் தொடர்ந்து உளவறிய வந்த தையும் விஸ்தாரமாக பூபேந்திரருக்கு எடுத்துச் சொன்னார்.

"நரேந்திரா, மிஸ் ரோஸ்பரியைக் கண்டு எவ்வித மாவது உண்மையை வெளிப்படுத்தும்படி நாம் அவளை வற்புறுத்த வேண்டும். அதிரகசியமான சூழ்ச்சி அவளுக்கு எப்படியோ வெளிப்பட் டிருக்கி றது. இல்லாவிடில், அவ்வளவுதூரம் அவள் உன்னை எச்சரிக்க நியாயம் சிறிது மில்லை" என்று பூபேந்திரர்

சொல்லிச் சிறிதுநேரம் ஏதோ யோசிப்பவரைப் போல் மௌனமாயிருந்துவிட்டு, "அதிருக்கட்டும், மிஸ் ரோஸ்பரி தனக்கு விவாகமாகியிருப்பதாக உன்னிடம் சொன்னாள் என்று கூறுகிறாயே; நீ விவாக விஷயமாய் அவளைக் கேட்காமலிருந்தபோது அவளாகவே வலிந்து உன்னிடம் தனக்கு விவாகமாகி விட்டதென்று சொன்னதைப்பார்த்தால், எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது" என்று மறுபடியும் நரேந்திரருடைய மைத்துனர் கூறினார்.

"அந்த விஷயத்தில் சந்தேகப்படக்கூடிய தென்னவிருக்கிறது?" என்று நரேந்திரர் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"விவாக மாகாமலே அவளிருந்த போதிலும் விவாகமாகி விட்டதென்று சொல்லி வைத்தால், நீ அவளைக் காதலிக்க மாட்டாய் என்று நினைத்து அவ்விதம் சொல்லி யிருக்கலாகாதோ?" என்றார் பூபேந்திரர்.

"எனக்கு அவ்விதம் தோன்றவில்லை. ஜெயராமுடைய குடும்பத்தாருக்குப் பயந்து தன்னை மிஸ் என்று அவள் சொல்லிக்கொண் டிருந்திருக்கிறாள் என்றே எனக்குப் புலப்படுகிறது" என்று நரேந்திரர் சொன்னார்.

"பயப்படுகிறாள் என்பதிலும் சந்தேகமில்லை. அப்படி மிஸ் ரோஸ்பரி பயப்படுவதற்குக் காரணம் ஏதாவது இருக்கவேண்டு மென்பதிலும் சந்தேகமில்லை. ஆனால், அந்தக் காரணம் யாதாயிருக்கக்கூடு மென்பதுதான் சந்தேகத்தி லிருக்கிறது" என்று பூபேந்திரர் கூறினார்.

"நான் அவளைக் கண்டபோதிலும் அவளைக் கேட்கமாட்டேன். ஏனெனில், நான் ஏற்கெனவே என்னால் கூடியவரையில் அவளை நயமாகக் கேட்டுப் பார்த்தேன். ஒன்றும் சொல்லமுடியாதென்று மறுத்துக் கூறிவிட்டாள். ஆதலால், பழையபடியும் அவளை வற்புறுத்திக் கேட்பது கல்லில் நார் உரிக்க முயலுவதைப்போலவே யாகும்" என்றார் வைத்திய ராகிய நரேந்திரர்.

"ஏன்? அவள்தான் தன்னுடைய மேல்விலாசம் கொடுத்திருக்கின்றாளே? நாம் இருவரும் புறப்பட்டு சைதாப்பேட்டைக்குப்போய் அவளை நேரில்கண்டு விஷயங்களை விசாரித்தால் கட்டாயம் சொல்லுவாள். ஜெயராம் வீட்டிலிருந்தபோது அவர்கள் எங்கே பார்த்துவிடப் போகிறார்களோ என்னும் பயத்தால் அவள் உண்மையை வெளியிட மறுத்திருக்கக் கூடும்" என்று பூபேந்திரர் கூறினார்.

"இருக்கட்டும்; ஜெயராம் வீட்டு விஷயமாய் உனக்கு என்ன தோன்றுகிறது?" என்று நரேந்திரர் கேட்டார்.

"ஏதோ சில சதியாலோசனை நடக்கிறதென்றே எனக்குத் தெரிகிறது, ஜெயராம் தனக்கு இரத்தின வியாபார மென்றும், சென்னையில் தனக்கு ஒரு பெரிய கடை இருக்கிறதென்றும் சொல்லியிருக் கிறாரே? நாளையதினம் காசுக்கடைத் தெருவில் விசா ரித்தால் உண்மை தெரிகிறது. நரேந்திரா! வைதேகி அவ்வளவுதூரம் உன்னை வற்புறுத்தித் தங்கும்படி சொன்னதையும், நீ மறுக்கவே நாளையதினம் வரும் படி ஜெயராம் சொன்னதையும் பார்த்தால், எனக்கு

ஆச்சரியம் உண்டாகிறது. ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டே அவ்விதம் அவர் வற்புறுத்தியிருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. மிஸ் ரோஸ்பரி உனக்கு உண்மையைத்தான் சொல்லியிருக்கிறாள் என்று நான் நினைக்கிறேன். அவள் சொல்லுவதுபோல் உன்னுடைய உயிருக்கே தீங்கு நேரிடுமோவென்றும் அஞ்சுகிறேன்!'' என்று பூபேந்திரர் கூறினார்.

“என்? நான் அவர்களுக்கு என்ன கெடுதல் செய்தேன்? ஒன்றுமில்லையே?'' என்று வைத்தியர் பதைபதைத்துக் கேட்டார். ஏனெனில், பூபேந்திரர் சொன்ன வார்த்தைகள் அவருக்கு அச்சத்தை உண்டாக்கிவிட்டன. பயத்தினால் அவர் மிரள மிரள விழித்தார்.

“நரேந்திரா! இப்போது அவர்களுடைய எண்ணம் என்னவென்று கண்டுபிடிப்பது அசாத்தியம். அவர்களைப் பார்த்தால் உனக்குச் சந்தேகம் தோன்றவில்லை. அவர்கள் மிகவும் நல்லவர்களென்றும் சிநேகத்துக்குத் தகுந்தவர்களென்றுந்தான் நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனாலும், திடீரென்று ஒருவரிடம் நம்பிக்கை வைப்பது ஒரு சமயத்தைப் போலிராது. அதிலும் சென்னபட்டினத்தில் கேட்க வேண்டுமோ? இடையில் உயர்ந்த வேஷ்டி தரித்துக் கொண்டும், தலையில் சரிகைத் தலைக்குட்டை மாட்டிக் கொண்டும், உடம்பில் பட்டுச் சட்டை போட்டுக் கொண்டும், எத்தனையோ பெயர் பெரிய உத்தியோகஸ்தர்களைப் போல் பகல் முழுவதும் திரிகிறார்கள். இவர்களைப் பார்த்தால் பெரிய அந்தஸ்துடையவர்களென்றும், கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவர்

களொன்றும் நாம் நினைக்கவேண்டியிருக்கிறது. ஆனால், சூரியன் மறைகின்ற சமயத்தில் பார்த்தால் சட்டைப் பையிலிருக்கும் சிறு கத்தரிக்கோலைக் கையில் எடுத்துக்கொண்டு குறிஜிலிக்கடைப் பக்கமாய் வட்டமிட ஆரம்பிக்கிறார்கள். அயலூர் வாசிகளில் அநேகர் இவர்களிடம் ஏமாந்து போகிறார்கள் என்பதற்கு ஆயிரக்கணக்கான உதாரணங்க ளிருக்கின்றன. கழுத்துமணி அறுப்பதையும், சட்டைப்பையில் இருப்பதைச் சமயம் பார்த்து அடித்துக்கொண்டு போவதையும், இரவில் யாராவது அயர்ந்தால் வீட்டுக்குள் நுழைந்து அகப்படுகிற துணிமணிகளைச் சுருட்டிக் கொண்டு சத்தப்படாமல் வெளிவருவதையுமே தொழிலாகக் கொண்டிருக்கும் இந்தப் புண்ணிய புருஷர்களைப் பகலில் யாராவது பார்த்தால் சிறிதாவது சந்தேகப் படுவார்களா? ஒருவருடைய வெளித்தோற்றத்தையும் நடத்தையையும் கண்டு பட்டினத்தில் ஜனங்கள் ஏமாறுவதைப்போல் வேறு எவ்விடத்திலும் ஏமாற மாட்டார்கள். பசுத்தோலைப் போர்த்துக் கொண்டு திரியும் கொடும்புலிகள் சென்னையில் அதிகம். அப்படிப்பட்ட புலிகளுள் ஒன்றாய் ஜெயராம் ஏன் இருக்கக் கூடாது? ஆதலால், நாம் நாளையதினம் அவரைப் பற்றி வேறு சிலரை விசாரித்து உண்மையறியவேண்டும்'' என்று பூபேந்திரர் சொன்னார்.



## 9. வைத்தியம் பார்க்கச் சென்றது



மறுநாளன்று நரேந்திரரும் பூபேந்திரரும் காசுக் கடைத் தெருவுக்குச் சென்று ஜெயராம் என்பவருடைய காசுக்கடை எதுவென்று விசாரித்தார்கள். அப்படி விசாரித்ததில் அநேக விநோதமான உண்மைகள் புலப்பட்டன.

முதலாவது, ஜெயராம் என்னும் பேருடைய இரத்தின வியாபாரியே சென்னையில் இல்லையென்று தெரியவந்தது. ரத்தின வியாபாரம் செய்தபோதிலும் ஜெயராமுக்குச் சொந்தமான காசுக்கடை கிடையாது என்றும், இருந்தபோதிலும் சென்னையில் சொந்தக் கடை இருக்கிறது என்று அவர் கூறியிருப்பதால் மளிகை, ஜவுளி, முதலிய வேறு கடைகளிருக்கக் கூடுமென்றும் நரேந்திரர் நினைத்தார். இருவரும் ஒவ்வொரு மளிகைக் கடையிலும், ஜவுளிக்கடையிலும் நுழைந்து நுழைந்து புறப்பட்டார்கள். ஆனல் ஜெயராம் கடையை மட்டும் அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. இருந்தால் அன்றோ கண்டுபிடிப்பதற்கு! இப்படி விசாரிப்பதில் பிரயோஜனம் இல்லையென்று நினைத்துத் தபாலாபீசுக்குச் சென்று திருவொற்றியூரில் ஜெயராம் என்னும் பெயருடைய கனவான் இருக்கின்றாரா, இருந்தால் அவருடைய விலாசமென்ன, என்று அந்த ஆபீஸின் அதிகாரியைக் கேட்டார்கள். அவர் அப்படிப்பட்ட பெயருடன் திருவொற்றியூரில் எவருமேயில்லை என்று சொல்லிவிட்டார். முனிசிபல் ஆபிசுக்குச் சென்று விசாரித்தால் ஒரு சமயம் உண்மை புலப்படுமென்று நினைத்து இருவரும் அங்கு

சென்று விசாரித்தார்கள். அங்குள்ள உத்தியோகஸ்தர்கள் சிற்சில புஸ்தகங்களைப் புரட்டிப் பார்த்து விட்டு, தபாலாபீசர்களைப் போலவே பதில் சொல்லிவிட்டார்கள். இன்னும் பல இடங்களிற் சென்று விசாரித்தார்கள். ஆனாலும் ஜெயராமைப் பற்றி ஒரு விஷயமாவது தெரிந்துகொள்ள அவர்களால் முடியவில்லை. இருவருக்கும் உண்டான ஆச்சரியத்துக்கு அளவில்லை. இருவரும் மிகுந்த களைப்புடன் மறுபடியும் மைலாப்பூருக்குத் திரும்பி வந்து போஜனத்தை முடித்துக் கொண்டு மீண்டும் இவ்விஷயமாய்ப் பேச ஆரம்பித்தார்கள்.

"நரேந்திரா! நான் அப்போதே சொல்லவில்லையா? ஜெயராம் என்பவர் ஒரு பகல் வேஷதாரியென்றேனே? நான் சொன்னது சரியாய்ப் போய் விட்டது, பார்த்தாயா? மிஸ் ரோஸ்பரி உன்னை எச்சரித்தது நியாயந்தான்" என்று பூபேந்திரர் புன்சிரிப்போடு சொன்னார். நரேந்திரரும் ஆச்சரியத்தோடு சிரித்தார்.

"எனக்கும் அவ்வாறுதான் தோன்றுகிறது. ஆனாலும், ஜெயராம் என்னும் பெயருடைய அந்த மனிதன் சென்னபட்டினத்தி லென்ன செய்து கொண்டிருக்கிறாரென்று தெரியவில்லையே? ஆச்சரியமாக வன்றோ விருக்கிறது? காலை பத்துமணிக்குத் திருவொற்றியூரிலிருந்து புறப்பட்டால், இரவு எட்டு மணிக்குத்தான் மறுபடியும் வீட்டுக்குத் திரும்புகிறாராம். அவ்வளவு நேரம் பட்டினத்தில் அவருக்கு என்ன வேலையோ?" என்று நரேந்திரர் அதிசயத்தோடு கேட்டார்.

"வேலையென்ன? பட்டினத்தில் எத்தனை சோம்பேறிகள் பருந்து வட்டமிடுவதுபோல் வட்டமிட்டுக் கொண்டே திரிந்து யாராவது அயர்ந்தால், சமயம் பார்த்து அகப்பட்டதை அடித்துக்கொண்டு போவதையே தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுடைய தொழிலையே ஜெயராமும் கைக்கொண்டவரா யிருக்கலாம்" என்று பூபேந்திரர் பதில் சொன்னார்.

இவ்விதம் இவர்களிருவரும் பேசிக்கொண்டிருந்ததில் பொழுதுபோனதுகூட நரேந்திரருக்குத் தெரியவில்லை. மணி ஆறு அடிக்கவே, அவர் பூபேந்திரரிடம் சொல்லிவிட்டுத் தம்முடைய ஜாகையை விட்டுப் புறப்பட்டு வைத்தியம் பார்க்கவேண்டு மிடங்களுக்குச் சென்றார். ராயபுரம், வண்ணார்பேட்டை, புரசைவாக்கம் முதலான இடங்களுக்குச் சென்று எந்தெந்த வீட்டுக்குப்போய் வியாதியஸ்தர்களைப் பார்த்து மருந்து கொடுக்கவேண்டுமோ அந்தந்த வீட்டுக்குப் போய் மருந்து கொடுத்துவிட்டு இவர் வீட்டுக்குத் திரும்புவதற்குள் மணி எட்டாகி விட்டது. தான் பார்க்கவேண்டிய வேலைகளை யெல்லாம் பார்த்துவிட்டுப் புரசைவாக்கமிருந்து டிராம் வண்டியிலேறி ஜெனரல் ஆஸ்பத்திரியண்டை வந்து சேர்ந்தார்; மணி எட்டரை ஆயிற்று. ஒரு ஜட்கா வண்டியிலாவது, ரிக்ஷா வண்டியிலாவது ஏறிச் சென்றால் மைலாப்பூருக்குப் போய் நேராய் வீட்டடியில் இறங்கிவிடலா மென்று கருதி ஒரு வண்டிக்காகச் சிறிதுநேரம் ஜெனரலாஸ்பத்திரியண்டை காத்துக்கொண்டு நின்றார். ஜனங்கள் கும்பல் கும்பலாய்ப் போவதும் வருவதுமாக இருந்தார்கள். குதிரை வண்டிகளும், மோட்டார்

வண்டிகளும் இடைவிடாமல் ஒன்றன்பின் ஒன்ருய்க் கிழக்கு நோக்கி வருவதும், மேற்கு நோக்கிப் போவதுமா யிருந்தமையால், ரஸ்தாவில் நிற்பது அபாயத்துக்கு இடமாகுமென்று நினைத்து, ரஸ்தாவை ஒட்டி ஜெனரல் ஆஸ்பத்திரியைச் சேர்ந்தாப்போல் சுமார் காலடி உயரத்துக்கு எழுப்பப்பட்டிருக்கும் மேடையின்மேல் ஏறி நின்ருர். அவரைக் கண்டு வேருெருமனிதனும் அந்த மேடையிலேறி அவரை நெருங்கினுன்.

"வைத்தியரே! நாம் இருவரும் சந்தித்து ஒரு வாரத்துக்குமே லாகிறதல்லவா? அன்று ஜெயராம் வீட்டில் தங்களைப் பார்த்தபிறகு நான் ஒரு அவசர வேலையாய் வேலூருக்குப் போகும்படி நேரிட்டதால், போய்விட்டேன். நேற்று முன் தினந்தான் இங்கு வந்தேன்" என்று அந்த மனிதன் சொன்னுன்.

தன்னுடன் பேசிய மனிதன் அன்றுதினம் ஜெயராம் என்பவரின் மனைவி வைதேகியுடன் பேசிக்கொண்டிருந்தவரும், சங்கீதக் கச்சேரிக்கு இருந்துவிட்டுப் போகும்படி தன்னை வற்புறுத்தியவருமான சரவணன் என்னும் வாலிபரே என்பதை அறிந்துகொண்ட நரேந்திரர் அவரை முதலில் சந்தேகிக்க ஆரம்பித்தார். ஆனுலும், அவரைப் போலவே சரவணன் என்பவரும் ஜெயராம் விஷயத்தில் சந்தேகங்கொண்டவரைப்போல் வார்த்தையாடியபடியால் நரேந்திரர் அவரிடம் கொண்ட சந்தேகத்தை நீக்கிக்கொண்டு ஜெயராம் விஷயமாய் அவரிடம் பேச ஆரம்பித்தார்.

"ஐயா, ஜெயராம் விஷயம் மிகவும் சந்தேகத்துக்கு இடங்கொடுக்கிறதே? அவர் தனக்கு இரத்தின

வியாபாரமென்று சொன்னது பொய்யென்று சில தினங்களுக்கு முன் காசுக்கடைத் தெருவில் விசாரித்த தால் தெரியவந்தது. சென்னையில் சொந்தக்கடை தனக்கு இருப்பதாக அவர் என்னிடம் தெரிவித்தார். நான் என்னால் கூடியவரையில் விசாரித்துப் பார்த் தேன். அவருக்குக் கடை இருப்பதாகத் தெரிய வில்லை'' என்று நரேந்திரர் சரவணனிடம் கூறினார்.

சரவணன் என்பவர் முதலில் ஆச்சரியத்தோடு நரேந்திரரைப் பார்த்துவிட்டு, பிறகு எல்லாம் தெரிந் தவரைப் போல் அபிநயஞ் செய்துகொண்டே, "வைத் தியரே! உண்மையை நான் உம்மிடம் சொல்லி விடு கிறேன். ஜெயராம் என்பவரைப்பற்றி நீர் எப்படி ஒன்றும் உண்மையாய்த் தெரிந்துகொள்ள முடியாமல் மயங்குகிறீரோ அப்படியே நானும் மயங்குகிறேன். அவருடைய விஷயம், எவராலும் விடுவிக்க முடியாத ஒரு கடினமான விடுகதையைப் போலவே, இருந்து வருகிறது. முதலில் நாங்களிருவரும் ஒரு சாப்பாட் டுக் கடையில் சந்தித்தோம். அதன் பிறகு அடிக்கடி ஒருவரை யொருவர் காண்பதுண்டு. எங்களுடைய சிநேகம் பலப்பட்டபடியால், நான் திருவொற்றியூரி லிருக்கும் அவருடைய ஜாகைக்கு அடிக்கடி போவது முண்டு. ஆனாலும், அவர் என்ன செய்கிறார், எங்கு செல்லுகிறார், என்பதை அறிந்துகொள்ள முடிய வில்லை. என்னிடம் கடனாக அறுநூறு ரூபா கேட்டு வாங்கினார். அந்தப் பணம் இன்னும் எனக்கு வந்து சேரவில்லை'' என்று சரவணன் சொன்னார்.

"அப்படியானால், ஜெயராம் பெரிய பணக்காரர் அல்லரோ? அவரைப் பார்த்தால் ஒரு லட்சப் பிர புவைப்போல் காணப்படுகிறாரே? தாங்கள் சொல்லு

வதைப் பார்த்தால் ராப்பட்டினி பேர்வழி என்று நினைக்கவேண்டி யிருக்கிறதே?" என்று நரேந்திரர் கேட்டார்.

"பணக்காரரா? அவருக்கு சொந்தத்தில் ஒரு செப்புக் காசுகூட கிடையாது. ஏமாந்த எவனாவது அகப்பட்டால் அவனைக் குல்லாபோட்டு தாராள மாய்ச் செலவு செய்வார். அவர் எவ்விதம் ஜீவனோ பாயம் செய்துவருகிறார் என்பது ஒரு பெரிய ஆச் சரியமாகவே எல்லோருக்கும் இருந்து வருகிறது. அப்படிப்பட்டவருடைய சிநேகம் நல்லதன்றென்று நினைத்து நான் இப்போது விலகிக்கொண்டேன்" என்று சரவணர் கூறினார்.

"அவருடைய நட்புரிமை வேண்டுவதில்லை என் பதே எனது கருத்துமாகும். முதலில் ஜெயராம் என்பவருடைய மூத்த புத்திரி விஜயாவுக்கு உடம்பு அசௌக்கியமா யிருந்தது காரணமாக, சஞ்சீவி வைத் தியர் மூலமாய் நான் அவருடைய வீட்டுக்கு வைத்தி யம் பார்க்கும்பொருட்டுச் சென்றேன். அவரும் அவருடைய மனைவி வைதேகியும் மிகுந்த அன்புள்ள வர்களைப்போல் நடித்து என்னை அடிக்கடி தங்கள் வீட்டுக்கு வரும்படி சொன்னார்கள். ஐயா! என்னை மெதுவாகத் தட்டிக்கொடுத்து ஏதாவது பணம் பறிக்கலாம் என்பது அவர்களுடைய உத்தேசம் போலும்! அவ்விதம் அவர்கள் உத்தேசித்திருப்பார் களானால், கட்டாயம் ஏமாந்தே போவார்கள். ஏனெ னில், நான் பரம ஏழை!" என்று நரேந்திரர் சொன்னார்.

"ஜெயராம் கடனாகப் பணங் கேட்டால் நீங்கள் கொடுக்க வேண்டாம். கொடுத்தால் அந்தப் பணம்

திரும்பவராது. நாம் ஜாக்கிரதையாக அவருடைய விஷயங்களைக் கவனித்து வந்தால், ஜீவனத்துக்கு அவர் என்ன செய்கிறார் என்பதைக் கண்டுபிடித்து விடலாம்'' என்று சரவணர் யுக்தி சொன்னார்.

"அது இருக்கட்டும்; ஜெயராம் வீட்டுக்கு அடிக்கடி ஒரு ஐரோப்பிய ஸ்திரீ வந்துகொண்டிருக்கிறாளே, அவள் யார் என்று தங்களுக்குத் தெரியுமோ? அவளை நீங்கள் எப்போதாவது பார்த்ததுண்டோ? ஜெயராம் வீட்டார் அவளை 'மிஸ் ரோஸ்பரி' என்று கூப்பிடுகிறார்கள். அவளைப்பற்றி நீங்கள் ஏதாவது கேள்விப்பட் டிருக்கிறீர்களோ?'' என்று நரேந்திரர் தம்முடன் பேசிக்கொண்டிருந்த வாலிபனைக் கேட்டார்.

சரவணருடைய முகம், 'மிஸ் ரோஸ்பரி' என்ற வார்த்தையைக் கேட்டதும், ஒருவிதமான மாறுதலடைந்தது. ஆனால் அவர் உடனே அந்த மாறுதல் புலப்படாத விதமாய் நடிக்க ஆரம்பித்தார். இருந்த போதிலும் நரேந்திரர் அதைக் கவனிக்காமற் போகவில்லை.

"நரேந்திரரே! நான் அந்த ஐரோப்பிய ஸ்திரீயைப் பார்த்ததுமில்லை; அவளைப்பற்றிக் கேள்விப்பட்டதுமில்லை! இப்போது மவள் ஜெயராம் வீட்டில் இருந்து வருகிறாளோ?'' என்று சரவணர் கேட்டார்.

"இல்லை; அவள் இங்கிலாந்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டாள் என்று நினைக்கிறேன்'' என்று வைத்தியர் பதில் சொன்னார்.

மிஸ் ரோஸ்பரி என்னும் பெயரைச் சொன்ன மாத்திரத்தில் சரவணருடைய முகத்தில் உண்டான மாறுதலையும், உடனே அவர் அவ்விதம் உண்டான

மாறுதலை மறைக்க எத்தனித்ததையும், அவளைப்பற்றி ஒன்றும் தெரியாதென்று அவர் மறைத்துக் கூறினதையும் நரேந்திரர் எளிதில் அறிந்துகொண்டாராதலால், அவரிடத்தில் நரேந்திரருக்குச் சந்தேகம் உண்டாகிவிட்டது. அதனால் அவரிடம் இவ்விஷயமாய்ப் பேசுதல் நலமன்றென்று நினைத்து "சரவணரே! நேரமாகிறது; நான் போய்வருகிறேன். இன்னொரு சமயம் நாம் அவசியம் சந்திக்கவேண்டும்" என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு செல்ல எத்தனித்தார்.

"வைத்தியரே! நான் தங்களிடத்தில் ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றிப் பேசுதற்கு வந்தேன். வந்த விஷயத்தைக் குறித்துப் பேசாமல், ஏதேதோ வீண் விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண் டிருந்து விட்டோம். என்னுடைய சிநேகிதன் ஒருவன் மிகவும் கடுமையான ஜுரத்தால் வருந்திக்கொண் டிருக்கிறான். அவனுடைய உற்றார் உறவினர்கள் திருநெல்வேலியில் இருக்கிறார்கள். அவன்மட்டும் இங்கு தனியாய் வசிக்கிறான். அவன் மிகவும் ஏழையாயிருப்பதால் சரியான வைத்தியர்களைக் கொண்டு மருந்து கொடுக்க முடியாம லிருக்கிறது. அவன் தங்கசாலை வீதியில் ஒரு தனி வீட்டில் இருக்கிறான். தாங்கள் அவனை வந்து பார்த்து ஏதாவது மருந்து கொடுத்தால் புண்ணியமுண்டு" என்று சரவணர் சொன்னார்.

"இன்றிரவே வரவேண்டுமோ?" என்று வைத்தியர் கேட்டார்.

"வந்தால் நலந்தான். ஏனெனில், அவனுடைய நிலைமை மிக அபாயகரமா யிருக்கிறது" என்று சரவணர் சொன்னார்.

"ஆனால் சரி; நீங்கள் போய் சாப்பிட்டுவிட்டு சௌகார் பேட்டை தபாலாபீஸில் வந்திருங்கள். நானும் வீட்டுக்குப் போய் ஆகாரம் செய்துகொண்டு உடனே திரும்பி அந்த இடத்துக்கு வந்து சேருகிறேன். பிறகு இருவரும் சென்று அந்த வியாதியஸ்தனைப் பார்க்கலாம்" என்று சொல்லி நரேந்திரர் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு மைலாப்பூருக்குச் சென்றார். சரவணர் மற்றொரு திக்கை நோக்கிச் சென்றான். மைலாப்பூர் சென்றதும் பூபேந்திரர் நரேந்திரர் இருவரும் சாப்பிட்டார்கள். சாப்பாடு முடிந்ததும் பழையபடியும் வெளியே புறப்பட நரேந்திரர் எத்தனித்தார். அச்சமயத்தில் வேலைக்காரன் வந்து, "தங்களைத் தேடிக்கொண்டு ஒருவர் இங்கே வந்தார்" என்று சொன்னான்.

"அவர் எங்கிருந்து வந்தார்? அவருடைய அங்க அடையாளமென்ன?" என்று வேலைக்காரனை நரேந்திரர் சந்தேகத்துடன் கேட்டார்.

"பருத்து உயர்ந்த சரீரமுடையவரா யிருந்தார். சுமார் நாற்பது வயது இருக்கலாம். சௌகார்பேட்டையி லிருந்து வந்ததாகமட்டும் சொன்னார். தன்னுடைய பெயர் யாதென்றும், என்ன வேலையாய் வந்ததென்றும் அவர் என்னிடம் சொல்லவில்லை. காலைநேரத்தில் பத்துமணிக்கு முன்பு வந்தால் தங்களைப் பார்க்கலாமென்று நான் சொன்னேன். நாளைய தினம் வருவதாகச் சொல்லிப் போயிருக்கிறார்" என்று வேலைக்காரன் சொன்னான்.

வேலைக்காரன் சொன்ன விஷயம் நரேந்திரருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. தன்னைத் தேடி

வந்தது ஜெயராமாக இருக்கக்கூடுமோ வென்று முத லில் சந்தேகித்தார். ஆனால், அவன் சொன்ன அங்க அடையாளங்களைக் கொண்டு, வந்தவன் ஜெயராம் அல்லவென்று தெரிந்துகொண்டாரேனும் இரவு பத்துமணிக்குமேல் சௌகார் பேட்டையிலிருந்து ஒரு மனிதன் தன்னைத் தேடிக்கொண்டு மைலாப் பூருக்கு வருவதற்கு என்ன காரணம் இருக்கக்கூடு மென்பது மட்டும் அவருக்குப் புலப்படவில்லை. நரேந் திரர் பற்பலவிதமாய் யோசிக்கலானார்.

“சைதாப்பேட்டைக்குச் சென்று மிஸ் ரோஸ் பரியைக் கண்டு விசாரித்தால் உண்மை புலப்படுமல் லவா? நானோ அவளிடம் அடங்காக் காதல் கொண் டிருக்கிறேன். ஆனால், அவளோ தனக்கு விவாக மாகிவிட்டதாகச் சொல்லுகிறாள். என்ன செய்ய லாம்? எனக்கு ஆயிரம் பொன் கொடுத்த மனிதன் தேன்மெழுகு கேட்டு வாங்கிக்கொண்டு சதானந்த ருடைய வைத்தியசாலையை விட்டுப் போனது முதல், பஞ்ஞா நாட்டில் நடந்திருக்கும் அதிசயமான சம்ப வங்கள் இதுவரையிலும் புலப்படாதிருக்கின்றன. இவ்விதமிருப்பது எனக்கு ஒருபக்கத்தில் ஆச்சரியத் தைக் கிளப்பி விட்டிருக்கிறது. மற்றொருபக்கத்தில் மிஸ் ரோஸ்பரியின் அழகு என்னை வருத்துகின்றது. ஜெயராம் வீட்டில் அவள் விவாகம் ஆகாதவளைப் போல் நடித்ததற்குக் காரணமென்ன? அவ்விதம் அவள் நடித்ததற்கு முக்கியமான முகாந்திரம் இருக்கத் தான் வேண்டும். ஆனாலும், அந்த முகாந்திரம் இன்னதென்று தெரியவில்லையே? அவளை நேரில் கண்டு விசாரித்தாலொழிய நான் தெரிந்துகொள்ள வேறு மார்க்கமில்லை. ஆதலால், சைதாப்பேட்டைக்

குப் புறப்பட்டுப் போகவேண்டியது அவசியந்தான்' என்று நரேந்திரர் தன்னைத்தானே கேட்டு முடிவு செய்துகொண்டார்.

இவ்விதமாக நரேந்திரர் யோசிப்பதும் முடிவு செய்வதுமாக இருந்தபோது, சரவணர் தனக்காக சௌகார்பேட்டை தபாலாபீஸில் காத்துக்கொண் டிருப்பார் என்னும் ஞாபகம் அவருடைய மனத்தில் தோன்றிற்று. உடனே பூபேந்திரரிடம் சொல்லி விட்டு ஒரு ஜட்காவண்டி பிடித்துக்கொண்டு மைலாப் பூரிலிருந்து, சௌகார்பேட்டை தபால் ஆபீஸுக்கு வந்து சேர்ந்தார். அவர் எதிர்பார்த்தபடியே சரவ ணன் அங்கு காத்துக்கொண்டிருந்தான். நரேந்திர ரைக் கண்டதும், "வைத்தியரே! நான் என்னுடைய சிநேகிதனிடத்தில் நீர் வருவீரென்றும், தகுந்த மரு ந்து கொடுப்பீர் என்றும் சொன்னேன். அவன் மிகுந்த ஆவலுடன் உம்மை எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறான்" என்று சரவணர் கூறினார்.

"ஆனல் சரி; வாருங்கள்" என்று நரேந்திரர் கூறவே, சரவணர் அவரை அழைத்துக்கொண்டு வடக்கு நோக்கிச் சென்றார். கொஞ்சதூரம் அதே தெருவில் சென்றதும், சரவணர் மேற்கு முகமா யிருந்த ஒரு பெரிய மாடிவீட்டுள் நரேந்திரரை அழைத் துக்கொண்டு போனார். வீட்டின் இரண்டாவது கட்டிலிருந்த கதவு சாத்தப்பட்டிருந்ததால், சரவணர் கதவைத் தட்டினார். சுமார் இருபது வயதுள்ள ஒரு பெண் கதவைத் திறந்து நரேந்திரரையும் சரவணரை யும் உற்று நோக்கி, வந்தது சரவணர் என்பதைத் தெரிந்துகொண்டவுடன் உள்ளே போய்விட்டாள். இரண்டாவது கட்டையும் தாண்டி உள்ளேபோனதும்

ஒரு கதவு திடீரென்று திறக்கப்பட்டது. அக்கதவின் வழியாக யாரோ ஒருவர் எட்டிப் பார்த்துவிட்டு மறுபடியும் கதவைச் சாத்திக்கொண்டார். சரவணர் நரேந்திரரை மாடிக்கு அழைத்துக்கொண்டு போனான். மாடியின் மீது விளக்கு எரியவில்லை. முதலில் வந்து கதவைத் திறந்த பெண் தன் கையிலிருந்த மெழுகு வர்த்தியைச் சரவணரிடம் கொடுத்துவிட்டு உள்ளே சென்றுளாதலால், அந்த மெழுகுவர்த்தியைக் கையில் பிடித்துக்கொண்டு சரவணர் முன்னே சென்றார். அவர் பின்னே நரேந்திரர் சென்றார். மாடியின்மேற் சென்றதும் சரவணர் ஒரு சிறு கதவைச் சத்தப்படா மல் மெதுவாகத் திறந்து நரேந்திரரை உள்ளே அழைத்துக்கொண்டுபோய் ஒரு நாற்காலியில் உட் காரச் சொல்லி, "வைத்தியரே! இங்கேயே இருங்கள் நோயாளி அடுத்த அறையில் படுத்திருக்கிறார். நான் சென்று நீங்கள் வந்திருப்பதாகச் சொல்லிவிட்டுப் பிறகு வந்து உங்களை அழைத்துப் போகிறேன்" என்று மெதுவாகச் சொல்லிவிட்டுக் கதவைச் சாத் திக்கொண்டு வெளியே சென்றார்.

நரேந்திரர் இருந்த அறை, ஒரு பாழடைந்த அறையாக இருந்தது. காற்று நுழைவதற்கோ வழி யில்லை. வெளிச்சம் இல்லாததால் ஒரே இருள் சூழ்ந்துகொண்டிருந்தது. சுமார் ஒருமணி நேரம் வரையில் சரவணரை எதிர்பார்த்தபடியே வைத்தியர் உட்கார்ந்திருந்தார். மெத்தைப் படிக்கட்டின் கதவை யாரோ சாத்தி வெளியில் பூட்டுப்போடுவதைப்போல் நரேந்திரருக்குக் கேட்டது. உடனே அவருக்குச் சந்தேகம் உண்டாகி, "சரவணரே; சரவணரே!" என்று உரத்துப் பலமுறை கூப்பிட்டார். ஒன்றும்

பதில் கிடையாது. "சரவணரே; நான் உள்ளே வர லாமா?" என்று பழையபடியும் கூப்பிட்டார் அதற்கும் பதில் இல்லை. கடைசியில் வைத்தியர். கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்து பக்கத்தில் இருந்த அறைக்குள் நுழைந்தார்.

அந்த அறை மிகச் சிறிதாயும் ஒரே ஒரு சிறு ஜன்னல் உடையதாயும் இருந்தது. ஒரு விளக்கு மிகவும் மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. அறையின் ஒரு பக்கத்தில் ஒரு பெரிய கட்டில் கிடப்பதையும், அதன்மேல் யாரோ ஒருவர் படுத்திருப்பதையும் நரேந்திரர் கண்டுபிடித்துவிட்டார். படுத்திருப்பவருடைய சரீரம் தெரியாதபடி உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் ஒரு துப்பட்டியால் மூடப்பட்டிருப்பதுபோல் நரேந்திரருக்குத் தோன்றிற்று. அவர் சத்தப்படாமல் படுக்கையை நெருங்கித் துப்பட்டியை மெதுவாக நீக்கினார். ஆ! அப்படி அவர் நீக்கியதும் நிகழ்ந்த சம்பவத்தை என்னென்று சொல்லுவது? ஒரு கருமையான வஸ்து "புஸ்; புஸ்" என்று சப்தித்துக்கொண்டே வெளிப்புறப்பட்டு, நரேந்திரருடைய முன்கையைப் பலமாய்ப் பற்றியது. நரேந்திரர் ஓவென்று அலறிக்கொண்டே தூர விலகினார். சிறிது நேரத்திற்கெல்லாம் உண்மை புலப்பட்டது. துப்பட்டிக்குள் இருந்தவன் நோயாளி அல்லவென்றும், ஒரு பெரிய நல்லபாம்பு அதற்குள் இருந்ததென்றும், நரேந்திரருக்குத் தெரிந்த உடன் அவருக்கு உண்டான அச்சம் இவ்வளவென்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ? கட்டிலின் கீழே ஒரு பெரிய சவப்பெட்டி திறந்தபடியே வைக்கப்பட்டிருந்ததைக் கண்டவுடன் அவருடைய பயம் இன்

னும் அதிகப்படுவதாயிற்று. சரவணன் தன்னை ஏமாற்றிக் கொலைசெய்ய இந்தச் சூழ்ச்சி செய்தான் என்றும், தன்னைப் பாம்பு நன்றாய்க் கடித்துவிட்ட தென்றும், தனக்காகவே அந்தச் சவப்பெட்டி வைக்கப்பட்டிருக்கிற தென்றும் நரேந்திரர் தெளிவாயும் நிச்சயமாயும் அறிந்துகொண்டார். வைத்தியர் ஒன்றும் தோன்றாமல் ஸ்தம்பம்போல் சிறிது நேரம்—பாம்பு கடித்ததனா லுண்டான வலியையும் பொருட்படுத்தாமல்—அசையாது நின்றார்.

“வைத்தியம் பார்க்கச் சென்றது இவ்விதம் அரவங் கடித்து ஆவி யிழப்பதற்குத்தானா?” என்று நினைத்தார்.



## 10. தங்கசாலை வீதியில் ஆரவாரம்



நரேந்திரர் பயித்தியம் பிடித்தவர்போல் இங்குமங்கும் ஓடுவதாக இருந்தார். கதவுக்குச் சமீபத்திற் சென்று கதவைத் திறக்கப் பார்த்தார். ஆனால், கதவு வெளியே பூட்டப்பட்டிருந்தது. ‘ஏ! கொலைபாதகர்களே; சதிகாரர்களே!” என்று அவர் பயத்தினால் வாய்க்கு வந்தபடியெல்லாம் திட்டினார். அந்த அறையிற் கிடந்த காகிதக் குப்பலில் சலசலவென்று உண்டான சத்தத்தால், தன்னைக் கடித்த பாம்பு எங்கோ சென்று ஒளிந்துகொள்ளப் பார்க்கின்ற தென்பதை அறிந்த நரேந்திரர், அங்குக் கிடந்த ஒரு நாற்காலியைத்தூக்கி அதன்மேல் விட்டெறிந்து அதைக்கொன்றுவிட்டார். இனி, தான் பிழைக்கப்போகிறதில்லை

யென்பதை நரேந்திரர் நன்றாய் அறிந்துகொண்டார். நடுக்கடலில் அகப்பட்டவனுக்கு ஒரு சிறு துரும்பு கிடைத்தாலும், அதைக்கொண்டு அவன் கரைவந்து சேர முயற்சி செய்தல் சகஜந்தானே? அதைப்போல் தன்னுடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நரேந்திரர் முயன்றார். தான் போட்டிருந்த சட்டையைச் சிறு துண்டந் துண்டமாக மெல்லிதாய்க் கிழித்து, ஒன்றோடொன்று முடிந்து, ஒரு மெல்லிய கயிறு போல் திரித்து, பாம்பு கடித்த இடத்துக்குமேல் சிறிது தூரத்தில் நன்றாய் இறுகக் கட்டிவிட்டுத் தன்னிட மிருந்த பேனாக்கத்தியால் பாம்பு கடித்த இடத்தை நன்றாய்க் குத்தி இரத்தத்தை வாயால் உறிஞ்சி உறிஞ்சிக் கீழே துப்பினார்.

யாரோ ஒருவன் நோயினால் வருந்துவதாக ஊராருக்குத் தெரியும்படி சில நாளைக்கு ஒருவனைப் படுக்கையில் போட்டுவைத்து, பல வைத்தியர்களைக் கொண்டு அவனுக்கு வைத்தியம்பார்க்கச் சொல்லிக் கடைசியில் அவனை அப்புறப்படுத்திவிட்டுத் தன்னைக் கொன்று அந்தச் சவப்பெட்டியில் அடக்கஞ்செய்து, நோயினால் வருந்தியவனே இறந்துபோனானென்று ஊரார் நினைத்துக்கொள்ளும் விதமாய்த் தன்னைக் கொண்டுபோய்ப் புதைத்துவிட சரவணரும் அவருடைய கூட்டத்தாரும் யோசித்து இவ்விதமாய்ச் சூழ்ச்சி செய்திருக்கிறார்கள் என்பதை நரேந்திரர் நன்றாக அறிந்துகொண்டார். ஆம்; வாஸ்தவந்தானே? இப்படிப்பட்ட கொலைகள் சென்னையிலும் அதைப் போன்ற பெரிய பட்டினங்களிலும் கணக்கு வழக்கின்றி நடக்கின்றன. ஆனாலும், உண்மை வெளிவருகிறதில்லை. இப்படிப்பட்ட படுகொலைகள் செய்ய

எத்தனிப்பவர், பிறர் சந்தேகிக்காதபடி தங்களுடைய தொழிலைச் செய்துவிடுகிறார்கள்.

நரேந்திரருடைய நிலைமை இச்சமயம் எவ்விதம் இருக்குமென்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ? ஜெயராம் வீட்டிலேயே அவருக்கு அபாயம் நேரிட்டிருக்கும். ஆனால், மிஸ் ரோஸ்பரி அவரை எச்சரித்துக் காப்பாற்றினாள். ஆனால், ஜெயராம் வீட்டாரே இப்போதும் இவ்வித சூழ்ச்சி செய்துவிட்டார்களென்று நரேந்திரர் நினைத்தார். சரவணரை ஜெனரல் ஆஸ்பத்திரியில் தற்செயலாய்ச் சந்தித்திருக்க, இப்படிப்பட்ட விபத்துக்குத் தான் உள்ளானது வைத்தியருக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. ஜெயராம் என்பவரை மிகவும் வெறுத்தவரைப் போலவும், அவருடைய கெட்ட நடத்தையைக் கண்டு, விலகிக்கொண்டவரைப்போலவும் சரவணர் தன்னிடத்தில் பேசிக்கொண்டிருந்தது வெளிவேஷம் என்றும், அவர் ஜெயராமுக்குச் சாதகமாய் உள்ளுக்குள் வேலைசெய்து வருகிறார் என்றும் நரேந்திரர் இப்போது அறிந்துகொண்டார்; கதவைத் தன்னுடைய பலங்கொண்டவரையில் தட்டினார்; உடைத்துக்கொண்டு வெளியே செல்ல முயற்சிசெய்தார். அந்த அறையில் கிடந்த நாற்காலியைத் தூக்கிக் கதவுமேல் விட்டெறிந்தார். நாற்காலி உடைந்ததே யொழிய கதவு சிறிதும் திறக்கவில்லை. கெட்டியான உயர்ந்த தேக்கு மரத்தால் செய்யப்பட்ட கதவானதால், அதனை உடைப்பது சாத்தியமாகாத விஷயமாயிருந்தது. ஜன்னலைப் பெயர்த்தெறிந்துவிட்டு வெளியே போகலாமென்று நினைத்தார். ஜன்னல் பலமாக மூடப்பட்டிருந்ததோடு அதிக பலம் பொருந்திய இரும்புச் சட்டங்களில் கோத்து ஆழப்

புதைக்கப்பட்டதாயும் இருந்ததால், அவ்விதம் செய்யவும் நரேந்திரரால் முடியவில்லை. ஜன்னலின் கண்ணாடிக் கதவுகளைமட்டும் அவர் உடைத் தெறிந்துவிட்டு, ஜன்னலின் வழியாய் "உதவி செய்யுங்கள்! உதவி செய்யுங்கள்!" என்று தன் பலங்கொண்ட வரையில் உரத்து ஓலமிட்டார். ஆனால், ஏனென்று கேட்பவரைக் காண்பதே அரிதாயிருந்தது.

இரவுக் காலங்களில் தங்கசாலை வீதியில் ஆரவாரம் எவ்வளவு உண்டானபோதிலும், ஒருவரும் கவனிக்கும் வழக்கமில்லை. அவரவர்கள் தங்கள் தங்கள் வேலையைக் கவனிப்பார்களே ஒழிய ஆபத்திலகப்பட்டவர்களுக்கு உதவிசெய்ய வரமாட்டார்கள். சென்னபட்டினத்தில் இப்படி நேரிடுவது பெரிய ஆச்சரியமே? ஒரு வீட்டுக்குள் கொலை நடந்தபோதிலும் சரியே, கொள்ளை நடந்தபோதிலும் சரியே. அடுத்த வீட்டுக்காரர்கள் எட்டிப்பார்க்கமாட்டார்கள். 'இராமனாண்டாலென்ன இராவணன் ஆண்டா லென்ன' என்று நினைத்துத் தங்கள் வேலையில் கண்ணுங் கருத்துமாய் இருப்பார்கள்.

ஊர் ஜனங்கள்தா னிப்படி யென்றால், போலீஸார் அவர்களைவிட அதிகமாய்த்தா னிருக்கிறார்கள். இராத்திரி வேளைகளில் ஜனங்களைப் பாதுகாப்பதற்காகவே போலீஸ் சேவகர்களைப் பாராவில் இருக்கும்படி மேலுத்தியோகஸ்தர்கள் நியமித்திருக்கிறார்கள். ஆனாலும், நடுராத்திரியில் ஒரு வீட்டில் கொலை நடந்தபோதிலும், கொள்ளை நடந்தபோதிலும், அல்லது கலகம் நடந்தபோதிலும், ஒரு போலீஸ் சேவகனை அச் சமயம் உதவிக்கு எதிர்பார்த்தல் முடியாது. பாராவி லிருப்பதாகச் சொல்லிவிட்டு ஒழிந்த திண்ணை

ஒன்றில் படுத்துச் சுகமாய் நித்திரைபுரிய இந்தச் சேவகர்களுக்குத் தெரியுமே ஒழிய, உள்ளபடியே தங்கள் கடமையை உணர்ந்து நடக்கத் தெரியாது. தப்பித் தவறி இரண்டொரு சேவகர் பாராவில் இருந்தபோதிலும், "கொலை" அல்லது "கொள்ளை" என்ற வார்த்தைகளைக் கேட்டவுடன் காததூரம் சென்று பதுங்கிவிடுவார்கள்! அயலூரிலிருந்து வந்த யாராவது கண்மறைவான இடத்தில் மலஜலங் கழிக்கச் சென்றால் அதைக் கவனமாய்ப் பார்த்திருந்து அவர்களைப் பிடித்துக்கொண்டு போவதில் இவர்கள் காட்டும் வீரத்தைப்போல் மற்றப் பெரிய சம்பவங்களில் காட்டுவதற்கு இவர்களுடைய மனம் துணிகிறதில்லை. போலீஸாருக்குத் தெரியாமலே பெரிய பட்டிணங்களில் எத்தனையோ கொலைகள் நடக்கின்றன. அவர்கட்குத் தெரியாமலே நடந்தனவும், நடப்பனவுமான கொலைகளை எண்ணிச் சாத்தியமாகுமோ? அவர்களுக்குத் தெரிந்தும், தெரியாதவர்களைப்போல் அவர்கள் இருந்துவிடுகிறதனாலே தப்பித்துக்கொண்ட கொலைபாதகர்களும், கொள்ளைக்காரர்களும் ஊரில் இல்லாமற் போகவில்லை. ஆனாலும், மேலதிகாரிகள் மீது நாம் குறை கூறுவதில் பலனில்லை. அவர்கள் ஜனங்களுடைய க்ஷேமத்தையும், தேசத்தின் அமைதியையும் பொருள்களின் பாதுகாப்பையும் மிகுதியும் கருதியே போலீஸ் சேவகர்களை நியமித்திருக்கிறார்கள். இந்தச் சேவகர்கள் தங்களுடைய கடமையை உணராமல் இருந்தால், மேலதிகாரிகள் என்ன செய்யக்கூடும்? தகுந்த கல்வியும், உபகார சிந்தையும் இச் சேவகர்களுக்குப் போதுமானபடி இருந்தால், இவர்களும் இப்போது நடந்துவருவது

போல் நடக்கமாட்டார்கள். ஆதலால், நாம் இவர்களைக் குறை கூறுவதிலும் பயனில்லை. இவ்வளவு தூரம் சொன்ன பிறகு, நரேந்திரர் போட்ட பெருங் கூச்சலைக் கேட்டு ஒரு போலீஸ் சேவகனாவது அவருக்கு உதவிசெய்ய அன்றிரவு வரவில்லை என்பதை நாம் சொல்லுவது அநாவசியமாகும்.

பாம்பு கடித்ததனாலுண்டான வலியும் மயக்கமும் நரேந்திரருக்கு வரவர அதிகமாயின. என்ன செய்வார் பாவம்! அவர் மிகவும் கைதேர்ந்த வைத்தியர் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. பாம்பு கடிக்கு ஆயிரம் மருந்துகள் அவருக்குத் தெரியும்; அவரிடத்திலேயே இருக்கின்றன. தெரிந்து என்ன பிரயோஜனம்? இருந்து என்ன பலன்? இச் சமயத்துக்கு ஒன்றும் பயன்படவில்லை. பொறியிலகப்பட்ட எலியைப்போலும், வலையி லகப்பட்ட மான்போலும், கூட்டி லகப்பட்ட சிம்மத்தைப்போலும் அவர் அந்தப் பாழும் வீட்டுக்குள் அகப்பட்டுக்கொண்டாரே! வீட்டை விட்டு வெளிச் செல்வதற்கு முடிந்தாலல்லவா பாம்பு கடிக்கு மருந்து போடக்கூடும்? இன்னது செய்கிறதென்று தோன்றாமல் நரேந்திரர் பிரமித்து நிற்கும் போது, வெளிப்பக்கத்தில் கதவண்டையில் யாரோ இருவர் பேசுகிற குரல் அவருடைய காதில் விழுந்தது.

"பாதகர்களே! அங்கேயே நில்லுங்கள்! நான் உங்களைப் பழிக்குப் பழி வாங்காமற் போகமாட்டேன்! தப்பித்துக்கொள்ளலாமென்று நினைக்காதீர்கள்!" என்று நரேந்திரர் கோபத்தோடு கூவினார்.

இவர் இவ்விதம் கடிந்து கூறினதற்குக் கலகலவென்று நகைக்கும் சத்தம் பதிலாயிற்றே ஒழிய வேறு பதில் இல்லை.

வெளியே பேசிக்கொண்டிருந்த இருவரில் ஒரு வர் சரவணரா யிருக்கக்கூடுமோவென்று நரேந்திரர் சந்தேகித்தார். ஆனாலும், நிச்சயமாய் அவர் என்று சொல்ல அவரால் முடியவில்லை. தான் இற ந்துபோவது நிச்சயமென்றே அவர் எண்ணினார். அவ்விதம் எண்ணியபோது அவருக்கு உண்டான பயத்தினால் அவருடைய இருதயம் பனிப் பாறை யைப்போல் உறைவதற்கு ஆரம்பித்தது. ஜீவன் பிரியப்போகும் சமயத்தில் ஒருவனுக்குப் பழைய ஞாபகங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் விரைந்து வரு வதைப்போல், நரேந்திரருக்குப் பழைய எண்ணங் கள் எல்லாம் ஞாபகத்துக்கு வந்தன. சதானந்தர் வைத்தியசாலைக்கு வந்து தனக்கு ஆயிரம் பொன் கொடுத்த மனிதனுடைய உருவம் அவர் கண் முன் தோன்றுவதுபோ லிருந்தது. புரவிமீது வந்த பூங் கொடியாகிய தேவகியின் உருவம் எதிரில் நிற்பது போலிருந்தது. கற்பகச் சோலையில் கிடந்த நோ யாளியாகிய ஞானசேகரரும், கூன்முதுகனான கந்த னும் நரேந்திரருடைய மனக்காட்சிக்குப் புலப்பட் டார்கள். மிஸ் ரோஸ்பரி தன்னுடைய பக்கத்தில் நிற்பதுபோல் அவருக்குத் தோன்றிற்று. நரேந்திர ருடைய மனத்தில் உண்டான பழைய ஞாபகங்களைப் பற்றி விவரமாய் இங்கு சொல்லுவதென்றால் சாத்திய மாகாது. ஆதலால் சதானந்தர் வைத்தியசாலைக்கு அன்றிரவு வந்த பெயர் தெரியாத மனிதன் சிகிச்சை செய்துகொண்டு போனது முதல் இந்த நிமிஷம் வரையில் நடந்த அதிசயமான சம்பவங்கள் ஒன்றன் பின் ஒன்றாய் அவருடைய ஞாபகத்துக்கு வந்தன என்று மாத்திரம் சொல்லி முடிப்போம்.

ஞானசேகரருக்கும், ஜெயராமுக்கும் அந்தரங்கமாய் ஏதாவது சம்பந்தம் ஏற்பட்டிருக்கக் கூடுமோவென்று நரேந்திரர் நினைத்தார். அவர்களுக்குள் ஏதாவது சம்பந்தம் ஏற்பட் டிருக்கவேண்டுமென்றே அவருக்குத் தோன்றிற்று. ஆனாலும் எவ்விதமான சம்பந்தம் என்பதுமட்டும் புலப்படவில்லை. கற்பகச் சோலையில் ஞானசேகரரும், அவரைச் சேர்ந்த தேவகி நந்தன் முதலானவர்களும் சாராயத்தில் மயக்க மருந்தைக் கலந்து கொடுத்துத் தன்னைக் கொல்லப் பார்த்தார்கள் என்பதையும், இங்கே ஜெயராமும் அவரைச் சேர்ந்தவர்களும் பாம்பைவிட்டுக் கடிக்கும்படி செய்து தன்னைக் கொல்லப் பார்த்தார்கள் என்பதையும் நினைத்தபோது இவர்களிருவருக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கவேண்டு மென்பதுமட்டும் நரேந்திரருக்கு நிச்சயமாய்ப் புலப்பட்டது. ஆனால், இவ்விதம் இவர்கள் அவரைப் பழிவாங்குவதற்கு முயற்சி செய்யக் காரணமென்ன வென்று அவருக்குத் தெரியவில்லை. அவர்களுக்கு நரேந்திரர் எவ்வகையான கெடுதலும் செய்யாதிருக்கும்போது அவர்கள்மட்டும் இவருடைய உயிரைவாங்க எத்தனித்தது வைத்தியருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. நரேந்திரர் ஒன்றுந் தோன்றாமல் அந்த அறைக்குள் திகிலுடன் நின்று கொண்டிருந்தார்.

மறுபடியும் வெளியே இரண்டு மூன்று பெயர்கள் கலகலவென்று வாய்விட்டுச் சிரித்த சத்தம் அவருடைய காதில் விழுந்தது.

“ஏ! கொலைபாதகர்களே! நான் இறந்துபோனபோதிலும் நீங்கள் தப்பித்துக்கொள்ள மாட்டீர்கள். உங்களுக்குச் சரியான தண்டனை கிடைக்காமற்

போகாது. உங்களையும் உங்களுடைய சதியாலோசனையையும் அறிந்தவன் நான் ஒருவனே என்று நினைக்க வேண்டாம். இன்னும் பலர் அறிந்திருக்கிறார்கள். என்னை நீங்கள் கொன்றுவிட்டாலும் அவ்விதம் செய்ததற்காக அவர்கள் உங்களைப் பழிக்குப் பழி வாங்குவார்கள் என்பதை நிச்சயமாய் நம்புங்கள்" என்று நரேந்திரர் கோபத்தினாலும், பயத்தினாலும் வாய்விட்டு அலறினார்.

அவர் இவ்விதம் சொன்னதற்கு மறுமொழியாக மீண்டும் சிரிப்பே வெளியே இருந்து வந்தது. நரேந்திரர் கதவு ஓரமாய் வந்து வெளியே நிற்கிறவர்கள் யார் என்று தெரிந்துகொள்ளுவதற்காகக் கதவு இடுக்குவழியாகப் பார்த்தார். வெளியில் ஒரே இருள் சூழ்ந்திருந்ததால், அவரால் கண்டறிந்துகொள்ள முடியவில்லை.

பாம்பு கடித்ததாலுண்டான கொடுவலி வரவர அதிகரித்தமையால், நரேந்திரர் அயர்ந்து ஓர் நாற்காலியில் உட்கார்ந்தார். அவருடைய மூளை மயக்கத்தினால் கிறுகிறு வென்று சுழன்றது. அவருடைய கையோ அசைக்க முடியவில்லை; அவருடைய பலம் அடியோடு போய்விட்டது. வெளியில் சிலர் முணுமுணுவென்று மெதுவாய்ப் பேசிக்கொண்டிருந்த சத்தம் அவருடைய காதில் விழுந்தது. அவர்கள் வெளியே நின்றுகொண்டு, தான் உயிரோடு போராடுகிறதை ஒரு வேடிக்கையாக நினைத்து, சந்தோஷப்படுகிறார்கள் என்பதை நரேந்திரர் தெரிந்துகொண்டார். சிறிது நேரம் கழிக்கவே அவருக்குத் தைரியமுண்டாயிற்று. பாம்பு கடித்ததனால் உண்டான வலி வரவரக் குறைந்

தது. எவ்விதமாவது தப்பித்துக்கொண்டு வெளியே போகவேண்டுமென நினைத்தார்.

நரேந்திரர் வெளியே போனால், தம் கைத்துப் பாக்கியைக் கூடவே கொண்டுபோகும் வழக்கமுண்டு. ஆதலால், இப்போதும் அவரிடத்தில் கைத்துப்பாக்கி யிருந்தது. வெளியே நிற்கிறவர்கள், தன்னை உள்ளே எரியும் விளக்கு வெளிச்சத்தால் கண்டு, குறி வைத்துச் சுட்டுவிட்டால் என்ன செய்கிறதென்று அவருக்கு ஒரு எண்ணம் உதித்தது. உடனே அறைக்குள் எரிந்துகொண்டிருந்த விளக்கை அணைத்துவிட்டு இருட்டில் நின்றார். பூட்டப்பட்டிருக்கும் கதவைத் திறந்துகொண்டு வெளியேபோவது சாத்தியமாகாத விஷயமா யிருந்தது. அப்படியே சாத்தியமானாலும் வெளியில் நிற்கிறவர்கள் அவரை உயிரோடு விடமாட்டார்கள்; என்ன செய்வார் பாவம்! அவருக்குத் திடீரென்று ஒரு யுக்தி தோன்றிற்று. ஜன்னல் ஓரமாய்ச் சென்று தெருப்பக்கமாய்க் குறிவைத்து ஐந்தாறு முறை கைத்துப்பாக்கியால் ஜன்னலைச் சுட்டார். ஜன்னலின் கதவுகள் உடைந்து தூள் தூளாய்ப் போயின. தவிர, அந்த ஜன்னலும் அடியோடு பெயர்ந்து விழுந்துவிட்டது. தெருப்பக்கமாய்த் தலையை நீட்டி, சிலரை உதவிக்குக் கூப்பிடுவதற்கு இப்போது அவருக்கு சௌகரியமாயிற்று. "உதவி வேண்டும்! உதவிவேண்டும்! போலீஸாரே! போலீஸாரே! வாருங்கள்! வாருங்கள்! உதவி செய்ய வாருங்கள்!" என்று நரேந்திரர் தெருப்பக்கமாய்த் தலையை நீட்டிக்கொண்டு தம்முடைய பலங்கொண்ட வரையில் பலமாய்க் கூவினார். கைத்துப்பாக்கியை

எடுத்துத் தெருப்பக்கமாய் இரண்டொரு வெடிகளை யும் பிரயோகித்தார்.

எதிர் வீட்டிலிருந்து ஒருவர், துப்பாக்கி வெடித்த சத்தம் கேட்டு, வெளியே வந்து ஜன்னல் வழியாய் எட்டிப் பார்த்தார்.

"ஐயா; ஐயா! இங்கே பாரும்! போலீஸாரை இவ்விடத்துக்கு வரச்சொல்லும். என்னை இவ்வறைக்குள் போட்டுப் பூட்டி வைத்திருக்கிறார்கள்" என்று நரேந்திரர் அவரை நோக்கிக் கூவினார்.

எதிர் வீட்டில் நின்ற மனிதன் நாலாபக்கமும் சுற்றிப் பார்த்தார். ஒரே இருளா யிருந்தபடியால், நரேந்திரர் எந்த இடத்திலிருந்து சத்தம் போடுகிறாரென்பதை அறிந்துகொள்ள அவரால் முடியவில்லை. அதே சமயத்தில் நரேந்திரர் அகப்பட்டுக்கொண்டு விழிக்கும் வீட்டிலிருந்து மூன்று பெயர் தெற்கு நோக்கி ஓடுவதை வைத்தியர் பார்த்தார். அந்த மூன்று பெயருஞ் சேர்ந்தே தன்னுடைய உயிரை வாங்க இப்படிப்பட்ட சூழ்ச்சி செய்தார்கள் என்பதையும், தான் செய்யும் ஆரவாரத்தைக் கண்டு பயந்து ஓடுகிறார்கள் என்பதையும் நரேந்திரர் அறிந்து கொண்டார்.

"ஏ! சதிகாரர்களே! அவ்விதம் ஓடுவதனால் தப்பித்துக்கொள்ளலாமென்று எண்ணாதீர்கள். நீங்கள் செய்த பாதகத்துக்குத் தகுந்த சிட்சை உங்கட்குக் கிடைக்காமற் போகாது" என்று ஆத்திரத்தோடு அவர் உரத்துச் சொல்லிக்கொண்டே மறுபடியும் ஐந்தாறுமுறை துப்பாக்கியால் அவர்கள் சென்ற திசை நோக்கிச் சுட்டார். ஒன்றன் பின் ஒன்றாய் வெடிகள்

சரமாரியாகப் புறப்பட்டதைக் கேட்டுத் திடுக்கிட்டு அண்டை வீட்டுக்காரர்கள் விழித்துக்கொண்டு வெளியே ஓடிவந்து பார்த்தார்கள். அப்படி வெளிவந்தவர்களுள் ஒருவன் துப்பாக்கியிலிருந்து புறப்பட்ட நெருப்புப் பொறியைக் கண்டு "அதோ நிற்கிறான்! அதோ நிற்கிறான்!" என்று கையால் மற்றவர்களுக்கு நரேந்திரரைச் சுட்டிக்காட்டிக் கூவினான். உடனே எல்லோரும் நரேந்திரரிருக்கும் வீட்டுக்குச் சமீபத்தில் வந்து கூடிவிட்டார்கள்.

"உதவி செய்யுங்கள்! உதவி செய்யுங்கள்! யாராவது சென்று போலீஸாரை இவ்விடத்துக்கு அழைத்து வாருங்கள்! என்னைக் கொலைசெய்துவிடுதற்குச் சிலர் எத்தனித்திருக்கிறார்கள்! தென்திசை நோக்கி மூவர் சிறிது நேரத்துக்கு முன்பு ஓடினார்கள். அவர்களைப் பிடித்து வருவதற்காகச் சில போலீஸ் சேவகர்களைப் போகச்சொல்லுங்கள்" என்று நரேந்திரர் சத்தம் போட்டார்.

இவர் தம் நிலைமையைக் கண்டு பரிதாபப்பட்ட ஒருவன் உடனே யானைக்கவுனி போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று இரண்டொரு சேவகர்களையும் போலீஸ் இன்ஸ்பெக்டரையும் அழைத்துக்கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தான்.

சென்னை நகரிலே ஒருவிதமான விசேஷமுமில்லாத அற்பக்காரியத்துக்கும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடிவிடுவார்கள். தெருவில் ஒருவன் காவடிச்சிந்து பாடினால் அவனைச் சூழ்ந்து ஆயிரக்கணக்காய் ஜனங்கள் நின்று வேடிக்கை பார்ப்பார்கள். புதுமாதிரியான சட்டை ஒன்றை ஒருவன் போட்டுக்கொண்டு தெருவழியாய்ச் சென்றால், அதை ஒரு பெரிய அதிசய

மென்று நினைத்துக் கும்பல் கும்பலாய் அவனைப் பின் தொடர்ந்து ஜனங்கள் செல்லுவார்கள். வயிற்றுப் பிழைப்புக்காக ஒருவன் படம் விரித்துக் குறி சொன்னாலும், ஒருவன் சாமியாடினாலும், அவனைச் சூழ்ந்து கொண்டு ஆயிரம்பேர் நிற்பார்கள். இப்படிப்பட்ட சென்னை நகரிலே நடுராத்திரியில் துப்பாக்கி வெடித்த சத்தம் கேட்டால், ஜனங்கள் கும்பல் கும்பலாய்க் கூடி வேடிக்கை பார்க்கும் விமரிசையை நாம் சொல்லவும் வேண்டுமோ? போலீஸார் வருவதற்குள் தங்கசாலை வீதி முழுவதும் ஜனங்கள் நிரம்பி யிருந்தார்கள். இவர்கள் ஒருவரோ டொருவர் யுக்தி செய்தும், ஆச்சரியப்பட்டும் முணுமுணுவென்று பேசிக்கொண்டது, கும்பகோணத்தில் கொசுக் கூட்டங்கள் போடும் சத்தத்தைப்போ லிருந்தது. போலீஸார் தங்களுடைய அதிகாரத்தை வேடிக்கை பார்க்கும் ஜனங்களிடம் செலுத்த ஆரம்பித்தார்கள். கூட்டம் போடக்கூடா தென்று ஒரு பக்கத்திலுள்ள ஜனங்களைப் போலீஸார் விலக்கினால், இன்னொரு பக்கத்தில் கூட்டங் கூடிவிடும்; அங்குச் சென்று விலக்கினால் வேறொரு பக்கத்தில் கூட்டங் கூடிவிடும். போலீஸார் வீட்டுக்குள் நுழைந்து மாடிமேற் சென்றார்கள். மாடியின்மேல் நரேந்திரர் இருக்கும் அறை பூட்டப்பட்டு இருந்ததைக் கண்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் பூட்டை உடைத்துக் கதவைத் திறக்கும்படி உத்தரவு செய்தார். சிலர் பூட்டை உடைத்துக் கதவைத் திறந்துவிட்டார்கள். நரேந்திரர் மெதுவாக வெளியே வந்தார்.

“ஐயையோ! இதென்ன கோலம்! நீர் உயிர் தப்பியதே ஒரு பெரிய ஆச்சரியம்போல் இருக்கின்றதே?” என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் அவரைக் கேட்டார்.

"விவரங்களைப் பிறகு தெரிவிக்கிறேன். முதலில் என்னை ஒரு வைத்தியசாலைக்கு அழைத்துக்கொண்டு போங்கள். பாம்பு கடிக்கு மருந்து போட்டுக் கொள்ளவேண்டும்" என்று நரேந்திரர் சொன்னார்.

அவருடைய இஷ்டப்படியே இன்ஸ்பெக்டர் தங்கசாலை வீதியிலேயே உள்ள ஆறுமுகபண்டிதரின் வைத்தியசாலைக்கு அவரை அழைத்துக் கொண்டு போய், பாம்பு கடித்த இடத்தில் மருந்து போடும்படி செய்து, பழையபடியும் அவரை அழைத்துக்கொண்டு சதி நடந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தார்.



## 11. பொருள் விளங்காத கடிதம்



நரேந்திரரும் போலீஸாரும் அந்த வீட்டை நன்றாய்ப் பரிசோதனை செய்ய ஆரம்பித்தார்கள். ஆனால், அவர்களுடைய முயற்சி வீணாயிற்று. ஏனெனில், சதி நடந்ததை ருசுப்படுத்துவதற்குரிய அடையாளம் ஏதும் ஆண்டுக் காணப்படவில்லை. நரேந்திரர் நடந்த விஷயங்களை இன்ஸ்பெக்டரிடம் விவரமாய்ச் சொன்னார் அந்த வீடு யாருக்குச் சொந்தமென்றும், அதில் குடியிருப்பது யார் என்றும் அங்கு நின்றவர்களை இன்ஸ்பெக்டர் விசாரித்தார். அது ஒரு பெரிய கோமுட்டிச் செட்டிக்குச் சொந்தமானதென்றும், இரண்டு வாரத்திற்கு முன்புதான் அயலூரார் ஒருவர் அதனை வாடகைக்கு ஒப்புக்கொண்டார் என்றும் ஜனங்கள் போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் சொன்னதோடுகூட, அந்த அயலூரானுடைய அங்க அடையா

ளங்களையும் கூறினார்கள். அவர்கள் கூறிய அடையாளத்தைக்கொண்டு அவ்வீட்டைச் சமீபத்தில் வாடகைக்கு ஒப்புக்கொண்டவர் ஜெயராம் என்பவர்தான் என்று நரேந்திரர் நிச்சயமாக அறிந்துகொண்டார். ஜெயராமும் சரவணனும் சேர்ந்தே அவ்வீட்டைத் தங்களுடைய சதியாலோசனையை நிறைவேற்ற உபயோகித்திருக்கிறார்கள் என்பது அவருக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டது. ஆனால், இவர்களுடைய இரகசியத்தை முன்னதாகவே மிஸ் ரோஸ்பரி அறிந்து எச்சரித்ததுதான் அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. அவள் எவ்விதம் அறிந்தாள் என்றும், எதற்காக எச்சரித்தாள் என்றும் நரேந்திரர் யோசனை செய்து பார்த்தார். ஆனாலும், அவருக்கு ஒன்றும் புலப்படவில்லை. இந்த வீட்டின் மேன்மாடியிலுள்ள படுக்கை அறையும், அதற்கு அடுத்த அறையும் ஜெயராமனும், சரவணனுமே உபயோகிக்கப்பட்டிருக்கின்றன என்று நரேந்திரருக்குத் தோன்றிற்று. சென்னையில் தனக்கு இரத்தின வியாபாரமென்று ஜெயராம் சொன்னது பொய்யென்றும், திருவொற்றியூரிலிருந்து பிரதிதினமும் புறப்பட்டு இந்த வீட்டுக்கு வந்து ஏதோ காரியம் செய்துகொண்டிருந்திருக்கிறார் என்றும் வைத்தியருக்கு இப்போது தெரிய வந்தது. ஆனாலும், அவர் இந்த வீட்டில் இருந்தார் என்பதை ருசுப்படுத்த எவ்விதமான அடையாளமும் காணப்படவில்லை. முன்னெச்சரிக்கையாகவே ஜெயராம் எல்லாச் சாமான்களையும் அப்புறப்படுத்திவிட்டார் என்பதை நரேந்திரர் அறிந்துகொண்டார். ஆனாலும், தன்னைக் கொல்லுவதற்கு அவர்கள் ஏன் இவ்வளவு சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டுமென்

பது மாத்திரம் வைத்தியருக்கு இன்னமும் விளங்காத ஒரு புதுமையாகவே இருந்துவந்தது.

போலீஸ் இன்ஸ்பெக்டரும், போலீஸ் சேவகனும் சயன அறையினுள் நுழைந்து கட்டிலின் கீழ் வைக்கப்பட்டிருந்த சவப்பெட்டியை எடுத்து உடைத்து அதைப் பரிசோதனை செய்துகொண்டிருந்தார்கள். நரேந்திரரை மட்டும் அவர்கள் பக்கத்து அறையில் தனிமையாக விட்டிருந்தார்கள். அந்த அறையில் ஒரு ஆணியில் தொங்கிக்கொண்டிருந்த சட்டை ஒன்று நரேந்திரருடைய கண்ணுக்குப் புலப்பட்டது. ஜெயராம் போட்டிருந்த சட்டை என்பதை நரேந்திரர் உடனே அறிந்துகொண்டார். அந்தச் சட்டைப் பையினில் ஏதாவது கிடந்தாலும் கிடக்கலாமென்று நினைத்து ஒவ்வொரு பையிலும் கையைவிட்டுப் பார்த்தார். ஒரு பையில் ஒரு கடிதம் கிடந்தது. அதனை எடுத்து அவசரமாய் மடித்துத் தன்னுடைய சட்டைப்பையில் போட்டுக்கொண்டார். போலீஸார் எங்கே கண்டுவிடப் போகிறார்களோ என்னும் அச்சத்தால் அதைப் படித்துப் பார்ப்பதற்குக்கூட அவர் நினைக்கவில்லை. இன்ஸ்பெக்டர், வீட்டை நன்றாய்ப் பரிசோதனை செய்து பார்த்த பிறகு, நரேந்திரரை யானைக்கவுனி போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக்கொண்டுபோய் நடந்த விஷயங்களைப் பற்றி அவரிடம் உறுதிமொழிப் பத்திரம் எழுதி வாங்கிக்கொண்டார். இதற்குள் சூரியனும் உதயமானான். நரேந்திரர் போலீஸ் ஸ்டேஷனிலிருந்தபடியே ஒரு ஜட்கா பிடித்துக்கொண்டு மைலாப்பூர் சென்று பூபேந்திரரைச் சந்தித்தார். வெளியே சென்ற நரேந்திரர் வரவில்லையே என்று கவலைப்பட்டுக்கொண்

டிருந்த பூபேந்திரர், நரேந்திரர் வியர்த்துக் களைத்து வந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டவராய், "நரேந்திரா! இதென்ன வேஷம்? உன்னுடைய முகம் வெளுத்திருக்கக் காரணமென்ன? கையில் துணி சுற்றப்பட்டிருக்கிறதே? உனக்கு என்ன சம்பவித்தது?" என்று பரபரப்புடன் கேட்டார். தான் வீட்டை விட்டு முதல்நாள் இரவு புறப்பட்டது முதல் திரும்பி வீட்டுக்கு வந்து சேர்ந்தவரையில் நடந்த சம்பவங்களை நரேந்திரர் தன்னுடைய மைத்துனருக்கு விவரமாய் எடுத்துச் சொன்னார்.

"நான் அப்போதே சந்தேகப்பட்டேன். ஜெயராம் கடைசியில் உன்னைத் தன்னுடைய வலையில் சிக்கும்படி செய்துவிட்டானே? நரேந்திரா! நீ தப்பித்து வந்தது மிக ஆச்சரியமே! அந்த மிஸ் ரோஸ்பரி சொன்னது வாஸ்தவமாகிவிட்டது, பார்த்தாயா? உன்னைக் கொலை செய்துவிடுதற்கன்றோ நினைத்தார்கள்! உன்மீது குறிவைத்திருக்கிறார்கள் என்று நான் மன்னார்குடியிலேயே சொன்னேனன்றோ?" என்று பூபேந்திரர் கூறினார்.

ஒருவருக்கும் தெரியாமல் தான் தங்கசாலை வீதியிலுள்ள மேற்படி வீட்டிலிருந்து எடுத்துவந்த கடிதத்தைத் தன் சட்டைப் பையிலிருந்து இப்போது நரேந்திரர் வெளியிலே எடுத்தார். ஒரு காகித உறையினுள் மேற்படி கடிதம் போடப்பட்டிருந்தது. காகித உறையின்மேல் "ம-ா-ா-ஸ்ரீ, ஜெயராம் அவர்களுக்கு" என்று எழுதப்பட்டிருந்தது. ஆனால், தெருவின் பெயர், வீட்டின் எண் முதலிய முழுவிலாஸமும் அதிற் காணப்படவில்லை. ஆகவே, மேற்படி கடிதம் தபால் மார்க்கமாய் ஜெயராமுக்கு அனுப்பப்பட

வில்லை யென்பதையும், யாரோ நேரில் அக்கடிதத்தை அவரிடம் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்கள் என்பதையும், நரேந்திரர் மிக எளிதில் அறிந்துகொண்டார். காகித உறையில் எழுதப்பட்டிருந்த விலாசத்தின் கையெழுத்தைப் பார்த்தால் ஒரு பெண்மணியின் கையெழுத்தைப்போ லிருந்தது. நரேந்திரர் உறையைக் கிழித்து உள்ளே இருந்ததை எடுத்தார். மிகவும் தடிப்பான ஒரு காகிதத்தில விநோதமான கோடுகள் கிழிக்கப்பட்டு சிற்சில வார்த்தைகள் எழுதப்பட்டிருந்ததைக் கண்டவுடன் நரேந்திரருக்கும் பூபேந்திரருக்கும் உண்டான ஆச்சரியத்துக்கு அளவில்லை. இக்கதையினை வாசிக்கும் எமது சகோதர சகோதரிகள் விஷயத்தை நன்றாயும் தெளிவாயும் தெரிந்துகொள்வதற்குச் சாதகமாகும்படி, அந்தத் தடிப்பான கடிதத்தில் எழுதப்பட்டிருந்த விஷயத்தை இங்கே அப்படியே எடுத்துக் காட்டுகின்றோம்



மேலே குறிக்கப்பட்டிருக்கும் விதமாய் எழுதப்பட்டிருந்த காகிதத்தைக்கொண்டு என்ன விஷயம் தெரிந்துகொள்ளுகிறதென்று இருவருக்குமே தோன்றவில்லை. அந்தக் காகிதத்தை எவ்விதம் அர்த்தம் செய்கிறதென்று தெரியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள்.

"நரேந்திரா! இக்கடிதத்தில் எழுதப்பட்டிருப்பதைப் பார்த்தால், ஏதோ ஜாதக சம்பந்தமான கணிதக் குறிப்பு போலன்றோ விருக்கிறது? உன்னுடைய சிநேகிதராகிய ஜெயராம் ஜோசியம் பார்ப்பவர் என்று எனக்கு இதுவரையில் தெரியாதே!" என்று பூபேந்திரர் அக்கடிதத்தை உற்றுநோக்கிக்கொண்டே சிறிது புன்சிரிப்போடு பரிகாசமாய்ச் சொன்னார்.

"ஏதோ ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்துக் கணிக்கப்பட்டிருக்கும் ஒரு குறிப்பாக இக்கடிதம் இருக்கிற தென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால், அந்த விஷயம் என்ன வென்பது மட்டும் நமக்குப் புலப்படவில்லை" என்றார் நரேந்திரர்.

"நரேந்திரா! ஒரு மூலையில் 'சூரியன்' என்று போடப்பட்டிருப்பதையும், அந்த மூலைக்கு நேர் எதிர் மூலையில் '15' என்று போடப்பட்டிருப்பதையும் கவனிக்கும்போது, பகற்காலத்தில் ஒரு சம்பவம் நடக்கப்போகிற தென்பது மாத்திரம் நிச்சயமாக எனக்கு விளங்குகிறது" என்று பூபேந்திரர் ஆச்சரியத்தோடு கழறினார்.

"எந்த இடத்தில் நடக்கப்போகிறது? என்றைக்கு நடக்கப்போகிறது? எப்போது நடக்கப்போகிறது? இந்த விஷயங்களை அறிந்துகொள்ளாமல் பகற்காலத்

திலே ஒரு சம்பவம் நடக்கப்போகிறது என்று மட்டும் நாம் தெரிந்துகொண்டதனால் என்ன பிரயோஜனம்?'' என்று நரேந்திரர் கடாயினார்.

“நரேந்திரா! சூரியனுக்கு நேராக இருக்கும் '15' என்னும் எண், நாழிகையைக் குறிப்பதாகவே இருக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேன். ஆதலால், பகல் பதினைந்து நாழிகைக்கு ஒரு பெரிய விசேஷம் நடைபெறப்போகிறதென்பதை இந்தக் கடிதம் குறிப்பிடுகிறதுபோல் எனக்குத் தோன்றுகிறது'' என்று பூபேந்திரர் பதில் மொழிந்திட்டார்.

'சரி; எப்போது நடக்குமென்பதைத் தெரிந்துகொண்டதாகவே வைத்துக்கொள்ளுவோம் எங்கே நடக்குமென்பதையும், என்றைக்கு நடக்குமென்பதையும் தெரிந்துகொள்ளாமல் எப்போது நடக்குமென்பதை மாத்திரம் தெரிந்துகொண்டதால் பலன் என்ன?'' என்று நரேந்திரர் இடைமறித்துக்கேட்டார்.

“அவைகளைத்தானே தெரிந்துகொள்ள முடியவில்லை. இதில் '75' என்னும் எண் இரண்டிடத்தில் காணப்படுகிறது. '30,' '15,' '10,' ஆகிய இந்த எண்களும் இரண்டு இடங்களில் காணப்படுகின்றன. சிலுவையைப்போல் இரண்டு குறிகள் இருக்கின்றன. ஒரு மூலையில் 'தனுசின் கடையும்' என்று எழுதப்பட்டிருக்கிறது. அதற்கு நேர் மூலையில் 'மகரத்தின் தலையும்' என்று எழுதப்பட்டிருக்கின்றது. இவைகளைக்கொண்டு என்ன தெரிந்துகொள்ளுவதென்று சிறிதும் புலப்படவில்லையே?'' என்று பூபேந்திரர் சற்று வருத்தத்தோடு சொன்னார்.

"நாம் இதை வைத்துக்கொண்டு இவ்விதம் பயனில் யோசனை செய்வதில் பிரயோஜனமில்லை. ஜோதிட சாத்திரத்தில் பாண்டித்திய முடைய யாரிடமாவது இதைக் காண்பித்தோமானல் அவர்கள் இலகுவில் கண்டுபிடித்துச் சொல்லுவார்கள்" என்று நரேந்திரர் ஆலோசனை சொன்னர்.

"ஆம்; நீ சொல்லுவது வாஸ்தவமே. அவ்விதந் தான் செய்யவேண்டும். சாயங்காலம் ஜோசியர் கோபாலாச்சாரியிடம் இதனைக் கொண்டு போய்க் காட்டுவோம். அவர் இதைப் பார்த்து என்ன சொல்லுகிறரென்று அறிவோம்" என்று பூபேந்திரர் கூறினர்.

"ஆனலும் நாம் அவசரப்பட்டுக்கொண்டு ஒன்றையும் செய்துவிடக்கூடாது. ஏனெனில், இதுவோ என்னுடைய உயிரைவாங்க எத்தனித்த ஜெயராமின் சட்டைப் பையிலிருந்து எடுக்கப்பட்டதாகும் அவன் இதைத் தேடிப்பார்த்திருப்பான் என்பதிற் சந்தேகமில்லை. ஆதலால், இந்தக் கடிதத்தை நாம் ஜாக்கிரதையாய்ப் பாதுகாக்கவேண்டி யிருப்பதுடன் நம்மிடம் இது இருக்கிறதாகப் பிறருக்குத் தெரியாம லிருக்கும்படியும் நாம் பார்த்துக்கொள்ள வேண்டுவது இன்றியமையாததாகும்" என்று நரேந்திரர் கூறினர். இவ்விதம் இவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது வேலைக்காரன் வந்து "எஜமானே! நேற்று இரவு உங்களைத் தேடிவந்த மனிதர் வெளியே வந்திருக்கிறர். இப்போது உங்களைப் பார்க்கச் சரிப்படுமோ என்று கேட்கிறர்" என்று நரேந்திரரிடம் சொன்னன். தான் பார்க்கக்கூடுமென்று சொல்லி அவரை அழைத்து வரும்படியாக நரேந்திரர் வேலைக்காரனிடம் கட்டளையிட, அவன் அங்ஙனமே சென்று அவரை அழைத்து

வந்து நரேந்திரரிடம் விட்டான். வந்த மனிதர் நரேந் திரர்கூட வேறொருவர் உட்கார்ந்திருப்பதைப் பார் த்து, தான் வந்த காரியத்தை வெளியிட முன்பின் யோசித்தார். அப்படி அவர் தயங்குவதை அறிந்து கொண்ட வைத்தியர் 'மைத்துனரே! நீர் சென்று அடுத்த அறையில் இரும். இவர்கள் என்னுடன் தனித்துப் பேசவேண்டுமென விரும்புகிறார்கள்போல் தெரிகிறது'' என்று பூபேந்திரரிடம் சொன்னார். உடனே பூபேந்திரர் எழுந்து அடுத்த அறைக்குள் போய்விட்டார். நரேந்திரர் புதிதாய் வந்தவரை உப சரித்து, அவருக்கு ஒரு நாற்காலியைக் காட்டி அதில் அமரும்படி சொன்னார். அவர் அவ்விதமே உட் கார்ந்தபிறகு நரேந்திரரும் அவரும் தனித்துப் பேசு வதற்கு ஆரம்பித்தார்கள்.

"வைத்தியரே இங்கு நான் வருவதால் எனக்கு அபாயம் நேரிடுமென்று தெரிந்திருந்தும், அந்த அபா யத்துக்கு உட்பட்டு நான் உம்மைப் பார்க்க வந்திருப் பதனாலேயே ஏதோ ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்தே வந்திருக்கிறேன் என்பது உமக்குத் தெள்ளி திற் புலப்படும். நான் சொல்லும் விஷயம் நம்பமுடி யாததுபோல் உமக்குத் தோன்றினாலும் தோன்ற லாம். என்னுடைய வார்த்தைகள் உமக்கு ஆச்சரி யத்தைக் கொடுக்குமென்பதை நான் அறிவேன். நான் என்னுடைய பெயரைச் சொல்லாமலும், நான் யார் என்பதைத் தெரிவிக்காமலும் இருப்பதால் நீர் என்மீது சந்தேகம் கொண்டாலும் கொள்ளுவீர். இருந்தபோதிலும் நான் என்னுடைய பெயரைச் சொல்லாமல் இருப்பதே நல்லது. ஏனெனில்,— உமக்கு ஏற்பட்டிருப்பது போலவே எனக்கும் சத்

தூருக்கள் சிலர் ஏற்பட்டிருக்கிறார்கள்" என்று அந்த மனிதன் சொன்னார்.

"எனக்கு விரோதிகள் இருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால்—" என்று நரேந்திரர் சொல்லிக்கொண் டிருக்கும்போதே,

"நான் இப்போது உம்மைப் பார்க்கவந்தது அவர்களைக் குறித்து உமக்கு எச்சரிக்கவே. நீர் திருவொற்றியூரில் வசித்துவரும் ஜெயராம் என்பவருடைய வீட்டுக்கு வைததியத்தின் பொருட்டு அடிக்கடி சென்று வருகிறீர் அன்றோ? அவ்வீட்டார் உம்முடைய உயிரை வாங்குவதற்கு அநேக சூழ்ச்சிகள் செய்து வருகிறார்கள். நீர் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்" என்று வந்த மனிதன் இடையிற் கூறி எச்சரிக்கவே, நரேந்திரருடைய கடைசிவார்த்தை முடிவு பெறுமல் 'ஆனல்' என்பதோடு நின்று போயிற்று.

"நேற்றிரவுதான் அவர்கள் என்னுடைய உயிரை வாங்குவதற்குப் பெரிதும் முயன்றார்கள். ஆனாலும், அவர்கள் மிகவும் சாமர்த்தியமாகச் செய்த சூழ்ச்சி பயன்படவில்லை. இதோ பாரும்!" என்று நரேந்திரர் கூறி, அவரிடம் தம்முடைய கையையும் காண்பித்தார்.

"பயன்படவில்லையா! அதாவது நீர் தப்பித்துக் கொண்டு வந்துவிட்டீரா, என்ன?" என்று அந்த மனிதன் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"ஜெயராமும் அவருடைய சிநேகிதர்களும் மிகவும் சாமர்த்தியமாகத்தான், ஐயா, என்னைக் கொல்லப்பார்த்தார்கள். நான் உயிர்தப்பியது தெய்வச் செயல்தான். இருந்தபோதிலும், அவர்களுடைய

எண்ணம் தங்களுக்கு எப்படித் தெரிந்தது என்பதை அறிந்துகொள்ள விரும்புகிறேன்'' என்று நரேந்திரர் கூறினர்.

வைத்தியர் சொன்னதற்கு அந்த மனிதன் ஒன்றும் பதில் சொல்லாமல், தானகவே தலையை அசைத்துக்கொண்டு புன்னகை புரிந்தார்.

"எனக்கோ ஒன்றுந் தெரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோ லிருக்கிறது. என்னுடைய உயிரை வாங்குவதற்குச் சிலர் ஒரு முறைக்கு அதிகமாகவே முயன்றிருக்கிறார்கள். ஆனல், நான் அவர்களுக்கு எவ்விதமான தீங்கும் செய்யாமலிருக்கும்போது என்னைக் கொல்ல அவர்கள் கங்கணங் கட்டிக்கொண்டிருப்பதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது'' என்று நரேந்திரர் சொன்னர்.

"அவர்களுக்கு அழிவை உண்டாக்கக்கூடிய சில இரகசியமான விஷயங்களை நீர் தெரிந்துகொண்டிருக்கிறீர் என்பதாக அவர்கள் நினைத்திருக்கிறார்கள். நீர் உயிரோடிருக்கும் வரையில் அவர்களுடைய நோக்கம் நிறைவேறாது. அதனாற்றான் அவர்கள் உம்மைக் கொல்லுவதற்குத் துவஜம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள்'' என்று வந்த மனிதன் பதில் தந்தார்.

"அவர்களுடைய நோக்கம் எப்படிப்பட்டது? என்னைக் கொன்று பெரும் பயன் அடையவேண்டுமென்று அவர்கள் நினைப்பதால் அவர்களுடைய நோக்கம் மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கக் கூடியதாகவே இருக்கவேண்டுமென எனக்குத் தோன்றுகிறது'' என்று நரேந்திரர் நிச்சயமின்றி சந்தேகத்துடன் கூறினர்.

"ஆம்; நீர் சொல்லுவது வாஸ்தவமே. இவ்வுலகத்தில் ஒருவரும் செய்யத் துணியாத ஒரு பெரிய காரியத்தைச் செய்ய அவர்கள் பிரவேசித்திருப்பதால், அவர்கள் நோக்கம் மிகவும் பெரிய நோக்கம் என்பதில் தடையில்லை. அதாவது, நூறுலட்சம் வராகன், ஐயா, ஒரேசமயத்தில் கிடைக்கக்கூடிய வழியை அவர்கள் தேடிக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு நீர் பெருந்தடையாக ஏற்பட்டிருக்கின்றீர். ஆதலால், உம்மை எவ்விதத்திலும் இந்த உலகத்தைவிட்டுத் துரத்திவிட அவர்கள் முயற்சி செய்வார்கள் என்பதிற் சந்தேகமில்லை. நீர் முன்னெச்சரிக்கையாக இருப்பதே நலம்" என்று வந்தமனிதர் வற்புறுத்தி உரைத்தார்.

"ஐயா! தங்களை யார் என்று எனக்குத் தெரியாது. அப்படியிருக்கும்போது எனது விஷயத்தில் இவ்வளவு கவலை எடுத்துக்கொண்டு வலியவந்து நீங்கள் எச்சரிப்பது எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. தாங்கள் இவ்விதம் வந்து எச்சரிப்பதற்குக் காரணமென்ன?" என்று நரேந்திரர் ஐயுறவோடு கேட்டார்.

"நான் இவ்விதம் எச்சரிப்பதற்கு ஒரு காரணம் இருக்கிறது. என்னுடைய சொந்த நன்மையைக் கருதியே உம்மை எச்சரிக்கிறேன்" என்று அந்த மனிதர் சொன்னார்.

"அப்படியானால் நான் அந்தப் பாதகர்களுடைய சதியாலோசனையில் சிக்காமலிருப்பதற்கு ஒரு உபாயம் சொல்லும்" என்று வைத்தியர் குறையிரந்தார்.

"ஒரு உபாயமும் கிடையாது. அவர்கள் உம் மீது குறிவைத்துவிட்டார்கள். ஆதலால், எவ்விதத் திலும் உம்மைக் கொன்றே தீருவார்கள்" என்று வந்தமனிதர் வற்புறுத்தி மொழிந்தார்.

"ஏன் ? எதற்காக என்னைக் கொல்லவேண்டும்?" என்று நரேந்திரர் பயத்துடன் உசாவினர்.

"நரேந்திரரே! நீர் ஒரு பெண்மணியைச் சந்தித் திருக்கின்றீர் அன்ருே ? அவளுடைய பெயர் தேவகி அன்ருே?" என்று வந்தமனிதர் மிகவும் இரகசியமாய் வினவினர்.

"ஆமாம்; நான் சந்தித்ததுண்டு!" என்று வைத் தியர் பரபரப்புடன் சாற்றினர்.

"அதுவே போதுமானது. அவர்கள் உம்மா லும் அந்தப் பெண்மணியாலும் தங்களுக்கு அபாயம் விளையுமென்று பயந்து உங்க ளிருவருடைய உயிரை யும் மாய்ப்பதற்கு சதியாலோசனை செய்தார்கள்; செய்கின்ருர்கள்" என்று அவர் பதில் அளித்தார்.

"தேவகி என்பவள் இப்போது எங்கே இருக் கின்ருள் ? அவர்கள் அவளைக் கொன்றுவிட்டார்களா, என்ன ?" என்று வைத்தியர் பதைபதைத்துக் கேட்டார்.

"அவள் உயிருடன் இருக்கின்ருளா இல்லையா என்பதைப்பற்றி நீர் விசாரப்படுவது அநாவசியம். உம்முடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நீர் முயற்சிசெய்யும்" என்ருர் வந்தமனிதர்.

"அவள் மயக்க மருந்தைக் கலந்து என்னைக் கொலைசெய்யப் பார்த்தாளே?" என்று நரேந்திரர் வினவினர்.

"ஆம்; அவ்விதம் அவள் செய்ததில் ஏதோ ஒரு முக்கியமான நோக்கம் இருக்கவேண்டும்" என்றார் வந்தமனிதர்.

"அப்படியானால் அவளைப்பற்றியும் அவள் செய்த காரியங்களைப்பற்றியும் உமக்கு நன்றாய்த் தெரிந்திருக்கவேண்டு மென்றே நினைக்கிறேன். ஐயா! இதற்குமுன் உங்களை எங்கேயோ பார்த்திருக்கிறேன் போல் தோன்றுகிறதே?" என்று வைத்தியர் சொல்லி அந்த மனிதனை நெருங்கி உற்றுப் பார்த்தார். வெடி விபத்து நடந்த அன்றிரவு கற்பகச்சோலையில் அவரைப் பார்த்ததாக நரேந்திரருக்குத் தோன்றிற்று. அவர் யார் என்பதை நரேந்திரர் அறிந்துகொண்டார். தான் யார் என்பதை வைத்தியர் அறிந்து கொண்டார் என்பதை அந்த மனிதனும் தெரிந்து கொண்டார். இருவரும் ஒருவரையொருவர் பார்த்தபடியே ஸ்தம்பித்து சிறிது நேரம் நின்றார்கள். தாம் சற்று முன்பு பார்த்துக்கொண்டிருந்த — ஆனல் ஒருவர் பார்க்க வந்திருக்கிறார் என்று வேலைக்காரன் சொன்னவுடன் மேசைக்குள் மறைத்து வைக்கப்பட்ட — பொருள் விளங்காத கடிதம், புதிதாக வந்திருக்கும் இந்த மனிதனோடு எவ்விதமான சம்பந்தமாவது பெற்றிருத்தல் கூடுமோவென்று நரேந்திரர் சிந்தித்தார்.



## 12. ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியம்



"பூபேந்திரா!" என்று நரேந்திரர் கூப்பிட்டார். அடுத்த அறையி லிருந்த அவருடைய மைத்துனர் உடனே நரேந்திர ரிருந்த அறைக்குள் சென்றார்.

"மைத்துனரே! இவர்தான் ஞானசேகரர்! இவருடைய உண்மையான பெயர் என்னவென்று போலீஸாருக்குத்தான் தெரியும்போ லிருக்கிறது. மதிவதனன் என்னும் மற்றொரு பெயரும் இவருக்கு இருக்கிறதாக நினைக்கிறேன்" என்று நரேந்திரர் புன்சிரிப்புடன் பூபேந்திரரிடம் சொல்லிப் புதிதாய் வந்திருக்கும் மனிதரைச் சுட்டிக் காட்டினார்.

"ஞானசேகரரா!" என்று ஆச்சரியத்தோடு பூபேந்திரர் கேட்டுவிட்டு அந்த மனிதனை ஒருமுறை ஏறஇறங்கப் பார்த்தபடியே "அதாவது —" என்று ஏதோ கேட்க வாயெடுத்தார்.

"அதாவது எந்த மனிதருக்கு வைத்தியம் பார்க்கும்படி நான் ஒரு பெண்மணியினாலே சதானந்தருடைய வைத்தியசாலையிலிருந்து ஒருநாளிரவு அழைத்துக்கொண்டு போகப்பட்டேனோ, எந்த மனிதருடைய வீட்டில் மயக்கமருந்தை எனக்குக் கொடுத்து என்னுடைய உயிரைவாங்க சூழ்ச்சி செய்யப்பட்டதோ அந்த மனிதர்தான் இவர்!" என்று நரேந்திரர் சொன்னார்.

இதுவரையில் ஒன்றுந் தோன்றாமல் ஸ்தம்பித்து நின்ற அந்த மனிதர் மெதுவாகப் பேச ஆரம்பித்து, "நரேந்திரரே! நீர் ஏதோ மாறுபாடாக நினைத்து

இவ்விதம் பேசுகிறீர் என நான் நினைக்கிறேன்" என்று கூறினார்.

"ஐயா! நான் மாறுபாடாக ஒன்றும் நினைக்கவில்லை. உண்மையாய் நடந்த விஷயங்களை ஆதாரமாகக்கொண்டே நான் சொல்லுகிறேன். நேற்றிரவு தங்கசாலை வீதியில் என்னுடைய உயிரை வாங்குவதற்கு நடந்த சூழ்ச்சியைப்போல் அன்று கற்பகச் சோலையில் என்னுடைய உயிரை வாங்குதற்கு நீரும் உம்மைச் சேர்ந்த அந்தப் பெண்மணியும் சதியாலோசனை செய்து மயக்க மருந்தை, எனக்கு, சாராயத்தில் கலந்து கொடுத்தீர்கள்" என்று நரேந்திரர் ஆத்திரத்தோடு சொன்னார்.

"நான் வேறு என்ன சொல்லக்கூடும்? எனக்கு அந்தச் சமயம் அங்கு நடந்த விஷயம் ஒன்றுமே தெரியாது. அப்படியிருக்க நீர் என்மீது குற்றஞ் சாட்டுவது சரியன்று. நான் பிரமாணமாய்ச் சொல்லுகிறேன், — எனக்கு ஒன்றுமே தெரியாது" என்று அந்த மனிதர் சத்தியம் செய்தார்.

"பிரமாணமா? உமக்கும் உம்முடைய சிநேகிதர்கட்கும் சத்தியங்கூடவா? கொடிய கொலைபாதகத் தொழிலுக்குக் கொஞ்சமும் அஞ்சாத சதிகாரருக்கு நான் என்னை அறியாமலே ஏதாவது தீங்கிழைத்து விட்டேனோ" என்று நரேந்திரர் வருத்தத்தோடு உசாவினர்.

"ஆம்; நீர் சொல்லுவது வாஸ்தவமே. என்ன செய்யலாம்? தெரியாத்தனமாய் அகப்பட்டுக்கொண்டீர்" என்று ஞானசேகரர் பரிகசித்து வார்த்தையாடினார்.

"இருக்கட்டும்; இப்போது உம்மைச் சந்திக்க நேரிட்டதுபற்றி எனக்கு மிகவும் சந்தோஷமே. ஏனெனில், கற்பகச் சோலையில் அன்றிரவு நடந்த ஆச்சரியமான சம்பவத்தின் உண்மை என்னவென்று எனக்கு இதுவரையில் புலப்படவில்லை. இப்போது உம்மைக் கொண்டாவது உண்மை தெரிந்து சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ளலாமென்று நினைக்கிறேன். தயவுசெய்து அன்றிரவு அங்கே என்ன நடந்ததென்பதை விவரமாய்ச் சொல்லக்கூடுமோ?" என்று நரேந்திரர் வினவினர்.

"தெரிந்தால் சொல்ல முடியுந்தான். ஆனால், எனக்கே இன்னும் உண்மை சரியானபடி விளங்கவில்லையே! உம்மிடமிருந்து சில விஷயங்களைத் தெரிந்துகொண்டு போகலாமென்னும் நோக்கத்தோடு நான் இங்கு வந்தேன். நீரோ என்னை யார் என்று கண்டுபிடித்துவிட்டீர்" என்று ஞானசேகரர் வருத்தத்தோடு இயம்பினர்.

அவர் மிகவும் சாமர்த்தியமாய் மாறுவேடம் பூண்டு வந்தும், நரேந்திரர் அவரை யாரென்று கண்டு பிடித்துவிட்டது ஞானசேகரருக்கு மிகுந்த ஆச்சரியத்தையே உண்டாக்கிற்று. ஆனாலும் உண்மையென்னவெனில், வந்த மனிதர் தம்முடைய இடக் கையைச் சரியானபடி அசைக்க முடியாமல் தயங்குவதையும், அவருடைய நெற்றியில் ஒரு காயத் தழும்பு பட்டிருப்பதையும், இடப் புறத்துத் தாடையில் அகலமான காயத் தழும்பு இருப்பதையும், கவனித்துப் பார்த்த நரேந்திரருக்கு அந்தக் காயங்கள் எவ்விதமுண்டாயின என்னும் யோசனை உண்டாயிற்று. ஏனெனில், அவர் வைத்தியர் அன்றோ? வைத்தியர்

களுக்கு அவ்வித யோசனை உண்டாவது இயல்பு தானே? சொற்ப காலத்துக்கு முன்பு உண்டான காயங்களாகத்தான் அவைகள் இருக்க வேண்டு மென்று அவருக்குத் தோன்றிற்று. தவிர, இம் மாதிரியான காயங்கட்கு தாம் மருந்துபோட்ட ஞாபகமும் அவருக்கு வந்தது. உடனே கற்பகச் சோலையில் அன்று நடந்த சம்பவம் அவருடைய மனத்தில் உதிக்கவே, வந்தமனிதர் ஞானசேகரர் என்பதை நரேந்திரர் எளிதில் அறிந்துகொண்டார்.

"ஞானசேகரரே! உம்மைப் போலீஸார் தேடிக் கொண்டிருக்கிறார்களே! உமக்கு அந்த விஷயம் தெரி யாதோ?" என்று நரேந்திரர் ஒருவித குறும்புத் தனத்துடன் கேட்டார்.

"அப்படித்தான் நானும் கேள்விப்பட்டேன்! ஆனாலும் போலீஸார் என்னை எதற்காகத் தேட வேண்டு மென்பதுதான் எனக்குப் புலப்படவில்லை. அவர்கள் எதற்காக என்னைத் தேடுகிறார்கள் என்று உமக்குத் தெரியுமோ?" என்று ஞானசேகரர் வின வினர்.

"நான் எந்த விஷயத்தைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேனோ அந்த விஷயத்தைப் பற் றியே அவர்களும் தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள். அதாவது அன்றிரவு கற்பகத் தோட்டத்தில் வெடி விபத்து நேர்ந்தபோது நடந்த சம்பவங்களை விவர மாய்த் தெரிந்துகொள்ள அவர்கள் மிகுந்த விழைவு கொண்டவர்களாய் இருக்கிறார்கள்" என்று வைத்தி யர் பதிலுரை தந்திட்டார்.

"உம்முடைய விருப்பத்தையும் அவர்களுடைய விருப்பத்தையும் நிறைவேற்றிவைக்க வேண்டுமென்று

தான் நான் விரும்புகிறேன்! ஆனாலும் என்ன செய்யலாம்? எனக்கே ஒன்றும் தெரியவில்லையே? எனக்குத் தெரிந்தாலல்லவோ நான் உங்களைத் திருப்தி செய்ய முடியும்!'' என்று ஞானசேகரர் வருத்தத்தோடு கூறினார்.

"ஓ! அப்படியா? அப்படியானால் அங்கே—சிலர் சிற்றுணவு சாப்பிட்டுக்கொண்டிருந்த சமயத்தில் — நேரிட்டிருக்கும் ஒரு படுகொலையை நீர் மறைக்கப் பார்க்கின்றீரா, என்ன?'' என்று வைத்தியர் ஆத்திரத்தோடு உசாவினார்.

ஞானசேகரருடைய உதடுகள் வெளுத்தன. புருவங்கள் நெரிந்தன. அவர் தன் முகத்தைச் சுளித்தார். சிறிது நேரங் கழித்து "எனக்கு ஒன்றுமே தெரியாத ஒரு விஷயத்தை மறைக்கவாவது மறுக்கவாவது என்றால் எவ்விதம் முடியும்?'' என்று ஞானசேகரர் கேட்டார்.

நரேந்திரர் சிரித்துக்கொண்டே "அப்படியானால், ஐயா, உமக்குத் தெரிந்த விஷயங்களைப் பற்றியாவது நாம் பேசலாம். குதிரைமீது கம்பீரமாய் சவாரி செய்துகொண்டுவந்து என்னைத் திருமுகக் கோட்டையிலிருந்து அவ்வதிசய கற்பகச் சோலைக்கு அழைத்துப்போன அந்தப் பெண் யார்?'' என்று கேட்டார்.

"அவள் பெயர் தேவகி!''

"அவளுடைய பெயர் எனக்குத் தெரியும்! அவளைப்பற்றிய மற்றைய விவரங்களைத் தெரிவியும்!''

"அவளுடைய உத்தரவு இல்லாமல் அவளைப் பற்றி ஒன்றும் சொல்ல என்னால் முடியாது''

"ஆனாலும் அவள் என்னுடைய உயிரை வாங்குவதற்குப் பிரயத்தனப் பட்டாளே? அவ்விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்" என்று நரேந்திரர் பகர்ந்தார்.

"அதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? அவளுடைய விஷயங்கள் என்னுடைய விஷயங்கள் அல்ல" என்று ஞானசேகரர் பதில் உரைத்தார்.

"ஞானசேகரரே! நீர் சொல்லுவது ஆச்சரியமாக இருக்கிறது. வெடி விபத்தினால் காயப்பட்டிருந்த உமக்கு சிகிச்சை செய்வதற்காக அந்தப் பெண்ணே திருமுகக்கோட்டைக்கு வந்து, என்னைக் கற்பகச் சோலைக்கு அழைத்து வந்தாள். கற்பகச்சோலையில் கண்ட அதிசயங்களைப் போலீஸாரிடம் நான் தெரிவித்து விடுவேனோ என்னும் அச்சத்தால், அவளே சாராயத்தில் மயக்க மருந்தைக் கலந்து எனக்குக் கொடுத்து என்னுடைய உயிரை வாங்கப்பார்த்தாள். இவ்விதமெல்லா மிருந்தும், அவள் விஷயங்கள் உம்முடைய விஷயங்கள் அல்லவென்று நீர் சொல்லுவது விந்தையினும் விந்தையே!" என்று வைத்தியர் சற்றுக் கடுமையாகச் சொன்னார்.

"வைத்தியரே! என்மீது தாம் வருத்தப்படுவதனால் பிரயோஜனமில்லை. அவ்விதம் தேவகி செய்ததற்குக் காரணம் அவளைக் கேட்டால்தான் தெரிய வரும். நான் அச்சமயத்தில் பிரக்ஞையற்றுக் கிடந்தேன் என்பதை நீர் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்" என்று ஞானசேகரர் சொன்னார்.

"கந்தனைப் பற்றி என்ன சமாசாரம்? கூன் விழுந்த அந்த வேலைக்காரன் எங்கே?" என்று வைத்தியர் கேட்டார்.

"எனக்குத் தெரியாது! அவனுக்கும் எனக்கும் எவ்விதமான சம்பந்தமு மில்லை!" என்று ஞான சேகரர் பிடிவாதமாய்ப் பதில் சொல்லிவிட்டார்.

"ஐயா, கற்பகச் சோலையின் சொந்தக்காரரே! நீர் இவ்விதம் பிடிவாதம் செய்வது நியாயமன்று! விஷயங்களை மறைப்பதனால் என்ன பலன்? தாராள மாய் வெளிவிட்டுச் சொல்லுகிறதுதானே?" என்று நரேந்திரர் கேட்டார்.

"எதைப்பற்றிச் சொல்லுகிறது?"

"கற்பகச் சோலையில் நடந்த படுகொலையைப் பற்றி!"

"படுகொலையா? அதுவென்ன?"

"அங்கே கொலையுண்ட ஒரு பெண்மணியைப் பற்றி!"

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ஞானசேகர ருடைய முகம் மாறுதலடைந்தது. அவருடைய உதடுகள் பால்போல் வெளுத்துவிட்டன எரிகின்ற நிலக்கரியைப்போல் அவர் கண்கள் பிரகாசித்தன.

"நரேந்திரரே! நீர் சொல்லுவது ஒன்றும் என க்கு விளங்கவில்லை. நீர் பிழையாக எதையோ நினைத் துக்கொண்டு என்னை இவ்விதமெல்லாம் கேட்கிறீர்" என ஞானசேகரர் வாய்குழறத் தயங்கித் தயங்கிச் சொன்னார்.

"சரி; இருக்கட்டும்! உண்மையை என்னிடம் சொல்லாமல் நீர் மறைக்கின்றீர். அவ்விதம் செய் வது உமக்குத்தான் கெடுதலாக முடியும்" என்று நரேந்திரர் கோபத்தோடு சொல்லிவிட்டு, இவர்க

விருவருடைய சம்பாஷணையையும் இதுவரையில் மௌனமாயும், ஆனால் கவனமாயும் கேட்டுக் கொண்டே பக்கத்தில் நின்ற பூபேந்திரரை நோக்கி, "மைத்துனரே! இவர் இவ்வளவு பிடிவாதமா யிருந் தால் நம்முடைய காரியத்தை நாம் பார்க்கவேண்டு வதுதான், மயிலே மயிலே இறகுபோடு என்றால் அது போடுமோ? நீர் சீக்கிரம் போலீஸ் ஸ்டேஷ னுக்குச் சென்று, ஸ்டேஷன் தலைவரிடம் சொல்லி நான் அவசரமாய் அழைத்து வரச் சொன்னதாக ஒரு போலீஸ் சேவகனையும், இன்ஸ்பெக்டர் நம்பூலைய ரையும் அழைத்து வாரும். அவர்களிடம் இவரைக் காண்பித்து அழைத்து வாரும். அவர்களிடம் இவரைக் காண்பித்துவிட்டால் விஷயங்கள் வெளிப் பட்டுவிடும்" என்று கூறினார்.

"என்ன? நிச்சயமாகத்தானா —!" என்று ஞான சேகரர் வாய்விட்டு அலறிக்கொண்டே, அறையை விட்டு வெளியே சென்ற பூபேந்திரரைப் போகவொட் டாமல் தடுத்தார். பூபேந்திரர் சற்று தேகபலம் அதிகரித்தவ ராதலால், ஞானசேகரரைத் தமது கையால் ஒதுக்கித் தள்ளிவிட்டுப் போலீஸாரை அழைத்து வருவதற்காக வெளியே சென்றுவிட்டார்.

"நாம் விஷயங்களை, வைத்தியரே, சாவதான மாகவே பேசுவோம். நீர் என்னைப் பிடித்துக்கொண் டீர் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். என் னுடைய பொல்லாத காலத்தினால், பொறியில் அகப் பட்ட எலியைப்போல், நான் உம்மிடம் அகப்பட்டுக் கொண்டேன், இருந்தபோதிலும், போலீஸார் வசம் என்னை ஒப்புவிப்பதால் என்ன பிரயோஜனம்? போலீ ஸாருக்குத் தெரிந்தால் கற்பகச் சோலையில் நடந்த

விஷயம் புலனாவது இன்னும் கஷ்டமாகிவிடும். எனக்கு விரோதிகள் இருப்பதுபோல் உமக்கும் விரோதிகள் இருக்கின்றார்கள். ஐயா, அவர்கள் ஒவ்வொரு நிமிஷமும் நீர் செய்யும் விஷயங்களைக் கவனித்துவருகின்றார்கள்'' என்று ஞானசேகரர் சொன்னார்.

“அதாவது,—நான் உம்மைப் போலீஸார்வசம் ஒப்புவித்துவிட்டால், என்னுடைய விரோதிகளோ,— அல்லது உம்முடைய சிநேகிதர்களோ — என்னைக் கொலைசெய்துவிடுவார்கள் என்று பயமுறுத்துகின்றீரோ? பேஷ்! நன்றாய் இருக்கிறது! பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமென்று நினைக்கின்றீரா, என்ன?'' என்று நரேந்திரர் கோபச் சிரிப்புடன் கேட்டார்.

“வைத்தியரே! நான் உம்மைப் பயமுறுத்தவில்லை. என்னை அநியாயமாய்ப் போலீஸாரிடம் ஒப்புவித்து, அந்த அதிசயமும் இனி என்றுமே வெளிப்படாமல் இருக்கும்படி செய்வதைவிட என்னுடன் ஒத்துழைத்து அதை வெளிக்குக் கொண்டுவருவது நலமல்லவா? அதை உத்தேசித்துச் சொன்னேனே தவிர வேறில்லை'' என்று ஞானசேகரர் நயமாயும் சாந்தமாயும் கூறினார்.

“எந்த அதிசயத்தை?'' என்று நரேந்திரர் கேட்டார்.

“அந்த அதிசயந்தான்! சற்றுமுன்பு நீர் சொன்னீரே? ஒரு பெண்மணியின் கொலையைப்பற்றி!'' என்று ஞானசேகரர் உரைத்தார்.

சிறிது நேரம்வரையில் நரேந்திரர் ஒன்றும் பதில் சொல்லாமல் ஏதோ ஒரு விஷயத்தைப்பற்றி ஆழ்ந்து

யோசனை செய்பவரைப்போல், மூக்கின்மேல் விரலை வைத்துக்கொண்டு மேற்கூரையை அண்ணாந்து பார்த்த படியே மௌனமாயிருந்தார். இதற்குள் போலீஸாரை அழைக்கச்சென்ற பூபேந்திரர் மறுபடியும் திரும்பிவந்து, "மைத்துனரே! இன்ஸ்பெக்டர் நம்புலேயர் வந்துகொண்டிருக்கிறார்!" என்று சொல்லிவிட்டு ஞானசேகரரை ஜாடையாகப் பார்த்தார். ஞானசேகரருடைய வதனம் பயத்தினாலும் வருத்தத்தினாலும் வெளுத்தது. அவருடைய முகத்தில் பனித்துளிகளைப்போல் வியர்வை அரும்பிக்கொண்டே இருந்தது. அவருடைய உடல், குளிரினாலும் மழையினாலும் நடுங்குகின்றவனுடைய சரீரத்தைப்போல் நடுங்கிற்று. அவர் நரேந்திரரையும், அந்த அறையையும் சுற்றிச் சுற்றிப் பார்த்தார். பெரிய பாரத்தை இறக்கிக் கீழேவைத்த பின்பு கூலிக்காரன் விடும் பெருமூச்சைப்போல், அவர் நெட்டுயிர்ப்பிட்டார்.

"வைத்தியரே, வைத்தியரே! வேண்டாம், வேண்டாம்! என்னைப் போலீஸாரிடம் ஒப்புவித்தீரேயானால் கற்பகச்சோலை அதிசயம் ஒருபோதும் வெளியாகாது" என்று மிகப் பரிதாபத்துடன் ஞானசேகரர் வாய்குழற உரைத்தார்.

"நீர் என்ன சொன்ன போதிலும், உம்முடைய வார்த்தையை நாங்கள் நம்பமாட்டோம்" என்றார் பூபேந்திரர்.

"ஆம்; வாஸ்தவந்தான்! ஆனாலும் என்ன செய்கிறது. என்னுடைய தற்கால நிலைமை அவ்விதமிருக்கிறது, இருந்தபோதிலும், இச்சமயம் உண்மையை வெளியிட நான் அசக்தனாயிருக்கிறேன்" என்று ஞானசேகரர் சொன்னார்.

"ஏனெனில், போலீஸார் அரஸ்டு செய்துவிடு வார்கள் என்னும் பயத்தினால்,—அப்படித்தானே?" என்று நரேந்திரர் கேட்டார்.

"ஆம்; அப்படித்தான்" என்று சொல்வதைப் போல் ஞானசேகரர் சற்றுப் புன்சிரிப்புடன் தலையை அசைத்தார்.

"வைத்தியரே! நான் ஏதோ ஒரு பெரிய கொலைக் குற்றம் செய்துவிட்டேன் என்றும், அதற்காகப்போலீ ஸாருக்குப் பயப்படுகிறேன் என்றும் நீர் நினைத்துக் கொள்ளவேண்டாம். ஆனாலும், நான் போலிஸார் வசம் போய்விட்டால் உண்மை வெளிப்படாதே என்றுதான் அஞ்சுகிறேன்" என்று ஞானசேகரர் மறுபடியும் வற்புறுத்திக் கூறினார்.

"சரி; அது இருக்கட்டும். கற்பகச் சோலையில் அன்று இரவு என்னிடம் சிகிச்சை செய்துகொண்ட பின்பு நீர் எங்கே சென்றீர்? இப்போது எங்கே இருக் கின்றீர்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நான் பெங்களூருக்குச் சென்றேன். அங் கிருந்துதான் நான் சென்னைக்குஇரண்டு மூன்று தினங் களுக்கு முன்னர் உம்மைப் பார்க்கும் பொருட்டு வந்தேன். நான் யாரென்று உம்மால் கண்டுபிடிக்க முடியாத விதமாய் வந்து உம்மிடம் சில விஷயங் களைத் தெரிந்துகொண்டு போக எண்ணினேன். ஆனாலும் என்னுடைய எண்ணம் பலிக்கவில்லை. நீர் என்னைக் கண்டுபிடித்துவிட்டீர்" என்று சற்று வருத் தத்தோடு ஞானசேகரர் சொன்னார்.

"ஞானசேகரரே! என்னிடம் உண்மையை மறைக் காமற் சொல்லும். ஜெயராம் என்னும் பெயருடைய

ஒருவனை உமக்குத் தெரியுமா?" என்று வைத்தியர் கேட்டார்.

"ஆமாம்; தெரியும்! அவனை நான் சந்தித்து மிருக்கிறேன்,—அவன் மகா கொடியவனுயவனே?"

"சரவணன் என்பவனைத் தெரியுமா?"

"அவனையும் தெரியும்! அவன் ஜெயராமுடைய சிநேகிதன்தான்! அவனும் கொலைபாதகத்துக்கு அஞ்சான்"

"அவர்கள் இருவரும் நேற்று இரவு தங்கசாலை வீதியில் என்னுடைய உயிரை வாங்க சூழ்ச்சி செய்தார்கள்"

"அந்த விஷயமும் எனக்குத் தெரியும்!"

"ஜெயராம் வீட்டுக்கு ஒரு ஐரோப்பிய ஸ்திரீ அடிக்கடி வந்துகொண்டிருந்தாளே? அவளைத் தெரியுமோ?"

"ஓ! அவளையும் நான் அறிவேன்! மிஸ் ரோஸ்பரி என்று அவளை அவ்வீட்டார் கூப்பிடுகிறார்கள்"

"சரி; இருக்கட்டும்! தேவகியைப்பற்றி வேறு விவரம் ஒன்றும் சொல்லமுடியாதா?"

"அதுதான் முடியாது!"

"சரி அவளைப்பற்றி நீர் விவரம் சொல்லாவிட்டாலும் பாதகம் இல்லை! அந்தத் தேவகி என்பவளும், உம்முடைய புத்திரி என்று சொல்லப்படும் வசந்தமாலை என்பவளும் உண்மையில் ஒரே பேர்வழிதானு, அல்லது வெவ்வேறு பேர்வழிகளா?"

"நரேந்திரரே! நல்ல கேள்வி கேட்டீர் என்னுடைய புத்திரி வசந்தமாலை மதுரையில் இருக்கின்றாள்! தேவகியோ சென்னையில் இருக்கின்றாள்! இருவரும் வெவ்வேறுதான்!"

"ஆனால், நான் தேவகியைப் பார்க்க முடியுமோ?"

"அதுதான் முடியாது! அவள் இப்போது உம்மைப் பார்க்கச் சம்மதிக்க மாட்டாள்!"

"ஆனால், சரி! என்னுடைய காரியத்தை நான் பார்க்கவேண்டியதுதான்! மைத்துனரே! போலீஸ் இன்ஸ்பெக்டரை உள்ளே அழைத்துவாரும்" என்று நரேந்திரர் பூபேந்திரரிடம் சொன்னார். ஏனெனில், ஞானசேகரர் சொன்ன பதில்மொழிகள் நரேந்திரருக்கு ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியம் விளைத்தனவேயன்றி, உண்மையைப் புலப்படுத்தக் கூடியனவாக இல்லை.



## 13. அதிசயமான உண்மைகள்



இந்த சமயத்தில் ஒரு போலீஸ் சேவகன் வந்து இன்ஸ்பெக்டர் நப்புலேயர் வெளியே காத்துக்கொண்டிருக்கிறார் என்று நரேந்திரரிடம் சொன்னான். "சற்றுநேரம் இருக்கும்படி சொல்லும்; நான் இதோ வந்துவிடுகிறேன்" என்று நரேந்திரர் அந்தச் சேவகனிடம் சொல்லியனுப்பிவிட்டுப் புன்சிரிப்புடன் ஞானசேகரரைப் பார்த்தார். ஞானசேகரர் என்ன செய்வார், பாவம்! போலீஸார் வசம் அகப்படுவதற்கும்

இஷ்டமில்லாமல், உண்மையை நரேந்திரரிடம் சொல்லுவதற்கும் விருப்பமில்லாமல் தயங்கினர். மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல், இருதலைக் கொள்ளி எறும்புபோல அவர் பரிதபிப்பதைக் கண்ட பூபேந்திரர், புன்முறுவலோடு நரேந்திரரைப் பார்த்துத் தம் கண்ணிமையை ஒரு முறை மேலே தூக்கிச் சரேலென்று மூடினர். அவருடைய கண்ணடியைக் கண்ட நரேந்திரர் விஷயம் இன்னதென்று அறிந்து கொண்டு "ஞானசேகரரே! வீணுகக் காலதாமதம் செய்வானேன்? உண்மையைச் சொல்லுகின்றீரா, அல்லது இன்ஸ்பெக்டரை உள்ளே அழைக்கவா?" என்று அதிகாரத்துடன் கேட்டார்.

"நரேந்திரரே! பூபேந்திரரே! என்னுடைய உயிரும் உடலும் உங்களுடைய கையி லிருக்கின்றனவென்பதை நான் அறிவேன். நீங்கள் பார்த்து என்னை ரட்சிக்க வேண்டுமானல் அவ்விதமே செய்யலாம்; சிட்சிக்க வேண்டுமானலும் உங்களாலே முடியும். நரேந்திரரே! கற்பகச் சோலையிலும், தங்கசாலை வீதியிலும் உம்முடைய உயிரை வாங்குவதற்கு சூழ்ச்சி செய்த சதிகாரருடன் நான் சம்பந்தப்பட்டிருக்கிறேன் என்று நீர் நினைக்கின்றீர். ஆனல் அவர்களோடு எனக்கு சிநேகபாவமான எவ்வித சம்பந்தமும் கிடையாதென்று நான் பிரமாணமாகச் சொல்லுகிறேன். உம்முடைய உயிரை வாங்க நான் பிரயத்-தனப்படவுமில்லை; அவ்விதம் பிரயத்தனப்பட்டவர்களுடன் நான் சம்பந்தப்படவுமில்லை! நான் சொல்லுவதை நம்பும்" என்று மிகுந்த பரிவுடன் சொல்லி மன்றுடினர்.

"அப்படியானால் விஷயங்களைத் தாராளமாய்ச் சொல்லுவதற்கு நீர் ஆட்சேபிப்பானேன்?" என்று பூபேந்திரர் உசாவினர்.

"ஆட்சேபம் ஒன்றுமில்லை. ஒரு பரமரகசியம் இருக்கிறது. பெரிய இடத்தில் பிறந்து, பெரிய இடத்தில் வளர்ந்து, பெரிய சீமாட்டிகளுடன் ஊடாடிப் பழகிவரும் ஒருவரைப் பற்றிய ரகசியம் அது. இன்னும் விவரமாய்ச் சொல்லவேண்டுமானல், — ஒரு பெண்மணியின் கன்னியமும் கௌரவமும் காப்பாற்றப்பட வேண்டும் என்று சொல்லலாம். அந்த இரகசியம் இப்போது வெளியானல், அதாவது விஷயங்கள் இப்போதிருக்கிற நிலைமையில் பகிரங்கத்துக்கு வந்துவிடுமானல், போய்விடும்,— அவளுடைய மானம்! அதற்காகவே நான் இவ்வளவு பிடிவாதம் செய்ய வேண்டியிருக்கிறது. இல்லாவிடில் நான் தாராளமாய் விஷயங்களைச் சொல்லி விடுவேன். கற்பகச்சோலை அதிசயம் உங்களுக்கு வெகு எளிதில் புலப்பட்டு விடும்" என்று ஞானசேகரர் இருவரையும் நோக்கிச் சொன்னர்.

"ஆதலால், நீர் ஒன்றும் சொல்ல மாட்டீர்!" என்று நரேந்திரர் ஒருவிதமான பார்வையுடன் கேட்டார்.

"ஆம்; சொல்லமாட்டேன், — உத்தர வில்லாமல்!"

"யாருடைய உத்தரவு?"

"தேவகியின் உத்தரவு!"

நான்தான் அப்போதே சொன்னேனே? தேவகி சென்னையில்தானே இருக்கின்ருள்? அவளை இங்கு வர

வழைத்து அவள் மூலமாகவே விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம் என்றேனே? நீர் சொல்லி யனுப்பினால் அவள் வரமாட்டேன் என்று சொல்லுவாளா? இங்கு வரும்படியாக ஒரு கடிதம் எழுதி என்னிடம் கொடும், நான் பூபேந்திரனை அனுப்பி அவளை அழைத்து வரும் படி சொல்லுகிறேன். ஜட்காவண்டியில் போனால் அரைமணி நேரத்துக்குள் சென்னைக்குப் போய்விட லாம். தேவகியை அழைத்துக்கொண்டு மறுபடியும் மயிலாப்பூர் வருவதற்கு அரைமணி நேரந்தான் பிடிக் கும், என்ன சொல்லுகிறீர்?" என்று நரேந்திரர் அழுத்தி வினவினார்.

ஞானசேகரர் சற்று நேரம் தயங்கினார். பிறகு வேறுவழி ஒன்றுங் காணாதவராய் பெருமூச்சு ஒன்று மாசுணம்போல் விட்டுக்கொண்டே "நரேந்திரரே! இங்கு வரும்படியாக நான் தேவகியைக் கேட்டுக் கொள்ளக்கூடும். ஆனால் அவளைக் கட்டாயப்படுத்தி வரத்தான் வேண்டுமென்று சொல்ல எனக்கு அதிகா ரம் இல்லை" என்று கூறினார்.

"இருக்கட்டும்; சீக்கிரம் அவளுக்கு ஒரு கடி தம் எழுதும். அவள் வருவதற்கு மறுத்து விட்டால் பிறகு யோசித்துக்கொள்ளலாம்" என்று நரேந்திரர் சொன்னார்.

அறையில் போடப்பட்டிருந்த தம்முடைய மேஜையைத் திறந்து பூபேந்திரர் காகிதம், மை, எழு துகோல் முதலியவைகளை எடுத்து மேஜையின்மீது வைத்தார். ஞானசேகரர் ஒரு காகிதத்தை எடுத்து அதில் இரண்டொரு வரிகளை எழுதி மடித்து அதனை ஒரு காகித உறையுள் போட்டு, உறையை மடித்து

ஒட்டினார். மேல் விலாசம் எழுதியபின்பு கடிதத்தை பூபேந்திரர் கையில் கொடுத்தார். "ஸ்ரீமதி அகிலாண்டம்மை மேல்பார்த்த மாட்சிமைதங்கிய ஸ்ரீமதி தேவகி அம்மைக்குக் கொடுப்பது, 246 — தம்புச் செட்டித்தெரு, சென்னை" என்று மேல்விலாசம் எழுதப்பட்டிருந்ததைக் கண்ட நரேந்திரருக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. "மாட்சிமைதங்கிய என்று எழுதியிருப்பதன் காரணம் என்ன?" என்று யோசித்தார். ஏனெனில் அரசர்களுக்கும் அரசகுடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குமே "மாட்சிமை தங்கிய" என்னும் பதம் உபயோகப்படுத்தப்படும் என்பதை அவர் அறிந்திருந்தார். இருந்தபோதிலும் அதைப்பற்றி யோசிக்கச் சமயம் இதுவன்று என்று நினைத்துக் கடிதத்தை பூபேந்திரர் கையில் கொடுத்தனுப்பினார். ஒரு மணி நேரம் கழித்து தேவகி சகிதம் பூபேந்திரர் வந்தார்.

பூபேந்திரருடன் அறைக்குள் வந்து நுழைந்த தேவகியின் கண்கள், அங்கு உட்கார்ந்திருந்த நரேந்திருடைய கண்களைச் சந்தித்தன. அவரைக் கண்டவுடன் அவள் பயத்தினால் திடுக்கிட்டவளைப்போல், இரண்டொரு அடி பின்வாங்கினாள். பயத்தினால் அவளுடைய முகம் மாறுதலடைந்தது; அச்சத்தினால் அவளுடைய பார்வை நிலை பிறழ்ந்தது; திகிலினால் அவளுடைய தேகம் நடுங்கிற்று. இவ்விதம் தேவகி பயப்படுவதற்குக் காரணம் என்னவென்று—இதை வாசிப்போர்—சந்தேகப்படலாம். ஆனாலும் அன்றிரவு கற்பகச் சோலையில் மயக்கமருந்து கலக்கப்பட்ட சாராயத்தை நரேந்திரருக்குக் குடிப்பதற்குக் கொடுத்தவள் தேவகி அல்லவா? ஆகவே, அவள் அஞ்சுவது இயல்பு என்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ?

நாற்காலியின்மீது அதிக அயர்வுடனும், மிகுந்த மனக்கலக்கத்துடனும் சாய்ந்துகொண்டிருந்த ஞான சேகரர், தேவகியைக் கண்டவுடன் நிமிர்ந்து உட் கார்ந்துகொண்டு, "தேவகி! நான் கூப்பிட்டனுப்பிய வுடன் நீ வந்ததற்காக நான் மிகவும் சந்தோஷப்படு கிறேன்! வைத்தியர் நரேந்திரரை உனக்குத் தெரி யுமா? இப்போது,—" என்று கேட்டார்.

"ஓ! தெரியாமலென்ன?" என்று பதில் சொல்லி விட்டு, நரேந்திரரை ஏறிட்டுப் பார்ப்பதும், பிறகு பூபேந்திரரைப் பார்ப்பதும், மறுபடியும் திரும்ப நரேந்திரரை நோக்குவதுமாகச் சிறிதுநேர மிருந் தாள். நரேந்திரரும், அவருடைய மைத்துனரும் அவளை வியப்புடனும், ஆச்சரியத்துடனும் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஏனெனில், அவளுடைய அழகு அவர்களை ஆனந்த ஆழியில் ஆழ்த்திவிட்டது. பூபேந்திரரோ சாதாரணமாக அவளுடைய அழகை வியந்துகொண் டிருந்தார். நரேந்திரரோ அவ்வநிதையின் வனப்பி னால் வாட்டமடைந்தார். குற்றமில்லாத நீரோட்டமு டைய பட்டை தீட்டிய வைரக் கற்களைப்போல் அவளு டைய கண்களிலிருந்து வெளிப்பட்ட பிரகாசமானது நரேந்திரருடைய கண்ணொளியை மறைத்துவிடும் போலிருந்தது. நத்தைக் கூட்டின் உட்புறத்திலிருக் கும் ஒருவகையான சிவந்த நிறத்தைப்போல், அவளு டைய இரண்டு கன்னங்களிலும் ஒரோர் இடங்களில் தோன்றிய செந்நிறத்தைக் கண்டு,—காலஞ்சென்ற ராஜா ரவிவர்மா எழுதியிருக்கும் "மோஹினி" படத் தைப் பார்த்து "ஆஹா! எவ்வளவு அற்புதமான வேலை! வசந்த காலத்தில் மரங்கள் தழைத்திருப்ப

தும், ஒரு மரத்தின் கிளையில் ஊஞ்சல் கட்டித் தொங்குவதும், அதில் மோஹினி மிகுந்த உல்லாசத்துடன் உட்கார்ந்து ஆடுவதும், இளந் தென்றலினால் அவளுடைய கூந்தல், ஏற்கெனவே சிறிது அசைந்துகொண்டிருந்தபோதிலும், ஊஞ்சல் ஆடும் வேகத்தினால், தன்னுடைய தலைவி ஊசலில் உட்கார்ந்து ஆடி மகிழ்வதைக் கண்டு தானும் மிகுந்த மகிழ்ச்சி கொண்டதைப் போல், வெற்றி கொண்ட மன்னவர்களின் கோட்டை மதிலின்மீது கம்பீரமாய்ப் பறந்துகொண்டிருக்கும் வெற்றிக் கொடிகளை யொப்ப நாலாபக்கத்திலும் பரவிப் பறப்பதையும், கச்சணியப்படாத அவளுடைய மார்பை விட்டுப் பிரியவும் மனமில்லாமல், அந்தத் தென்றற் காற்றை அனுபவியாதிருக்கவும் மனமில்லாமல் அவளுடைய மார்ச்சீலை சிறிது விலகுவதும் மறுபடியும் மூடுவதுமாக அசைந்துகொண்டிருப்பதையும், ஒரு பக்கத்துள்ள ஊஞ்சற் கயிற்றின் உட்புறமாக ஒரு கையையும், மற்றொரு பக்கத்துக் கயிற்றின் வெளிப்புறமாக மற்றொரு கையையும் தூக்கியபடியே கொடுத்துப் பிடித்திருப்பதால் அவளுடைய அழகிய கரங்களில் பச்சை இளநரம்புகள் தோன்றுவதையும், எவ்வளவு உண்மையாகவும் பொருத்தமாகவும் ராஜா ரவிவர்மா எழுதி யிருக்கிறார்? ஆஹா! சித்திரத்தின் மாட்சியே மாட்சி!'' என்று ஓவியப்பிரியர்கள் எவ்விதம் வியந்து வியந்து மனோபாவகம் செய்வார்களோ அவ்விதமே, — நரேந்திரர் அவ்வளவு சிறந்த செந்நிறத்தைத் தேவகியின் கதுப்புகளில் அமைத்த நான்முகச் சிற்பியின் கைவன்மையை வியந்து வியந்து பாராட்டி ஆனந்த மடைந்தார். இந்த ஆனந்தத்தினால் தன்னையும் மறந்து அவர் சிறிதுநேரம் ஒன்றும்

பேசாமலிருந்தார். கடைசியில், சொப்பனுவஸ்தையிலிருந்து திடீரென்று சாக்கிராவஸ்தைக்கு வந்த ஒருவனைப்போல், அவர் தம்முடைய காதல் நித்திரையிலிருந்து விழித்துக்கொண்டு, பெருமூச்சுவிட்டு "தேவகி! இதற்குமுன்பு நாம் இருவரும் ஒருமுறை சந்தித்திருப்பதை நீ மறந்திருக்கமாட்டாய் என்றே நினைக்கிறேன். எதற்காக சந்தித்தோம் என்னும் விஷயமும் உனக்குத் தெரிந்ததே!" என்று சொன்னர்.

"ஆம்; எல்லாம் எனக்குத் தெரிந்தவைதான்! நான் ஒன்றையும் மறந்துவிடவில்லை. அதிலும்——" என்று சொல்லி அதற்குமேல் ஒன்றும் சொல்லமுடியாமல் அவள் ஞானசேகரரைப் பார்த்தாள்.

"தேவகி! நீ வந்துதான் என்னைக் காப்பாற்றினுய்! நரேந்திரர் என்னைப் போலீஸார்வசம் ஒப்புவித்து விடுதற்கு இருந்தார்" என்று ஞானசேகரர் சொன்னர்.

"நரேந்திரர் மிக நல்லவராவரே! அவர் ஒருகாலும் அவ்விதம் செய்யவே மாட்டார்!" என்று சிரித்துக்கொண்டே தேவகி ஞானசேகரருக்குப் பதில் சொல்லிவிட்டு, புருவத்தைச் சற்று மேலே நெரித்துக் கடைக்கண்ணுல் நரேந்திரரைப் பார்த்துப் புன்முறுவல் கொண்டாள்.

"தேவகி! மற்ற விஷயங்களைப் பிறகு பேசிக்கொள்ளலாம். நான் கேட்பதற்கு பதில் சொல்! நான் உனக்கு ஒரு தீங்கும் செய்யாதிருக்கும்போது, மயக்க மருந்து கலந்த சாராயத்தைக் கொடுத்து என்னைக் கொல்லப் பார்த்தாயே? என்ன காரணம்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நரேந்திரரே! உண்மையை அறிந்துகொண்டீரானால் இவ்விதம் என்மீது பழிசுமத்த மாட்டீர்! ஆனாலும் இச்சமயம் நான் உண்மையை வெளியிட முடியாதவளாக இருக்கிறேன்!" என்று தேவகி மிகுந்த அனுதாபத்தோடு கூறினாள்.

"என்ன? தேவகி! மயக்க மருந்து கலக்கப்பட்ட சாராயத்தை நீயே எனக்குக் கொடுத்துவிட்டு, இவ்விதம் இப்போது பேசுகின்றாயே?" என்று ஆச்சரியத்தோடு நரேந்திரர் கேட்டார்.

"நான் அவ்விதம் கொடுத்ததை மறுக்கவில்லை! ஆனால், சாராயத்தில் மயக்க மருந்து கலந்திருந்ததை நான் அறிந்திலேன். நீர் அதைச் சாப்பிட்டு மயங்கி விழுந்த பின்புதான் எனக்கு உண்மை தெரிந்தது. என்னுடைய உயிரை வாங்குவதற்காக என்னுடைய விரோதிகள் அவ்விதம் செய்திருந்தார்கள் என்றும், அதை அறியாமல் உமக்குக் கொடுத்து மோசம் போனேன் என்றும் பிற்பாடு அறிந்தேன்" என்று தேவகி வற்புறுத்திச் சொன்னாள்.

"சரி, அது இருக்கட்டும். கற்பகச்சோலையில் ஒரு படுகொலை நடந்திருக்கிறதல்லவா? ஒரு பெண்மணி அங்கு கொலை செய்யப்பட்டிருக்கிறாள் என்பது வாஸ்தவந்தானே? மறைக்காமல் சொல்ல முடியுமோ?" என்று நரேந்திரர் திடீரென ஒரு வினா நிகழ்த்தினார்.

"உமக்குத் தெரிந்த விஷயத்தை நான் மறைப்பதனால் என்ன பிரயோஜனம்? ஒன்றுமில்லை. அங்கே ஒரு நங்கை கொலை செய்யப்பட்டிருக்கிறாள் என்பது வாஸ்தவமேயாம்" என்று தேவகி விடையளித்தாள்.

"அந்தப் பெண் யார்? அவளுடைய பெயரென்ன?"

"அந்த விவரமெல்லாம் இப்போது சொல்லக்கூடாது. சொன்னால் கற்பகச்சோலை அதிசயம் வெளியாகாமற்போம். பின்பு ஒரு சமயத்தில் தானே வெளிவரும்" என்று தேவகி சொன்னாள்.

"அவளுடைய இயல்பு என்ன?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நரேந்திரரே! அந்தப் பெண் கொலையுண்டிறந்ததைப் பற்றி உலகத்தாருக்கு இன்னும் ஒன்றுமே தெரியாது. அவள் இறந்துபோன சங்கதி வெளியானவுடன், இந்தியாதேசம் முழுமையும் அல்லோலகல்லோலப்படும் என்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. அவள் அவ்வளவு கௌரவமும் செல்வாக்கு முடையவள்" என்று தேவகி பகர்ந்தாள்.

"ஆ! இவையெல்லாம் அதிசயமான உண்மைகளாக இருக்கின்றனவே!" என்று நரேந்திரர் வியப்புடன் ஆழ்ந்து தாமே சிந்தனை செய்யலானார்.



## 14. விஷயங்களை வெளியிடமுடியாத தேவகி



"அவ்வளவு மதிப்பும் கௌரவமுமுடைய பெண் யாராக விருக்கலாம்? தயைசெய்து அவள் பெயரைச் சொல்லக்கூடாதா?" என்று நரேந்திரர் மிக்க ஆவலுடன் தேவகியைக் கேட்டார்.

"வைத்தியரே! நீர் என்னை மன்னிக்க வேண்டும்! இச்சமயம் அவளுடைய பெயரை வெளியிட மாட்டேன். அவளுடைய உயிரை, எவர்கள் சதியாலோ சுனைசெய்து வாங்கினார்களோ, அவர்களே உம்முடைய உயிரையும் வாங்குவதற்கு அநேக சூழ்ச்சிகளைச் செய்துவருகிறார்கள், — என்னுடைய உயிரையுந்தான்" என்று தேவகி கூறினாள்.

"தேவகி சொல்லுகிறதைப் பார்த்தால், மைத்துனரே, உம்முடைய முயற்சியும் அவளுடைய முயற்சியும் ஒன்றுக்கொன்று சாதகமாய் இருக்குமென்றே எனக்குத் தோன்றுகிறது" என்று பக்கத்தில் நின்று கொண்டிருந்த பூபேந்திரர் இடையிற் பேசினார்.

"ஆம்; அதிலும் சந்தேகமா? கற்பகச் சோலையின் பேர் அதிசயம் வெளியாக வேண்டுமானால், நானும் நரேந்திரரும் சிநேகபாவமாயிருந்து முயற்சி செய்யவேண்டுமே தவிர ஒருவருக்கொருவர் விரோத பாவம் பாராட்டுவதில் பிரயோஜனமில்லை" என்று தேவகி இணங்கி உரைத்தாள்.

"ஞானசேகரருக்கு வெடிவிபத்தால் காயம் படுவானேன்? கற்பகச்சோலைக்குள் அவர் என்ன வேலை, யந்திரங்களைக் கொண்டு செய்து வந்தார்?" என்று நரேந்திரர் தேவகியை நயமாக உசாவினார்.

"அவருடைய விரோதிகள் வேண்டுமென்றே மின்சாரத்தினால் வெடியுண்டாகும்படி செய்தார்கள். தெய்வ சகாயத்தால் அவர் மயிரிழை தப்பினார். இல்லாவிட்டால், அந்தப் பாதகர்கள் செய்த வேலைக்கு அவருடைய சரீரம் தூகள் தூகளாய்ப் போயிருக்க வேண்டும். நூதன முறையை அனுஷ்டித்து ஒரு

மின்சார யந்திரத்தை ஞானசேகரர் கற்பகச் சோலையில் கண்டுபிடித்துக் கொண்டிருந்தாரே தவிர பிறிதில்லை" என்று தேவகி மறுமொழி தந்தாள்.

"தேவகி! வெடி விபத்து நேரிட்ட அன்றிரவு ஒரு மனிதன் சதானந்தர் வைத்தியசாலைக்கு வந்து, தன்னுடைய கைக்கு என்னிடம் சிகிச்சை செய்து கொண்டு போனானே, உனக்கு ஞாபகமிருக்கிறதா? ஒருசமயம அந்த மனிதனே வெடிவிபத்து உண்டாகும்படி செய்திருப்பானோ?" என்று நரேந்திரர் சந்தேகத்துடன் கேட்டார்.

"இல்லை; இல்லை! அந்த மனிதன் எனக்கும், ஞானசேகரருக்கும் மிகவும் வேண்டியவன், உமக்கும் அவன் சிநேகிதனே யொழிய விரோதி யல்லன்" என்று தேவகி புகன்றாள்.

"என்ன; என்ன! அம்மனிதன் எனக்கும் சிநேகிதனா? அவ்விதமிருக்க முடியவே முடியாது" என்று வைத்தியர் அவநம்பிக்கையால் ஆச்சரியப்பட்டு அலறினார்.

நரேந்திரருக்கு இந்தச் செய்தி இன்னும் அதிகமான ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. இதுவரையில் அவரும் பூபேந்திரரும் கொண்ட அனுமானங்களெல்லாம் பிரயோஜனமின்றிக் கவிழ்ந்து போயின. கற்பகச்சோலை அதிசயம் திடுக்கிடும்படியான இவ்வளவு பெரிய அதிசயமாக இருக்குமென்று அவர் நினைத்தவரே யல்லர். தவிர, இரண்டு பெண்கள் அவருடைய மனோபாவக விழிகளின் முன்னால் சதா சர்வ காலமும் தோன்றிக்கொண்டே இருந்தார்கள். மறுநாள் தன்னுடைய கிருகத்துக்கு வரும்படி தேவகி

நரேந்திரரிடம் சொல்லிவிட்டு ஞானசேகரரையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போய்விட்டாள். தேவகியும் அழகிற் சிறந்தவள்தான்; மிஸ் ரோஸ்பரியும் அழகிற் சிறந்தவளே. ஆனால், தேவகியோ கற்பகச் சோலையில் நரேந்திரருக்கு மயக்க மருந்து கலந்த சாராயத்தைக் கொடுத்தாள்; மிஸ் ரோஸ்பரியோ திருவொற்றியூரிலுள்ள ஜெயராம் வீட்டுக்கு நரேந்திரர் மறுபடியும் வந்தால் அவருக்கு ஆபத்து நேரிடுமென்று எச்சரித்தாள். ஆகவே, இவ்விருவருள் யார் நற்குணமும் நற்செய்கையுமுடையவர்கள் என்பதைத் தீர்மானிப்பதில் நரேந்திரருடைய மூளை அன்று வேலை செய்துகொண்டிருந்தது.

மறுநாட் காலையில், நரேந்திரர் மைலாப்பூரை விட்டுப் புறப்பட்டு, 'டிராம்' வண்டியிலேறி சென்னை ஹைகோர்ட்டண்டை வந்திறங்கினர். அங்கிருந்து தம்புச் செட்டித் தெருவுக்குப் போதல் சுலபமேயாதலால், நடந்தே தம்புச்செட்டித் தெருவில் 246-ம் நம்பர் வீடு எங்கிருக்கிறதென்று விசாரித்துக்கொண்டே சென்று தேவகியின் ஜாகையை அடைந்தார். வீட்டு வாயிற்படியினில் நின்றுகொண்டிருந்த சேவகனை அவர் "தேவகி அம்மா எங்கே? வீட்டில் இருக்கின்றாரா?" என்று கேட்டார். அதற்கவன், "ஐயா! எனக்குத் தெரியாது! சற்றுநேரம் இருங்கள்! நான் உள்ளே சென்று அகிலாண்டம்மாவை விசாரித்துச் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் அந்தச் சேவகன் திரும்பிவந்து நரேந்திரரை உள்ளே போகும்படி சொன்னான். நரேந்திரரும் அவ்விதமே உள்ளே சென்றார். கூடத்தில் ஒரு ஸ்திரீ—உயர்ந்து பருத்த

சரீர முடையவள் — உட்கார்ந்துகொண் டிருந்தாள். அவள் நரேந்திரரைப் பார்த்து விட்டு "ஐயா! தாங்கள் யார்? என்ன விசேஷம்?" என்று கேட்டாள். தேவகியைப் பார்க்க வந்திருப்பதாக நரேந்திரர் சொல்லவே, அவள் "ஐயா! தாங்கள் யார்? உங்களுடைய பெயரென்ன?" என்று மறுபடியும் கேட்டாள்.

"என்னுடைய பெயர் நரேந்திரர். தேவகி அம்மாளையும் ஞானசேகரரையும் ஒரு வேலையை முன்னிட்டுப் பார்க்க வந்தேன்!" என்று வைத்தியர் சொன்னார்.

"ஞானசேகரரா? அவர் யார்? அந்தப் பெயருடைய மனிதர் எவரும் இங்கில்லையே!" என்று அந்த ஸ்திரீ சொன்னாள். அவள்தான் அகிலாண்டம்மை என்று நரேந்திரர் பின்னால் நடந்த சம்பாஷணையால் அறிந்துகொண்டார். அகிலாண்டம்மை, வீட்டின் பின்கட்டுக்குச் சென்று தேவகியைக் கூடத்திற்கு வரச் சொல்லிவிட்டு அவள் உள்ளேயே தங்கி விட்டாள். தேவகி கூடத்திற்கு வந்து நரேந்திரரைச் சந்தித்தாள்.

"வைத்தியரே, வரவேண்டும்! நேற்று சொன்னபடியே குறித்த நேரத்தில் வந்துவிட்டீர்களே; மிகவும் சந்தோஷம்! அகிலாண்டம்மையை நீங்கள் கண்டு பேசினீர்கள்போல் தோன்றுகிறதே?" என்று தேவகி நரேந்திரரைக் கேட்டாள்.

"ஆம்; கண்டு பேசினேன்! ஆனாலும், ஒரு விஷயம் முன் யோசனையின்றி நான் செய்துவிட்டேன். அதாவது, ஞானசேகரர் இருக்கின்றாரா என்று நான்

அவளைக் கேட்டுவிட்டேன்'' என்று நரேந்திரர் முகத்தைச் சுளித்துக்கொண்டும் கையை உதறிக்கொண்டும் சொன்னார்.

"என்ன! ஞானசேகரரைப்பற்றி அவளைக் கேட்டீர்களா, என்ன?'' என்று ஆச்சரியத்தோடும், அச்சத்தோடும் தேவகி வைத்தியரைக் கேட்டுவிட்டு, "ஆனாலும், அவர் யார் என்று அவளிடம் சொல்லவில்லையே?'' என்று சற்று சாவதானத்துடன் வினவினாள்.

"இல்லை; நான் சொல்லவில்லை! ஏனெனில், ஞானசேகரர் யார் என்று எனக்கே உண்மையில் சிறிதும் தெரியாதாதலால்!'' என்று வைத்தியர் இளநகையுடன் பதில் அளித்தார்.

தேவகி ஒன்றும் பதில் சொல்லாமல், இமையா நாட்டத்தோடு நரேந்திரரைப் பார்த்துக்கொண்டே, முல்லையரும்புகளை நிகர்த்த வெண்பற்கள், சற்று வெளியே தெரியும்படி புன்முறுவல் கொண்டாள். அதிகாலையில் உதிக்கும் இளஞ் சூரியனின் ஒளியைக் கண்டு மைதானப் புற்களும் பைங்கானப் புட்களும் எவ்விதம் முகமலர்ந்து சந்தோஷக் குறிப்பினைக் காட்டுமோ, அவ்விதமே நரேந்திரரும் முகமலர்ந்து தன் சந்தோஷக் குறிப்பினைக் காட்டினார். ஏனெனில், தேவகியின் முகமாகிய குளிர்ந்த இளஞ்சூரியன், பற்களென்னும் கதிர்கள் வழியாக பரப்பிய புன்முறுவலொளியானது, நரேந்திரருக்குப் புது உற்சாகத்தையும் கிளர்ச்சியையும் கொடுத்தது. அவர் தன்னையும் மறந்தவராய் சிறிதுநேரம் வரையில் அந்த ஒளியின் வயப்பட்டு ஸ்தம்பித்திருந்து, பழையபடி, உறக்கத்

திலிருந்து விழித்தவரைப்போல் முகத்தைத் துடைத்துக்கொண்டு, தேவகியிடம் பேசுதற்கு ஆரம்பித்தார்.

"தேவகி! அன்று இரவு சதானந்தர் வைத்திய சாலைக்கு வந்து என்னிடம் சிகிச்சை செய்துகொண்டு போன மனிதன் உன்னுடைய விரோதியல்லனென்றும், சிநேகிதனே எனறும், நேற்றிரவு என்னிடம் சொன்னாயே? ஆனால், அன்றிரவு நீ குதிரைமீது வந்து என்னைக் கற்பகச் சோலைக்கு அழைத்தபோது, அறையில் எரிந்துகொண்டிருந்த கணப்புக்குச் சமீபத்திற் கிடந்த கடிதத்தைக் கண்டு, அந்த மனிதன் உன்னுடைய விரோதியாக இருக்கவேண்டுமென்றன்றோ நான் நினைத்திருக்கிறேன்!" என்று நரேந்திரர் சொன்னார்.

"ஆம்; அப்போது நான் அப்படித்தான் நினைத்தேன்! அவன் எங்களைக் காட்டிக் கொடுத்துவிட்டானென்றும், இரகசியத்தை வெளியிட்டுவிட்டான் என்றும் நான் சந்தேகித்தேன்!" என்று தேவகி கூறினாள்.

"வெளியிடுவதா—? எதை?" என்று நரேந்திரர் சற்று ஆச்சரியத்தோடு வினவி, "உங்களுடைய — கற்பகச் சோலை அதிசயத்தை? அப்படித்தானே?" என்று மீண்டும் கேட்டார்.

தேவகி "ஆம்" என்று சொல்லுபவள்போல் தலையை அசைத்தாளே ஒழிய வாயைத் திறந்து ஒன்றும் பதில் சொல்லவில்லை. நரேந்திரருக்கோ கோபம் வந்துவிட்டது.

"பெண்ணே! இன்னமும் நீ இரகசியத்தைச் சொல்ல மறுக்கின்றாயா, என்ன? கற்பகச் சோலையில் நடந்த படுகொலையைப்பற்றி உனக்குத் தெரிந்த விஷ

யங்களைச் சொல்லமாட்டாயா? இன்னமும், நீ உண்மையை மறைக்கப் பார்ப்பது சரியன்று!'' என்று நரேந்திரர் ஆத்திரத்தோடு கூறினார்.

"இல்லை ; அந்தக் கொலையைப்பற்றி நானும், ஞானசேகரரும் துப்புவைத்து விசாரித்து வருகிறோம். இன்னும் உண்மை புலப்படவில்லை. நான் சொல்லுகின்ற விஷயம் அந்தக் கொலையைப்பற்றியதன்று'' என்று தேவகி கூறினாள்.

"மங்கையே! இவ்விதம் மறைத்து மறைத்துப் பேசுவதிற் பிரயோஜனமில்லை. தெளிவாயும், வியக்தமாயும் பேசினாயானால் நலமாயிருக்கும். நீ சொல்லுகிற அந்தப் பெரிய இரகசியம் கற்பகச்சோலையில் நடந்த கொலையைப்பற்றியதன்றாயின், மற்று எதனைப் பற்றியது?'' என்று நரேந்திரர் கேட்டார்.

"நரேந்திரரே! நான் கற்பகச் சோலையில் நடந்த கொலையை ஒரு பெரிய இரகசியம் என்று சொல்ல வரவில்லை. "கற்பகச்சோலை'' ரகசியத்தைப் பற்றியே சொல்லுகிறேன். அதாவது, ஞானசேகரர் அங்கு மின்சார உதவியைக்கொண்டு நடைபெறக்கூடிய சில நூதன இயந்திரங்களைக் கண்டுபிடித்துக்கொண்டிருந்தாரே, அந்த இரகசியத்தைப் பற்றியே நான் பேசுகிறேன்'' என்று தேவகி பதில் அளித்தாள்.

"அதுவென்ன, அவ்வளவு பெரிய இரகசியமா?'' என்று நரேந்திரர் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"ஆம்; அது ஒரு பெரிய இரகசியந்தான்,—எத்தனையோ இலட்சம் ரூபாயைப் பொறுத்த இரகசியம் அது'' என்று தேவகி சொன்னாள்.

"அந்தப் பாதாள அறையில் வரிசையாக வைக்கப்பட்டிருந்த பெரிய இரும்புப் பெட்டிகள்தான் அந்த ரகசியத்தை அடக்கிக்கொண்டிருக்கின்றன போலும்!" என்று வைத்தியர் சந்தேகத்தோடு கேட்டார்.

"ஆம்; அந்தப் பரமரகசியம் அவைகளில்தான் இருக்கிறது. அந்த ரகசியத்தையே அன்றிரவு உம்மிடம் சிகிச்சை செய்துகொள்ளவந்த அம்மனிதன் சொல்லிவிட்டான் என்று நான் முதலில் சந்தேகித்தேன்" என்று தேவகி சொன்னாள்.

"அதற்காகத்தான் மயக்க மருந்து கலந்த சாராயத்தை அன்றிரவு எனக்கு நீ கொடுத்தாயோ?" என்று நரேந்திரர் கேட்டார்.

"வைத்தியரே! சாராயத்தை உமக்கு நான் கொடுத்தது வாஸ்தவமே. ஆனால், உம்மைக் கொல்ல வேண்டு மென்னும் கெட்ட எண்ணத்தோடு நான் கொடுக்கவில்லை. உண்மையில் மயக்க மருந்து கலந்த சாராயம் என்பதை நான் அச்சமயம் தெரிந்திலேன். என்னுடைய உயிரைவாங்க, யாரோ எனக்குத் தெரியாமல் சாராயத்தில் மருந்து கலந்திருக்கிறார்கள். அவர்களுடைய சூழ்ச்சியில் நான் சிக்காவிட்டாலும் நீர் சிக்கிக்கொண்டீர்" என்று தேவகி சொன்னாள்.

"அந்தக் கூனன் ஒருசமயம் கலந்திருப்பானோ? அவன் நடத்தை எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவன்மீது எனக்கு அன்றே சந்தேகமுண்டாயிற்று" என்று நரேந்திரர் கூறினார்.

"ஐயோ! கந்தன் மிகவும் நல்லவனாவனே! அவனுடைய விகார ரூபத்தையும், கூன் முதுகையும் கண்டு

நீர் அருவருப்புடன் அவனை நோக்கியிருப்பீர். ஆனுலும், அவன் இல்லாவிட்டால் நாங்கள் எல்லோரும் போலீஸார் வசம் அகப்பட்டு ஜெயிலுக்குப் போயிருக்க வேண்டியதுதான்!" என்று தேவகி பதில் சொன்னுள்.

"போலீஸார் வசம் அகப்பட்டால் என்ன?" என்று வைத்தியர் கேட்டார்.

"இந்தியா முழுமையும் அல்லோலகல்லோலப் பட்டுவிடும். வடக்கே இமயம் முதல் தெற்கே குமரி ஈருக உள்ள எல்லா ஊர்களிலும் இந்தச் செய்தி ஒரு பெரிய கிளர்ச்சியை உண்டாக்கிவிடும்" என்று தேவகி கூறினுள்.

"அப்படியானல், போலீஸார் பிடித்துக்கொள்ளுவார்கள் என்று ஞானசேகரர் பயப்படுகிருரோ?" என்று நரேந்திரன் வினவினுர்.

"ஆம்; அவ்விதம் அஞ்சுவது இயல்புதானே?" என்று தேவகி உரைத்தாள்.

"தேவகி! நீ சொல்லுவதைக்கொண்டு ஞானசேகரர் ஏதோ ஒரு பெரிய காரியத்தை முன்னிட்டுக் கற்பகச் சோலையில் வெடி குண்டுகள் தயார் செய்து கொண்டிருந்தார் என்று நினைக்கிறேன். நான் சொல்லுவது சரிதான?" என்று நரேந்திரர் கேட்டார்.

"இல்லை; இல்லை! அவர் வெடிகுண்டுகள் செய்யவுமில்லை; அவரிடத்தில் அவைகள் இல்லவே இல்லை! அவருடைய விரோதிகள்தான் அவரைக் கொல்லுவதற்காக வெடிகுண்டுகளைப் பிரயோகித்தார்

கள். கற்பகச் சோலையில் வெடி விபத்து நேரிட்டதற் குக் காரணம் அதுதான். ஆனால் நல்ல வேளையாக ஞானசேகரன் தெய்வானுக்கிரகத்தால் ஒரு மயிரிழை தப்பினார்'' என்று தேவகி சொன்னாள்.

"இவ்வளவு பெரிய ரகசியம் ஏற்படக் காரண மென்ன?'' என்று நரேந்திரர் கேட்டார்.

"வைத்தியரே! ஒரு பெண்மணியின் கௌரவத் தையும், மானத்தையும் காப்பாற்ற வேண்டியே அவ் விரகசியத்தை இப்போது வெளியிடமுடியாதவளாய் இருக்கிறேன். அது ஏற்பட்ட காரணமும் இப்போது சொல்லமுடியாது. ஆனால், கற்பகச் சோலையிலே நடந்திருக்கும் கொலையைப் பற்றி நாம் அதிக முயற்சி யெடுத்து உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டும். ஒரு பெண்மணி அநியாயமாக வதை செய்யப் பட்டிருக்கிறாள். எங்களுடைய முயற்சியில் நீரும் கலந்து உழைத்தால் பெரிய உபகாரமாய் இருக்கும். நீர் எங்களுக்கு உண்மையான சிநேகிதராய் இருக்க வேண்டும். அன்று உம்மிடம் சிகிச்சை செய்து கொண்டுபோன மனிதனை நீர் பார்த்தால் எல்லா விவரமும் உமக்குத் தெரியவரும்'' என்று தேவகி சொன்னாள்.

"அவரை எப்போது பார்க்கலாம்?'' என்று வைத்தியர் கேட்டார்.

"அவரைப் பார்க்கும்படியான ஏற்பாட்டைச் செய்துகொண்டு நான் தெரிவிக்கிறேன்'' என்று தேவகி சொல்லவே, அவளுக்கு வேண்டிய உதவியைத் தாம் செய்வதாக நரேந்திரர் ஒத்துக்கொண்டு, அவ ளிடம் விடை பெற்று, மைலாப்பூருக்குத் திரும்பினார்.

அந்த நிமிஷம் முதல் அவர் தேவகிக்கு — அல்லது அவளது அழகினுக்கு — தொண்டுபூண்டு ஒழுகும் அடிமையாகிவிட்டார். ஆனாலும், விவரமாக விஷயங்களை வெளியிட முடியாமல் தேவகி மயங்கியது நரேந்திரருக்கு ஆச்சரியத்தையே விளைவித்தது.



## 15. மற்றொரு ஆச்சரியம் வெளியாகிறது



"அன்று சாயந்திரமே திருவொற்றியூருக்குப் போக வேண்டிய கட்டாயம் நரேந்திரருக்கு ஏற்பட்டது. அவர் திருவொற்றியூர் சென்று, ஜெயராம் வீட்டை அணுகியபோது, அவர் ஏற்கெனவே எதிர்பார்த்தபடி, வீடு பூட்டப்பட்டிருந்தது. ஜெயராமையாவது, அவருடைய குடும்பத்தாரையாவது அவர் காணவில்லை. அக்கம்பக்கத்து ஜனங்களை, ஜெயராமைப் பற்றி, அவர் விசாரித்ததில் ஜெயராமுடைய மனைவி வைதேகி அன்று காலையில்தான் வீட்டைக் காலிசெய்துவிட்டு சென்னைக்குச் சென்றாள் என்றும், சென்னையிலிருக்கும் அவளுடைய கணவனை அழைத்துக்கொண்டு, தன் குடும்பத்துடன் அவள் மைசூருக்குப் போகப் போகிறாள் என்றும் தெரியவந்தன.

ஆனால் சுற்றுப்பக்கங்களில் வசிக்கும் ஜனங்கள் ஜெயராமைப் பற்றியும், அவர் குடும்பத்தைப்பற்றியும், சந்தேகமாக ஏதும் நினைப்பதற்குக் காரணமில்லை. அவர்களுக்கு ஒரே ஒரு விஷயம் மட்டும் மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. அதாவது, வைதேகி

வீட்டைக் காலிசெய்து விட்டுப் போனபோது வேலைக்காரனிடம் ஆயிரக்கணக்காய் ரூபாய்களைக் கொடுத்து "இவைகளைக் கொடுக்கவேண்டியவர்களுக்குக் கொடுத்துக் கணக்கைத் தீர்த்துவிடு" என்று சொல்லிவிட்டுச் சென்றதுதான். ஜெயராம் குடும்பத்தார் பணத்தை ஓட்டாஞ்சல்லியாக நினைத்துக் கண்டாகண்டபடி செலவு செய்யும் இயல்புடையவர்களென்றும் ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். இந்த விஷயங்களைத் தவிர திருவொற்றியூர் வாசிகளுக்கு ஜெயராமைப்பற்றி வேறொன்றும் உண்மையில் தெரியவே இல்லை. நரேந்திரர், அங்கு வைத்தியத்தின் பொருட்டுச் செல்லவேண்டிய இரண்டொரு வீடுகளுக்குப் போய்விட்டு மனவருத்தத்துடன் மைலாப்பூர் திரும்பினார். அவருடைய வரவை மிக ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்த பூபேந்திரர், நரேந்திரரைக் கண்டதும் பேசுவதற்கு ஆரம்பித்தார்.

"நரேந்திரா! காலையில் தேவகியைப் போய்ப் பார்த்து வருவதாகச் சொல்லிச் சென்ற நீ, மறுபடியும் என்னைக் காணவே இல்லையே? என்ன சமாசாரம்? போனவிஷயம் எவ்விதமாக முடிந்தது? விவரமாய்ச் சொல்லு" என்று பூபேந்திரர் கேட்டார்.

"நரேந்திரர் தாம் தேவகியோடு சம்பாஷித்ததையும், பிறகு அன்று சாயந்திரமே திருவொற்றியூருக்குச் சென்றதையும், அங்கு ஜெயராம் விஷயமாய்க் கேள்விப்பட்ட சங்கதியையும், ஆதியோடந்தமாய் பூபேந்திரரிடம் சொன்னார்.

"சரி; அப்படியானால் தேவகி இன்னமும் உன்னைத் தன் வலையில் அகப்படும்படி செய்யப் பிரயத்த

னப்படுகிறாள் என்பதில் சந்தேகமே இல்லை'' என்று பூபேந்திரர் பெருமூச்சு விட்டுக்கொண்டே சொன்னார்.

"அதென்ன! அப்படிச் சொல்லுகிறாயே?'' என்று நரேந்திரர் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"ஏனெனில், அவளை நான் நம்பவில்லை. அவளை மட்டுமன்று; பொதுவாகவே ஸ்திரீகளிடத்தில் எனக்கு அவநம்பிக்கை அதிகம்'' என்று சிரித்துக் கொண்டே பூபேந்திரர் பதில் சொன்னார்.

"நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி! தேவகிக்கு என்னால் செய்யக்கூடிய உதவியை நான் செய்வதாகத் தீர்மானித்துவிட்டேன். அவ்விதம் உதவி புரிவதாக நான் அவளுக்கு வாக்கும் கொடுத்து விட்டேன்'' என்று நரேந்திரர் கூறினார்.

"நரேந்திரா! அவளுக்கு உதவி செய்வதை நான் வேண்டாமென்று தடுக்கவில்லை. அவள் யார் என்றும், அவளுடைய உண்மையான நிலைமை என்னவென்றும், அறிந்து கொண்டாயா?'' என்று பூபேந்திரர் கேட்டார்.

"இல்லை; நான் அறிந்து கொள்ளவில்லை. சிலருக்காக அவள் பயந்து இப்போது தன்னைப் பற்றிய விவரத்தைச் சொல்ல அஞ்சுகிறாள் என்று நான் நினைக்கிறேன்'' என்று நரேந்திரர் சொன்னார்.

"ஆனால் சரி; அவள் உன்னை ஏமாற்றி விட்டாள் என்பது நிச்சயம்! நீலோற்பல மலர்களைப்போன்ற இரண்டு அழகிய கண்களுக்கு எப்படிப்பட்ட மனிதர்களையும் மயக்கும்படியான சக்தி இல்லாமற்போகுமா?'' என்று சொல்லி பூபேந்திரர் நகைத்தார்.

"அப்படியானால், நீ என்னை அறிவில்லாத மூடனென்று நினைக்கின்றாயா, என்ன?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நான் அவ்விதமாக நினைத்துக் கொண்டிருக்கலாம்; ஆனால் நான் அவ்விதம் சொல்லவில்லையே! உனக்கு தேவகியிடமிருக்கும் விசுவாசத்தைக் கெடுக்க எனக்குச் சிறிதும் விருப்ப மில்லை! ஆனாலும், அவளுடன் நீ செய்யும் சிநேகமானது, விரோதியிடம் வலியச்சென்று அகப்பட்டுக் கொள்ளும் ஒருவனுடைய மூடத்தனத்துக்கு இணையாக இருக்கிறதே தவிர வேறில்லை யென்று என்னால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. நான் என்ன செய்யலாம்?" என்று சொல்லி பூபேந்திரர் பரிகாசஞ் செய்தார்.

பூபேந்திரர் பரிகாசமாய்ச் சொன்ன இந்த வார்த்தைகள் நரேந்திரருக்கு ஆழ்ந்த சிந்தனையை உண்டாக்கிவிட்டன. தன்னை இதுவரையில் வஞ்சித்து வந்த தேவகியும் ஞானசேகரரும் இப்போது நட்புரிமை பாராட்டக் காரண மென்ன வென்று யோசித்தார். அவருக்கு ஒன்றும் விளங்கவில்லை. கடைசியில் கற்பகச் சோலையில் ஞானசேகரர் நூதனமாய்க் கண்டுபிடித்த யந்திரத்தின் ரகசியம் லட்சக்கணக்கான ரூபாய் சம்பந்தமானது என்று தேவகி சொன்ன வார்த்தை ஞாபகத்துக்கு வரவே, அதைப்பற்றி பூபேந்திரரிடத்தில் பிரஸ்தாபித்தார்.

"நூதனமாக ஏதாவது ஒரு முறையைக் கண்டு பிடித்து அதைத் தங்களுக்கே உரிமையாக அரசாங்கத்தார் அறியச் செய்துகொண்டால், கோடிக் கணக்காகச் சம்பாதித்துவிடலாம் என்று அநேகர் நினைக்

கிறார்கள். ஆனாலும், அதிர்ஷ்டமும் உதவிசெய்ய வேண்டுமல்லவா?" என்று பூபேந்திரர் சொல்லிப் புன்முறுவல் கொண்டார்.

"மைத்துனரே! இந்த விநோதமான ரகசியம் நூதன யந்திரத்தைப் பற்றியதாக இல்லையே! ஞான சேகரரையும், தேவகியையும் பொறுத்த ரகசியமாக வன்றோ இருக்கிறது!" என்று நரேந்திரர் ஆச்சரியத்துடன் சொன்னார்.

"ஆம்; அவ்விதமிருப்பதுதானே எனக்கும் ஆச்சரியமாக இருக்கிறது. தம்புச்செட்டித் தெரு 246-ஆம் நம்பர் வீட்டில் அகிலாண்டம்மை என்பவளுடன் தனியாக அந்தத் தேவகி என்பவள் வசிப்பதற்குக் காரணம் யாதெனத் தோன்ற வில்லையே? நீயோ அவளுடைய அழகில் மயங்கினவனாய், அவள் மிகவும் நல்லவள் என்று பூஷிக்கிறாய்; அவ்விதமிருந்தும் உண்மையில் அவள் யார் என்று இன்னும் உன்னால் தெரிந்துகொள்ள முடியவில்லையே?" என்று பூபேந்திரர் கேட்டார்.

"அவள் ஒரு பெரிய பணக்காரி என்பதிலும், கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவள் என்பதிலும் தடையில்லை" என்று நரேந்திரர் சொன்னார்.

பூபேந்திரர் சிரித்துக்கொண்டே "நரேந்திரா! பணமாவது, கனமாவது! இந்தக் காலத்தில் உண்மையான யோக்யதையாலும், சாமர்த்தியத்தாலும், கௌரவமும் கண்ணியமும் அடைகிறவர்கள் மிகச் சிலரே! தயவு, சொந்தம், முகஸ்துதி, முதலியவைகளால் அநேகர் முன்னுக்கு வருகிறார்களே தவிர, சொந்த முயற்சியினாலும் யோக்யதையாலும் வருகிறதில்லை!

புகழ், கீர்த்தி, மதிப்பு, கௌரவம், எல்லாம் இக்காலத்தில் ரூபா—அணா—பைசாவைப் பொறுத்தவைகளாய் இருக்கின்றனவேயன்றி வேறில்லை. அவ்விதமாக இருக்கும்போது தேவகி பெரிய பணக்காரி என்று உனக்கு எப்படி நிச்சயமாய்த் தெரியும்?'' என்று கேட்டார்.

"அகிலாண்டம்மையைப் பார்த்தால் ஒரு பெரிய லட்சாதிபதி வீட்டு ஸ்திரீ மாதிரி இருக்கிறாளே தவிர வேறில்லை. அப்படிப்பட்டவள் தேவகியின் வேலைக்காரி என்றால், தேவகியின் இயல்பையும் அந்தஸ்தையும் குறித்து நான் சொல்லவும் வேண்டுமோ?'' என்று நரேந்திரர் சொன்னார்.

"ஞானசேகரரைப்பற்றி என்ன நினைக்கிறாய்?'' என்று பூபேந்திரர் நரேந்திரரைக் கேட்டார்.

"அவரைப்பற்றி நிச்சயமாக ஒன்றும் சொல்லுவதற்கில்லை. தேவகியினிடம் இருந்துகொண்டு, அவளுடைய பொருட் செலவிலேயே அவர் ஜீவனம் செய்து வருகிறவர் என்று மாத்திரம் புலப்படுகிறது'' என்று நரேந்திரர் கூறினார்.

நரேந்திரரும், ஞானசேகரரும் அடிக்கடி சென்னையில் பிறகு சந்திப்பதுண்டு. ஒருவரோடொருவர் மிகுந்த அன்பு பாராட்டிப் பேசிக்கொள்ளுவார்கள். இவ்விதமாக ஒருவாரம் கழிந்தது. ஒரு நாள் சாயந்திரம் நரேந்திரர் மூர்மார்க்கட்டில் தற்செயலாய் ஞானசேகரரைச் சந்தித்தபோது 'கற்பகச்சோலை அதிசயத்தை'ப் பற்றி மெதுவாகப் பேசுவதற்குத் தொடங்கினார்.

"ஞானசேகரரே! கற்பகச் சோலையில் இருந்த விலையுயர்ந்த சாமான்களை யெல்லாம் ஏன் இன்னமும் எடுத்து வராமலிருக்கிறீர்? அங்கேயே கிடந்தால் கெட்டுப் போகாவா?" என்று நரேந்திரர் ஞானசேகரரைக் கேட்டார்.

"நரேந்திரரே! அந்தச் சாமான்களை எடுத்து வருதல் சாத்தியமாகாத விஷயம். மன்னார்குடிப் பக்கத்தில் தலை நீட்டவே எனக்கு அச்சமாயிருக்கிறது. வேறு யாரையாவது அனுப்பி எடுத்துவரச் சொல்லலா மென்றால், அவ்விதம் செல்லுகிறவர்களை உளவு வைத்து யாராவது கவனித்தால் என்ன செய்கிறது என்கிற பயம் எனக்கு அதிகமாக இருக்கிறது. போலீஸார் அவ்விதம் கவனிப்பார்கள் என்பதற்காகக்கூட நான் அஞ்சவில்லை; என்னுடைய விரோதிகள் எத்தனை உளவு அறிவோர்களை வைத்திருப்பார்கள்!" என்று ஞானசேகரர் சொன்னார்.

"ஆனாலும், அந்த இரும்புப் பெட்டிகள் மிகவும் விலை உயர்ந்தன வாயிற்றே?" என்றார் நரேந்திரர்.

"ஆம்; அதற்கு நாம் என்ன செய்யலாம்? இருந்தாலும், அப்பெட்டிகள் இனிப் பயன்படா. அவைகளுடைய சாவிகளை விரோதிகள் கொண்டுபோய் விட்டார்கள்" என்று ஞானசேகரர் வருத்தத்துடன் சொன்னார்.

"அந்தப் பெட்டிகளுள் ஒன்றில் ஒரு ஸ்திரீயினுடைய பிரேத சரீரம் ஒளித்து வைக்கப்பட்டிருந்ததே?" என்று நரேந்திரர் காதோடு காதாய் மெதுவாகக் கேட்டார்.

"பிரேத சரீரம் ஒன்று பெட்டிக்குள் இருந்த தென்று நமக்கு நிச்சயமாக எப்படித் தெரியும்?" என்று ஞானசேகரர் கேட்டார்.

"இதுவரையில் அகப்பட்டிருக்கும் ருசுவெல்லாம் அவ்விஷயத்தை மெய்ப்படுத்தி யிருக்கின்றன. ஒரு இரும்புப்பெட்டியின் கதவில் இரத்தக் குறிகள் இருந் ததை நான் கண்ணாரக் கண்டேன். அதன்பிறகு யாரோ வந்து அந்தக் கறைகளை அழித்துச் சென்றி ருக்கிறார்கள். அதையும் நான் அறிந்தேன்" என்று நரேந்திரர் சொன்னார்.

"என்ன; என்ன ! வைத்தியரே, நிச்சயந்தானா? இரத்தக் கறைகள் அந்தப் பெட்டிக் கதவில் காணப் பட்டன வென்பது வாஸ்தவந்தானா?" என்று ஞான சேகரர் அலறிக்கொண்டே கேட்டார்.

"அதிற் சந்தேகங்கூடவா? நான் இரணவைத் தியனானபடியால் இரத்தக் கறைக்கும், மற்றக் கறைக் கும் வித்தியாசம் நன்றாய்த் தெரியும்" என்று நரேந் திரர் உரைத்தார். மிகவும் மனவருத்தப்பட்டவரைப் போல் ஞானசேகரர் முகத்தைச் சுளித்துக்கொண்டே ஒரு பெருமூச்சு விட்டார்.

"வைத்தியரே! இரும்புப் பெட்டிகளின் சாவி களை ஏன் அவர்கள் எடுத்துச் சென்றார்கள் என்பதற் குக் காரணம் இப்போது வியக்தமாகிறது! அவர்க ளுடைய நோக்கம் யாதென்றும் இப்போது புலப் படுகிறது! ஆனாலும், அவர்கள் எவ்வளவு சாமர்த் தியமாயும், துணிகரமாயும் இச்சதிச் செயலைச் செய் திருக்கிறார்கள். இவர்களுடைய சூழ்ச்சியைக் கண்டு பிடித்து பயிரங்கத்துக்குக் கொண்டுவருவதே மிக

வும் கஷ்டமாகும்போல் தோன்றுகிறது. ஆனாலும் தேவகி மட்டும்—உம்முடைய சகாயத்தைக் கொண்டு இப்பாதகர்களைக் கண்டுபிடித்து விடலாமென்னும் தைரிய முடையவளாய் இருக்கிறாள்'' என்று மிகுந்த பரிதாபத்தோடு ஞானசேகரர் கூறினார்.

ஞானசேகரருடைய பேச்சைக் கவனித்தும், கவனியாதவரைப்போல் நரேந்திரர் ''அந்தப் பெண் யார் என்று உமக்குத் தெரியுமோ?'' என்று வினவினார்.

''எந்தப் பெண்?'' என்று ஞானசேகரர் ஒன்று மறியாதவரைப்போல் கேட்டார்.

''அவள்தான்,—கொலைசெய்யப்பட்டு இரும்புப் பெட்டியுள் அடைபட்டிருக்கிறாளே—அந்தப் பெண் தான்!'' என்று நரேந்திரர் சொன்னார்.

''அவள் அயலூரைச் சேர்ந்தவள்!''

''அவளை, ஞானசேகரரே, நீர் பார்த்தீரா?''

''ஆம்,—'' என்று சற்றுத் தயங்கி, ''நான் அவளைப் பார்த்தேன்'' என்றார் ஞானசேகரர்.

''அவளுடைய பெயர் என்ன தெரியுமோ? ஞானசேகரரே! இந்த விஷயத்தில் நாம் ஒத்து உழைக்க வேண்டுமானால், என்னிடம் நீர் ஒன்றையும் மறைக்கக் கூடாது. நம்மிருவருக்குள்ளும் இரகசியம் என்பதே வேண்டாம்'' என்று நரேந்திரர் சொன்னார்.

''வைத்தியரே! அந்தப் பெண்ணுடைய பெயர் என்னவென்று எனக்குத் தெரியாது. தேவகிக்கும் தெரியவில்லை!'' என்று ஞானசேகரர் கூறினார்.

"ஆனாலும், அந்தப் பெண்ணைக் கொல்லுவதற்கு ஏதாவது ஒரு நோக்கம் இருக்கவேண்டுமே? ஜெயராமும் அவனைச் சேர்ந்தவர்களும் அப்பெண்ணை ஒரு சமயம் கொலைசெய்திருத்தல் கூடுமோ?" என்று நரேந்திரர் உசாவினர்.

"ஏதோ ஒரு நோக்கத்தின்மேல்தான் அவளைக் கொன்றிருக்கிறார்கள்! ஆனாலும், அக்கொலை ஜெயராமினால்தான் நேர்ந்ததென்று சொல்லமுடியாது!" என்றார் ஞானசேகரர்.

இப்படி ஞானசேகரர் சொன்னதில் நரேந்திரருக்கு சந்தேகம் ஜனித்தது. அதற்குமேல் ஒன்றும் பேசாமல் ஞானசேகரரிடம் விடைபெற்று வீட்டுக்குப் போய் பூபேந்திரரையும் அழைத்துக்கொண்டு மறுநாட் காலையில் சைதாப்பேட்டை சென்று மிஸஸ் ரோஸ்பரியை விசாரித்து உண்மையை தெரிந்துகொள்ளலாமென அவர் தீர்மானித்தார். அவ்விதமே மறுநாட்காலையில் இருவரும் சைதாப்பேட்டை சென்றார்கள். ஆனாலும், நரேந்திரருக்கு இப்போது மற்றொரு ஆச்சரியம் வெளியாயிற்று. அதாவது, கற்பகச்சோலையில் கொலையுண்டிறந்த பெண்மணி ஞானசேகரருக்கும் தெரிந்தவளாகவே இருக்கவேண்டுமென்னும் எண்ணம் இதுவரையில் நரேந்திரருக்கு இருந்தது அடியோடு இப்போது ஒழிந்தது. அவர்களிருவருக்கும் தெரியாமல் ஓர் பெண் கற்பகச்சோலையில் இருந்ததற்குக் காரணமென்னவென்று நரேந்திரர் சைதாப்பேட்டை சென்றபோது சிந்தித்துப் பார்த்தார்.



# 16. அதிசயமான சந்திப்பு



நரேந்திரரும், பூபேந்திரரும் சைதாப்பேட்டைக்குச் சென்று மிஸஸ் ரோஸ்பரி வீட்டை நெருங்கியதும், அங்கே நின்றுகொண்டிருந்த வேலைக்காரியை "மிஸஸ் ரோஸ்பரி வீட்டில் இருக்கின்றாளா?" என விசாரித்தார்கள். அவள் தன் எஜமானி வீட்டில் இருப்பதாகத் தெரிவித்து, இருவரையும் வீட்டுக்குள் அழைத்துப்போய், கூடத்திலே கிடந்த இரண்டு நாற்காலிகளில் அவர்களை அமரும்படி சொல்லிவிட்டு, உள்ளே சென்று சமாசாரத்தை மிஸஸ் ரோஸ்பரியிடம் சொன்னாள். நரேந்திரரும், பூபேந்திரரும் மிஸஸ் ரோஸ்பரியின் வரவை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பூபேந்திரரும், அவர் மைத்துனர் வைத்தியரும் ஒருவரை யொருவர் நேர்முகமாகப் பார்த்துகொண்டு நாற்காலியில் சாய்ந்தபடியே சம்பாஷணை செய்து கொண்டிருக்கையில், "ஆ! இதுவென்ன அநியாயம்?" என்று பூபேந்திரர் வாய்விட்டலறினர். நரேந்திரர் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார். ஒரு பெண்மணி பூபேந்திரரை நோக்கியபடியே ஸ்தம்பித்து நிற்பதையும், பூபேந்திரர் அவளை நோக்கியபடியே ஸ்தம்பித்து நிற்பதையும் கண்டவுடன் வைத்தியருக்கு உண்டான ஆச்சரியம் கொஞ்சமன்று. அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்ட மாதிரியினால் ஒருவரையொருவர் ஏற்கெனவே அறிவார்கள் என்றும், அவ்விருவரும் பூபேந்திரரும், மிஸஸ் ரோஸ்பரியுமே தவிர வேறல்லர் என்றும் நரேந்திரருக்குத் தெளி

வாய்த் தெரிந்தபோதிலும், ஒருவரை யொருவர் கண்டவுடன் அவர்களேன் அவ்விதம் ஆச்சரியத்துடன் ஸ்தம்பித்து நின்றார்கள் என்பதற்குக் காரணம் மட்டும் சிறிதும் விளங்கவில்லை. அவரும் மற்ற இருவர்களைப்போல் ஒன்றும் பேசமுடியாமல் ஆச்சரியத்தோடு அவர்களைப் பார்த்தபடியே மௌனம் சாதித்தார்.

"நரேந்திரா! இதுவென்ன சூழ்ச்சி! என்னை ஏன் இங்கே அழைத்து வந்தாய்? ஐயோ, இந்தப் பெண் முன்னால் நான் ஏன் வந்தேன்?" என்று பூபேந்திரர் வாய்விட்டுக் கதறினார். மிஸஸ் ரோஸ்பரியும், சர்ப்பத்தைக் கண்ட வழிப் பிரயாணியைப்போல், வாய்விட்டு அலறிக்கொண்டே இரண்டொரு அடி பின் சென்றாள். அவளுடைய சரீரம் முழுதும் பயத்தால் வெளுத்துவிட்டது.

"மைத்துனரே! ஏன் இவ்விதம் அலறுகிறீர்? விஷயமென்ன வென்று தெளிவாய்ச் சொல்லலாகாதா?" என்று நரேந்திரர் மனங்கவன்று கேட்டார்.

"சொல்லுவதென்ன? இவள், என்னை ஏமாற்றி மோசம் செய்ததைப் போலவே, உன்னையும் ஏமாற்றி விட்டாள்" என்று பூபேந்திரர் ஆத்திரத்தோடு கூறினார்.

"பூபேந்திரரே! அவ்விதம் என்மீது அடாத பழி சுமத்தவேண்டாம்! நான் உம்மை ஏமாற்றியவளுமல்லள், ஏமாற்ற நினைத்தவளுமல்லள்! நான் உம்மிடம் சொன்னது முற்றும் உண்மையே; உண்மை!" என்று மிஸஸ் ரோஸ்பரி மிகுந்த பரிதாபத்துடன் சொன்னாள்.

அவளுடைய வார்த்தையைக் கேட்டுப் பூபேந்திரர் வாய்விட்டு ஒருவகையாகச் சிரித்தார். அவரது கோபத்தையும், வருத்தத்தையுமே அந்தச் சிரிப்பு விளக்கிற்று.

“மைத்துனரே! உமக்கும், மிஸஸ் ரோஸ்பரிக்கும் நெடுநாளாகவே பழக்கமுண்டுபோல் உங்கள் இருவருடைய சம்பாஷணையால் தெரிகிறதே? இதனுடைய விவரத்தை நான் அறிந்து கொள்ளக் கூடாதா?” என்று வைத்தியர் ஆச்சரியத்தோடும் ஆவலோடும் வினவினர்.

“ஆம்; இவளை எனக்கு நெடுநாளாகத் தெரியும். இந்தப் புண்ணியவதியினால் நான் அடைந்திருக்கும் துக்கம் அளவு கடந்தது. வேம்பினும் கைப்பாக இந்த உலக வாழ்க்கை எனக்குத் தோன்றுவதற்கு இவளே காரணம்” என்று பூபேந்திரர் மிகுந்த ஆத்திரத்தோடும், வருத்தத்தோடும் கூறிப் பெருமூச்செறிந்தார்.

“மிஸஸ் ரோஸ்பரி!” என்று நரேந்திரர் அவளைப் பார்த்துக் கூப்பிட்டு ஏதோ சொல்ல முயன்றார். ஆனாலும், அவருடைய நா அச்சமயம் எழவில்லை. இதற்குள் பூபேந்திரர், தன் மைத்துனரை நோக்கி “நரேந்திரா! என்னுடைய வாழ்நாளை எனக்குக் கசப்பாகச்செய்த இந்தப் பெண், திரிவொற்றியூரில் ஜெயராம் வீட்டுத் தோட்டத்தில் உன்னைத் தனியாய்க் கண்டு ஜெயராம் வீட்டுக்கு இனி வரவேண்டாமென்று எச்சரித்தாள் என்று சொல்லுகிறாயே? அதை நான் எவ்விதம் நம்ப முடியும்?” என்று அவநம்பிக்கையுடன் கேட்டார்.

"ஆம்; வாஸ்தவந்தான்! மிஸஸ் ரோஸ்பரியே ஜெயராம் குடும்பத்தைப்பற்றி எனக்கு அப்போது எச்சரித்தாள்" என்று நரேந்திரர் பதில் சொன்னார்.

"மிஸஸ் ரோஸ்பரி" என்று முதலில் நரேந்திரர் சொன்னதைப் பூபேந்திரர் கவனியா விட்டாலும் இரண்டாம் முறை கூப்பிட்டதைக் கவனித்தார். அவருக்கு வியப்பும், ஆச்சரியமும் உண்டாயின.

"மிஸஸ் ரோஸ்பரியா! நரேந்திரா, இந்த மாயக் கள்ளியின் உண்மையான பெயர் என்ன தெரியுமா?" என்று பூபேந்திரர் வெறுப்புடன் உசாவினர்.

"உண்மைப் பெயர் வேறு; பொய்யான பெயர் வேறா இருக்கிறது? நீ சொல்லுவது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே?" என்று நரேந்திரர் ஆச்சரியத்துடன் கேட்டார்.

மிஸஸ் ரோஸ்பரியோ, அல்லது மிஸஸ் ரோஸ்பரி என்று சொல்லப் படுகிறவளோ, பூமாதேவியை நோக்கியபடியே தலை குனிந்து நின்றாள்.

"நரேந்திரா! இவள் யார் தெரியுமா,—இவளே முன்னொரு சமயத்தில் என் மனத்தைத் தன்வசமிழுத்துப் பிறகு மோசஞ்செய்த,— உதயகுமாரி! தமிழ் நாட்டில் பிறந்து, சைவப்பாங்காய் வளர்ந்த இவள் தன் தேசாசாரத்தையும் மதாசாரத்தையும் அடியோடு விடுத்து. ஐரோப்பிய ஸ்திரீயைப்போல் நடையுடை பாவனைகளை மேற்கொண்டு ஒழுகக் காரணமென்ன? "உதயகுமாரி" என்னும் அழகான பெயரை விடுத்து "மிஸஸ் ரோஸ்பரி" என்று பெயர் வைத்துக் கொள்ளுவானேன்? தவிர, விவாகம் ஆகாத கன்னிகையாயிருக்கும் இவள் விவாகம் ஆனவள்போல் நடி

ப்பதற்கு ருகாந்தரம் யாது? இவைகளை யெல்லாம் நோக்கும்போது இவள் ஏதோ ஒரு பெரிய சதி யாலோசனையில் கலந்திருக்கின்றுள் என்று நினைக்க வேண்டியிருக்கிறது" என்று பூபேந்திரர் சொன்ஞர்.

நரேந்திரர் ஆச்சரியத்தினல் ஒன்றும் பதில் சொல்ல முடியாமல் ஸ்தம்பித்து நின்றுர். பூபேந்திரர் சொன்னவை யெல்லாம் கனவிற் காணும் தோற்றங் களைப்போல் நரேந்திரருக்கு இருந்தன ஏனெனில், தமிழ் நாட்டிலே பிறந்த ஒரு சைவப்பெண், ஆங்கில ஸ்திரீயைப்போல் நடித்து வந்திருக்கிறுள் என்பது அவருக்கு வியப்பாய்த் தோன்றியது. தவிர, அவ் வுண்மையை இதுவரையில் அவளுடன் பழகியும் அறிய முடியாமற்போனதும் ஒரு பெரிய ஆச்சரியமாக அவருக்குத் தோன்றிற்று. ஜெயராம் வீட்டில் இந்தப் பெண் தன்னை மிஸ் ரோஸ்பரி என்று சொல்லிக்கொ ண்டிருந்ததும், பிறகு தன்னிடத்தில்தான் 'மிஸ்' அல்ல "மிஸஸ்" என்று சொன்னதும வைத்தியருடைய ஞாபகத்துக்கு இப்போது வந்தன.

"பூபேந்திரரே! நீர் என்மீது இப்படிப்பட்ட பழிசுமத்துவது நியாயமன்று; தெய்வத்துக்கு அடுக் காது! தற்செயலாய் ஜெபராமுடைய சூழ்ச்சிகள் எனக்குத் தெரியவந்தனவே தவிர வேறில்லை! நான் எவ்விதமான சதியாலோசனையிலும் சம்பந்தப்பட் டவளல்லள்!" என்று அப்பெண் பதில் சொன்ஞள்.

"இருக்கட்டும்; ஜெயராமுடைய சிநேகமும், அவர் மனைவி வைதேகியின் நட்பும் உனக்கு எவ்விதம் கிடைத்தன? எவ்வளவு காலமாய் அவர்களை உன க்குத் தெரியும்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"சென்ற வருஷம் வைதேகி அம்மாவை ஸ்ரீரங்கத்தில் அரங்கநாதர் ஆலயத்தில் வைகுண்ட ஏகாதசியன்று காலையில் தற்செயலாக நான் சந்தித்தேன். அவள் இறங்கியிருந்த சத்திரத்தில் நான் அவளைக் கண்டு அடிக்கடி சம்பாஷித்துக்கொண்டிருப்பதுண்டு. இப்படியாக இருந்து வரவே, எனக்கும் அவளுக்கும் ஏற்பட்ட நட்புரிமை முதிருவதாயிற்று. திருவொற்றியூருக்கு வரவேண்டுமென்றும், தன்னுடன் சில காலம் அங்கே தங்கியிருக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டாள். நான் என் பெற்றோர்களை இழந்து என் சகோதரன் ஆதரணையில் இருந்துவந்தபோதிலும், சகோதரன் மனைவி என்னை மிகவும் ஹிம்சித்து வந்தபடியால், அவளுடைய கொடுமைக்குப் பயந்து எப்படியாவது தப்பித்துக்கொண்டுபோனால் போதுமென்று நினைத்து வைதேகியுடன் ஒருவருக்குந் தெரியாமல் திருவொற்றியூருக்குப் போய்விட்டேன்" என்று மிஸஸ் ரோஸ்பரி என்று புனைபெயர் வைத்துக்கொண்டிருந்த உதயகுமாரி சொன்னாள்.

"நீ உன்னுடைய பெயரை மாற்றிவைத்துக்கொள்ளவும், விவாகம் ஆகாதிருந்தும் விவாகம் ஆனவளைப் போல் நீ நடிக்கவும் காரணமென்ன?" என்று பூபேந்திரர் கேட்டார்.

"என்னை யாராவது கண்டுபிடித்துவிட்டால் கஷ்டம் நேரிடுமென்றும், ஆதலால் பெயரையும், நடையுடை பாவனையையும் மாற்றி வைத்துக்கொள்ளுதல் நலமென்றும் வைதேகி சொன்னாள். அவள் சொன்னபடியே நான் செய்தேன். முதலில் நான் அவளையும் அவளைச் சேர்ந்தவர்களையும் மிகவும் நல்லவர்களென்று நினைத்திருந்தேன். ஆனால், ஒரு சமயம் அவர்கள்

சம்பாஷித்துக்கொண்டிருந்த சில விஷயங்களை நான் மறைந்திருந்து கேட்கும்படி நேரிட்டது. அப்போது தான் நான் அவர்கள் கொலைபாதகத்துக்கும் அஞ்சாத மூர்க்கர்கள் என்று அறிந்தேன். நரேந்திரருக்குக் கெடுதிசெய்ய நினைத்திருக்கிறார்களென்று அவர்கள் சம்பாஷணையால் அறிந்தே, நான் நரேந்திரரை இனித் திருவொற்றியூருக்கு வரவேண்டாமென்று எச்சரித்தேன். எனக்கும் அங்கிருக்க இஷ்ட மில்லாமல் உடனே புறப்பட்டு சைதாப்பேட்டைக்கு நான் வந்துவிட்டேன்'' என்று உதயகுமாரி சொன்னாள்.

"இருக்கட்டும்; சில வருஷங்களுக்கு முன்பு, உதயகுமாரி, நான் உன்னைச் சென்னையில் சந்தித்தபோது உன்னைக் காதலிக்கும்படி என்னைச் செய்தாயல்லவா? அப்போது உன்னோடிருந்த ஒரு வயோகிகனை நான் கண்டு "அவர் யார்?'' என்று உன்னைக் கேட்டதற்கு உன்னுடைய தகப்பனார் என்று நீ சொன்னாயல்லவா? திருவல்லிக்கேணி கடற்கரையில் மாலைக் காலங்களில் அடிக்கடி என்னைக் கண்டு மனவசீகரமான காதற் சொற்கள் பலப்பல பேசி என்னை உன் வசப்படுத்தினாயே? கடைசியாக என்னையே மணம் புரிந்து கொள்வதாக வாக்குத்தத்தமும் செய்தாயே? இறுதியில் என்னை மோசம் செய்துவிட்டு என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் நீ வெளியூருக்குப் போகக் காரணமென்ன? எங்கே சென்றாய்? யாருடன் சென்றாய்? எதற்காகச் சென்றாய்?'' என்று பூபேந்திரர் கேட்டார்.

"ஆமாம்; எல்லாம் என் ஞாபகத்தி லிருக்கின்றன. இப்போதும், பூபேந்திரரே, உம்மிடம் நான் கொண்ட காதல் தினையளவும் குறையவில்லை யென்று

சத்தியமாய்ச் சொல்லுகிறேன். சந்தர்ப்பம் அவ்விதம் நேரிட்டதால் என்னைக் காதலித்த—இப்போது காதலிக்கின்றீரோ இல்லையோ நான் அறியேன் —உம்மிடங்கூட ஒருவார்த்தை சொல்லிக் கொள்ளாமல் போகும்படி நேரிட்டது. அதுமுதல் இதுவரையில் அநேக ஆச்சரியமான சம்பவங்கள் நேரிட்டிருக்கின்றன. ஆனாலும், அவைகளைப் பற்றி ஒன்றும் இச்சமயம் பிரஸ்தாபிக்க முடியாதபடி என்னுடைய வாயை சத்தியத்தினால் கட்டியிருக்கிறார்கள். இருந்தபோதிலும், பின்பொரு காலத்தில் நீர் எல்லா உண்மையினையும் தெரிந்துகொள்ளுவீர். நான் ஒரு மனிதனுடன், ஒரு பெண்மணியின் மானத்தையும் உயிரையும் காப்பாற்றும் நிமித்தம் மன்னார்குடிக்குச் சமீபத்திலுள்ள ஒரு கிராமத்துக்குச் செல்லும்படி நேரிட்டது. அந்த மனிதன் பெயரையும், அந்தப் பெண்மணியின் பெயரையும் அவர்களுடைய உத்தரவின்றி வெளியிடுவதற்கு எனக்கு அதிகாரமில்லை. அதுபற்றி விசனிக்கின்றேன்'' என்று உதயகுமாரி சொன்னாள்.

“அந்த மனிதன் உன்னுடைய காதலனோ?'' என்று பூபேந்திரர் கோபத்துடனும், அருவருப்புடனும் கேட்டார்.

“காதலனா! உம்மைத் தவிர வேறு காதலர் யார் எனக்கிருப்பார்கள்? அவர் என்னுடைய காதலர் அல்லவென்று கடவுள் சாட்சியாய்ச் சொல்லுகிறேன்'' என்று உதயகுமாரி சொன்னாள்.

இவள் இவ்விதம் உறுதிசெய்யவே, பூபேந்திரர் ஒருவாறு திருப்தி யடைந்து, நரேந்திரரையும் அழை

த்துக்கொண்டு சென்னைக்குத் திரும்பிவிட்டார். பூபேந்திரருக்கும் உதயகுமாரிக்கும் எதிர்பாராமல் ஏற்பட்ட இந்த அதிசயமான சந்திப்பு நரேந்திரருடைய ஆச்சரியத்தை இன்னும் பத்து மடங்கு அதிகப்படுத்துவதாயிற்று.



## 17. ஞானசேகரர் நோக்கம் வியக்தமாயிற்று.



இரண்டு வாரங்கள் கழிந்தன - பதினான்கு நாட்களும் பதினான்கு வருடங்கள்போல் நம் கதாநாயகராகிய நரேந்திரருக்குத் தோன்றின!

வைத்தியத்தின் பொருட்டு நரேந்திரர் இப்போதும் திருவொற்றியூருக்குப் போவது வழக்கந்தான். பூபேந்திரரோ உதயகுமாரியைப்பற்றி நன்றாய் அறிந்துகொள்ள வேண்டி சைதாப்பேட்டையிலேயே அவள் வீட்டுக்குச் சமீபத்தில் வேறொரு வீட்டில் வசித்து வந்தார். நரேந்திரர் தம்முடைய வைத்திய வேலையைப் பார்ப்பதும், மற்ற நேரங்களில் மைலாப்பூரில் பூபேந்திரர் வீட்டில் தனியாக உண்பதும், யோசிப்பதுமாக இருந்து வந்தார். தேவகியோ அகிலாண்டம்மையுடன் தம்புச்செட்டித் தெருவிலேயே வாசம் செய்துவந்தாள். உதயகுமாரியை — பூபேந்திரர் பழையபடியும் காதலிக்க ஆரம்பித்துவிட்டார் என்கிற சந்தேகம் நரேந்திரருக்குப் பலமாக இருந்தது. நரேந்திரர் அடிக்கடி தேவகியைச் சந்திப்பதும், அவளுடன் பற்பல விஷயங்களைப் பற்றி வார்த்தையாடுவதுமாக இருந்து வந்தார். இவர்க

ளிருவரும் அடிக்கடி திருவல்லிக்கேணி கடற்கரை ஓரத்தில் மாலைக் காலங்களில் ஒருவரை யொருவர் சந்திப்பதுண்டு. ஆனாலும், கற்பகச்சோலை சம்பந்த மான விஷயத்தைப்பற்றி மட்டும் ஒருவரும் பேசுவ தில்லை. இப்படியாக இருந்துவரும் நாளில் ஒரு நாள் மாலைப்பொழுதில் தேவகியை நரேந்திரர் தனிமை யாகச் சந்தித்து, தன் மைத்துனர் பூபேந்திரர் உதய குமாரியின்மீது காதல்கொண் டிருப்பதைப் பற்றியும், அவள் தன் பெயரை மிஸ் ரோஸ்பரி என்று மாற்றி வைத்துக்கொண்டு நடித்து வருவதுபற்றியும், அவர்க ளிருவருக்கும் நடந்த சம்பாஷணையைப் பற்றியும் மெதுவாகப் பிரஸ்தாபித்தார்.

"அப்படியானல் அவர்களிருவரும் பழையபடி யும் சந்தித்துவிட்டார்களா, என்ன—?" என்று ஆச் சரியத்தோடும் பயத்தோடும் தேவகி நரேந்திரரைக் கேட்டாள். அப்போது அவளுடைய முகம் வெளுத் தது; கண்கள் சுழன்றன. "நரேந்திரரே, கடைசியில் பார்க்கப்போனல் இந்த உலகம் மிகவும் சிறிய தென்றே நினைக்கவேண்டி யிருக்கிறது — பெரிதா யிருந்தால் இவர்கள் மறுபடியும் சந்திப்பார்களா?—" என்று பழையபடியும் தேவகி ஒரு பெருமூச்சு விட் டுக்கொண்டே சொன்னாள்.

"ஆம், அவர்களிருவரும் ஒருவரை யொருவர் சந்தித்து விட்டார்கள். அவளைப்பற்றி உனக்கு என்ன தெரியும்?" என்று நரேந்திரர் தேவகியைக் கேட் டார்.

"அவளைப்பற்றி எனக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது. ஆனாலும், நான் ஞாபகப்படுத்திச் சொல்

அவது சரியாயிருந்தால், அவள்தான் உம்மை ஜெப ராம் வீட்டுக்கு வரவேண்டாம் என்று எச்சரித்தவள் என்று நினைக்கிறேன்" என்று தேவகி ஆலோசித்துச் சொல்பவளைப்போல் கூறினாள்.

"ஆம்; ஆம்! அவளே என்னை எச்சரித்தவள்!" என்று நரேந்திரர் வற்புறுத்தி உரைத்தார்.

"ஆ! அதில் சந்தேகமே இல்லை,—ஏதாவது ஒரு நோக்கமில்லாமல் அவள் அவ்விதம் எச்சரித்திருக்கவே மாட்டாள்" என்று தேவகி தன்னை நோக்கியே சொல்லிக்கொள்ளுபவளைப்போல் சொன்னாள். அவள் சொன்ன மாதிரியிலிருந்து உதயகுமாரியைப் பற்றி அவளுக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை என்பதை நரேந்திரர் குறிப்பாய் அறிந்துகொண்டார்.

"அவளிடத்தில், தேவகியே, உனக்கு நம்பிக்கை இல்லைபோல் தோன்றுகிறதே?" என்று சந்தேகத்தோடு நரேந்திரர் கேட்டார்.

"அவள்மீது அவநம்பிக்கை கொள்ளுவதற்குப் போதுமான காரணங்க ளிருக்கின்றன.—அவைகள் சாமானியமான காரணங்க ளல்ல; மிகவும் பலமானவைகள்" என்று தேவகி சொன்னாள்.

"அவளை என் மைத்துனர் முதன் முதல் எங்கே சந்தித்தார்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"அவளைப் பற்றிய எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும். பூபேந்திரரை நேசிப்பவள்போல் பாசாங்கு செய்து கடைசியில் அவரிடம் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப்போனவள் அல்லவா அவள்!" என்று வெறுப்புடன் உரைத்தாள் தேவகி.

"அவள் ஏன் அவ்விதம் செய்தாள்? மிகவும் இழிந்த ஒழுக்கம் உடையவளோ?" என்று நரேந்திரர் கடாவினர்.

"இல்லை; இல்லை! அவள் மிகுந்த மதிப்பும் கௌரவமும் உடைய குடும்பத்தைச் சேர்ந்தவள். ஆனாலும், அவள் ஒருவனை இழுத்துக்கொண்டு ஓடிவிட்டாள். ஏனெனில், சந்தர்ப்பம் அவ்விதம் நேர்ந்தது — ஆனாலும் காதல் காரணமாக அவ்விதம் ஓடினளோ வென்று நீர் சந்தேகிக்கலாம் —" என்று தேவகி சொல்லிக்கொண் டிருக்கும்போதே "இல்லை, இல்லை! எனக்கு அவ்விதமான சந்தேகம் இல்லை. அவள் சங்கதிகளை என்னிடம் சொன்னாள். பூபேந்திரரிடம் சொல்லிக்கொள்ளாமல் ஓடிப்போனதற்கு அவள் சொன்ன காரணத்தைப் பார்த்தால் — பூபேந்திரரைத் தவிர வேறு புருஷன்மீது அவள் காதல் கொண்டிருக்கிறாள் என்று நினைக்க இடமில்லை" என்று நரேந்திரர் கூறினர்.

"நரேந்திரரே! அவள் என்ன காரணம் சொன்னாள்? தயை செய்து என்னிடம் சொல்லலாமோ?" என்று தேவகி மிகுந்த பரிவுடன் கேட்டாள்.

"ஒரு பெண்மணியின் உயிரும், கௌரவமும் அபாயகரமான நிலையில் இருக்கிறதென்றும், அவளைக் காப்பாற்றவேண்டியே ஒரு மனிதனுடன் வெளிப் புறப்பட நேரிட்டதென்றும் அவள் பூபேந்திரனிடம் சொன்னாள்" என்று நரேந்திரர் பதில் தந்திட்டார்.

தேவகி ஒருவிதமான உட்கருத்துடன் சிரித்தாள்.

"உம்முடைய மைத்துனர் அவள் சொன்னதை உண்மை யென்று நம்பியிருக்கின்றாரா, என்ன?" என்று சந்தேகத்துடன் சிறிதுநேரங் கழித்து தேவகி நரேந்திரரை உசாவினாள்.

"இல்லை; அவர் நம்பவில்லை. எல்லோரும் தடுக்கின் கீழ் நுழைந்தால் அவர் கோலத்தின்கீழ் நுழைபவராவரே?" என்று நரேந்திரர் விடை பகர்ந்தார்.

"நரேந்திரரே! உமது மைத்துனருக்கு விஷயத்தின் உண்மை இன்னதென்று தெரியாது. அவர் ஒருகாலுமே தெரிந்துகொள்ள மாட்டார்" என்று தேவகி கூறினாள்.

"தேவகி! நீ சொல்லுவது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே?" என்று நரேந்திரர் அச்சத்துடன் கேட்டார்

"நான் என்ன சொல்லுகிறேன்; ஒன்று மில்லை! அவள் சொல்லுகிற கதையை உமது மைத்துனர் நம்பினால், அவரைப்போல் மதிகெட்டவர் வேறெவரும் இல்லை என்று நான் சொல்லுகிறேன்" என்றாள் தேவகி.

"எது எப்படியிருந்தபோதிலும், உதயகுமாரி ஜெயராம் வீட்டாரோடு நட்புரிமை பாராட்டி வந்தாள் என்பதில் சந்தேக மில்லையே? அவள்தானே என்னை எச்சரித்தாள்?" என்று நரேந்திரர் தேவகியை வினவினார்.

"அவ்விதம் அவள் உம்மை எச்சரித்ததற்காக நாம் இருவருமே அவளுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். நரேந்திரரே, உம் நிமித்தம்

அவள் தன் வாக்குறுதியிலிருந்தும் தவறி சிநேகிதத் துரோகியாயும் ஆய்விட்டாள். ஆனாலும் பாதகமில்லை'' என்று தேவகி கூறினாள்.

நரேந்திரர் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவருடைய மூளையில் புதிது புதிதான எண்ணங்கள் உதித்தன. தேவகி, ஞானசேகரர் இவர்களிருவர்களைப் பற்றியும் உதயகுமாரிக்கு ஏதாவது தெரியுமோவென்று யோசித்தார். கற்பகச் சோலை அதிசயத்தைப் பற்றி அவள் ஏதாவது அறிந்திருப்பாளோவென்று சந்தேகித்தார். தேவகி, உதயகுமாரியைப் பற்றிக் கெட்ட அபிப்பிராயம் வெளியிடுவதற்குக் காரணம் என்னவென்று சிந்தித்தார். ஒன்றுந் தோன்றாமல் அவர் சிறிதுநேரம் மதிமயங்கினார்.

தேவகி திடீரென்று இருந்தாப்போலிருந்து நரேந்திரரை நோக்கி "நரேந்திரரே! உதயகுமாரியோடு நெருங்கிய சிநேகம் வைத்துக்கொண்டு இருப்பதனால் உம்முடைய மைத்துனர் பூபேந்திரர் அபாயத்துக்குள்ளாவார்! அவர்களிருவரையும் நாம் எவ்விதத்திலாயினும் பிரித்துவிட வேண்டும்'' என்று மிகுந்த கவலைப்பட்டவளைப்போல் உரைத்தாள்.

"அவர்களை நாம் எப்படிப் பிரிக்க முடியும்? அவர்கள் ஒருவர்மீதொருவர் அளவற்ற காதல்கொண்டிருக்கிறார்களே?'' என்று நரேந்திரர் கேட்டார்.

"ஆனாலும், அவள் ஜெயராமேமாடு சிநேகமாக இருக்கிறாள், பார்த்துக்கொள்ளும்! அவனே உம்முடைய உயிரைவாங்கச் சூழ்ச்சி செய்தான்!'' என்று தேவகி சொன்னாள்.

"ஜெயராமுடைய உத்தேசம் என்ன? அவன் ஏன் என்னைக் கொல்லப் பிரயத்தனப்படவேண்டும்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"அவனுடைய கையிலும், அவனைச் சேர்ந்த சிலருடைய கையிலும் ஒரு இரகசியம் அடங்கியிருக்கிறது! அதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். அதற்காக நாங்கள் பிரயத்தனப்பட்டு வருகிறோம் என்பதை அறிந்துகொண்டே அவர்கள் — உம்முடைய உயிரைமட்டு மன்று — என்னுடைய உயிரையும் ஞானசேகருடைய உயிரையும் வாங்கப் பார்க்கிறார்கள்!" என்று தேவகி சொன்னாள்.

"இப்போது அவர்கள் எங்கே இருக்கின்றார்கள்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"மதுரையில் இருக்கிறார்கள் என்று தெரிகிறது" என்று தேவகி பதில் சொன்னாள்.

"அவர்களுடைய இரகசியத்தை அறிய நாம் என்ன செய்யலாம்?" என்று நரேந்திரர் வினவினார்.

"ஞானசேகரரைக் கலந்து யோசிப்போம். வாரும்" என்று சொல்லி தேவகி நரேந்திரரை அழைத்துக்கொண்டு சென்னைக்குவந்து ஞானசேகரரைக் கண்டு பூபேந்திரரும் உதயகுமாரியும் ஒருவரையொருவர் சந்தித்ததைப்பற்றி விவரமாய் எடுத்துக் கூறினாள்.

"சந்தித்து விட்டார்களா? அப்படியானால் அவள் உண்மையை அவரிடம் சொல்லிவிடுவாள்! நம்முடைய இரகசியம் வெளிப்பட்டுப்போம்! நமக்கும் அபாயம் நேரிடும்!" என்று ஞானசேகரர் தன்னையும்

மறந்து எதிரில் நரேந்திரர் இருப்பதையும் கவனியாமல் உரத்துக் கூவினார் பயத்தினால்.

"ஆ! இப்போது ஞானசேகரர் நோக்கம் வியக்தமாயிற்று! ஆனாலும், ஞானசேகரர் இரகசியம் என்னவென்று தெரியவில்லையே?" என்று நரேந்திரர் தனக்குள்ளேயே சொல்லிச் சிந்தித்தார்.



## 18. சதியும் சதியாலோசனையும்.



பூபேந்திரரும், உதயகுமாரியும் ஒருவரையொருவர் சந்தித்து விட்டார்கள் என்ற செய்தியைக் கேட்டவுடன், ஞானசேகரர் நடுங்கிய நடுக்கத்தைக் கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்த நரேந்திரருக்கு ஆச்சரியம் அதிகமாயிற்று. ஞானசேகரரும் தேவகியும் குற்றமுடைய ஏதோ ஒரு இரகசியவிஷயத்தில் சம்பந்தப்பட்டிருக்கிறார்களென்றும், அந்த இரகசியம் என்னவென்பதை உதயகுமாரி அறிந்திருக்கிறாள் என்றும், அவள் இரகசியத்தை எங்கே வெளியிட்டு விடுகிறாளோவென்று தேவகியும் ஞானசேகரரும் அஞ்சுகிறார்கள் என்றும் நரேந்திரர் நிச்சயமாய்த் தெரிந்துகொண்டார்.

சிறிது நேரங் கழித்து ஞானசேகரர் தன்னையும் மறந்து வாய்தவறி விஷயத்தை வலிய வெளியிட்டுவிட்டதைத் தாமே உணர்ந்துகொண்டு அதனை மறைக்கவேண்டி "நரேந்திரரே! உம்முடைய மைத்துனர் பூபேந்திரர் மிகவும் ஜாக்கிரதையாக உதய

குமாரி விஷயத்தில் இருத்தல் வேண்டும்! அவளால் அவருக்கு அபாயம் நேரிடும்" என்று சொன்னார்.

"அவளைப்பற்றிக் கெடுதலாக நினைப்பதற்குக் காரணம் ஏதும் எனக்குப் புலப்படவில்லை! அவள் என்னை எச்சரித்துக் காப்பாற்றினாள்!" என்று நரேந்திரர் மிக்க கடுமையாயும் அலட்சியமாயும் பதில் சொன்னார். ஏனெனில், பொறாமையாலும் பயத்தினாலும் தேவகியும் ஞானசேகரரும் உதயகுமாரியின்மீது பலவித தோஷாரோபணஞ் செய்யக்கூடுமென்பதை நரேந்திரர் இப்போது அறிந்துகொண்டாராதலால், அவர்களுடைய வார்த்தையில் அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை.

"வைத்தியரே! உதயகுமாரி சைதாப்பேட்டையில் தனிமையாக வசித்து வருவதாகச் சொன்னீரே? அவளிருப்பதைப் பார்த்தால், யாருக்கோ பயந்து ஒளிந்துகொண் டிருக்கிறாள் என்று நினைக்க வேண்டி யிருக்கிறதே?" என்று தேவகி திடீரென்று கேட்டாள்.

"அவள் யாருக்காக ஒளிந்துகொண்டிருக்கப் போகிறாள்! ஜெயராமுக்குப் பயந்துதான் அவ்விதம் அவள் வசிக்கிறாள் போலும்!" என்று நரேந்திரர் மிக அலட்சியமாய்ப் பதில் சொன்னார்.

"இல்லை; இல்லை! உதயகுமாரி வேறொரு காரியத்தை முன்னிட்டு அவ்விதம் சைதாப்பேட்டையில் மறைவாக வசித்துவருகிறாள்! அவளைப்பற்றி நீர் விசாரித்துப்பாரும்; அவளுடைய செய்கைகளைக் கவனித்துக்கொண்டு வாரும்; எதற்காக அவ்விதம்

மறைந்திருக்கிறாள் என்பதை நீரே அறிந்துகொள்ளுவீர்" என்று ஞானசேகரர் கூறினார்.

ஞானசேகரர் சொன்ன இந்த வார்த்தைகளை நரேந்திரர் ஒரு பொருட்படுத்தவில்லை. ஏனெனில், அவர் உதயகுமாரிக்குப் பயந்திருப்பதை மறைக்க வேண்டி உண்மையற்ற பல போலிக் கதைகளைச் சொல்லக்கூடுமென்பதை நரேந்திரர் அறிந்திருந்தார். தேவகியோ ஞானசேகரருக்குக் கண் ஜாடை காட்டினாள். இவர்களிருவரும் அநேக விஷயங்களைத் தங்கள் கண்களினாலேயே பேசிக்கொண்டதை வைத்தியர் அறிந்துவிட்டாராதலால், அவருடைய சந்தேகம் அதிகமாயிற்று. தன் எதிரிலிருக்கும் அழகிய பார்வையையுடைய அந்த வஞ்சி தன்னை வஞ்சிக்க முயல்கின்றாளோவென்று நரேந்திரர் சந்தேகித்தார். பழைய சம்பவங்கள் ஒவ்வொன்றும் அவரது ஞாபகத்துக்கு வந்தன. கற்பகச்சோலையில் ஒரு பெண்மணி கொலையுண்டிருக்கிறாள் என்னும் விஷயம் அவரது மனத்தில் தோன்றவே அவர் பயத்தினால் உடல் நடுங்கினார். அங்கே பாதாளச் சுரங்கத்தில் வைக்கப்பட்டிருக்கும் பெரிய இரும்புப் பெட்டிகளுள் என்ன இருக்கக்கூடுமென்று சிந்தித்தார். ஞானசேகரர் சொன்ன விஷயங்கள் வெறும் பொய்யாக விருக்குமோ வென்று வைத்தியர் ஐயுற்றார். கற்பகச் சோலையில் நடந்திருக்கும் கொலைக்கு ஞானசேகரரே காரணரா யிருக்கக்கூடுமோ வென்று சந்தேகித்தார். தன்னையும், தேவகியையும் சில விரோதிகள் கொல்லப் பார்த்தார்கள் என்று ஞானசேகரர் சொல்லித் தன்னை நம்பும்படி செய்தது வாஸ்தவமாயிருக்குமோ வென்று ஆலோசித்தார். அன்று ஞானசேகரருக்குப்

பட்டிருந்த காயங்களை நோக்கினபோது, துகள் துக ளாய்ச் சிதறிப்போயிருக்க வேண்டிய அவர், ஒரு மயிரிழை தப்பினார் என்று நினைக்கும்படியாக விருந்த தால், ஞானசேகரர் குற்றஞ்செய்தவராய் இருக்க முடியாதென்றும், செய்யப்பட்ட குற்றத்துக்குத் தம்மை ஆளாக்கிக்கொண்டா ரென்றும் நரேந்திரர் தம்மைத் தாமே சமாதானப்படுத்திக் கொண்டார். ஆனாலும், சாப்பாட்டு அறையில் மேசையின்மீது விரிக்கப்பட்டிருந்த துணியில் இரத்தக்கறை இருக்கக் காரண மென்னவென்பதை மட்டும் அறிந்து சரியான முடிவுக்கு வர அவரால் முடியவில்லை. இதற்குள் சமையல் அறையில் கிடந்து எடுக்கப்பட்ட அறுந்து போன காதைப் பற்றிய ஞாபகம் திடீரென்று அவ ருக்கு உதித்தது. தவிர, ஞானசேகரரும் தேவகியும் ஒருவரோடொருவர் நட்புரிமை பாராட்டி வந்த போதிலும் அவர்களுக்குள் ஏற்பட்டிருந்த மரியாதை நரேந்திரருக்கு இன்னும் அதிகமான வியப்பை உண் டாக்கிற்று. முதல் முதல் ஞானசேகரரைக் கற் பகச் சோலையில் கண்டு அவருக்கு சிகிச்சை செய்த போது தேவகியும் ஞானசேகரரும் காதலியும் காதல னுமாக இருக்கக்கூடுமோ வென்று நரேந்திரர் சந் தேகித்தார். அதன் பிறகு அச் சந்தேகம் நீங்கி இரு வரும் தந்தையும் மகளுமாக இருக்கக் கூடுமோ வென் னும் ஐயம் நிகழ்ந்தது. இப்போது அவ்விதம் நினைக் கவு மிடமில்லாமற்போயிற்று. ஞானசேகரர் அப் பெண்மணியிடம் காட்டிய மரியாதையி லிருந்து, அவள் ஒரு எஜமானியென்றும், ஞானசேகரர் அவளிடம் வேலை பார்க்கும் ஒரு உத்தியோகஸ்தர் என்றும் நரேந்திரர் நினைத்தார். இவ்விதமாக நரேந்

திரருடைய மனம் பற்பல வழிகளில் அலைந்துகொண் டிருந்தபோதும், தேவகியின் அழகை வியந்து வியந்து அவர் நோக்கியபடியே இருந்தார். தேவகியின் கண் கள் நரேந்திரருடைய கண்களைச் சந்தித்தன. அப் போது அவள் கண்களிலிருந்து உண்டான வினாக்கள் பலவாகும். வாயைத் திறந்து தேவகி பேசாவிட் டாலும், அவளுடைய கண்கள் வினவிய கேள்விகள் வாயினாற் கேட்கும் கேள்விகளைவிடத் தெளிவாகவே இருந்தன. இந்தப் பெண்ணும், ஞானசேகரரும் சம்பந்தப்பட்டிருக்கும் இரகசியம் என்ன இரகசியமாக இருக்கக்கூடுமென்று நரேந்திரர் சிந்தித்தார். உதய குமாரியோடு சிநேகம் பாராட்ட வேண்டா மென்றும் அவளால் பல தீங்குகள் நேரிடுமென்றும் ஞானசே கரர் அடிக்கடி நரேந்திரருக்குச் சொல்லி இவ்விஷய மாய்ப் பூபேந்திரரை எச்சரிக்கும்படி வேண்டினார். இரண்டொரு மணிநேரம் மூவரும் பேசிக்கொண் டிருந்த பிறகு, தேவகி ஞானசேகரரிடம் விடை பெற் றுக்கொண்டு தன் வீட்டுக்குத் திரும்பினாள். நரேந் திரரும் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு அவர் வீட்டைவிட்டு நீங்கி தேவகியைப் பின்தொடர்ந்து தம்புச்செட்டித் தெருவரையிலும் வந்து தேவகியின் வீட்டைச் சமீபித்தவுடன், அவளிடம் தாம மைலாப் பூர் செல்வதற்காக விடை கேட்டார். பிறகு போகலாம் என்றும், தன் வீட்டுக்கு வரவேண்டுமென்றும் தேவகி சொல்லவே, இருவரும் வீட்டுக்குள் சென்றார்கள்.

வீட்டுக்குள் சென்று இருவரும் கூடத்தில் உட்கார்ந்தார்கள். ஆனால் ஒருவரோடொருவர் பேச வில்லை. தேவகி பேசுவதற்கு விரும்புகிறாள் என்பதை நரேந்திரர் குறிப்பா லறிந்துகொண்டார். ஆனாலும்,

வாய் திறப்பதற்குச் சிறிது அஞ்சுகிறுள் என்பதை யும் நரேந்திரர் அறிந்துகொள்ளாமற் போகவில்லை. அவருடைய மூளையில் அழுந்தியிருந்த பழைய சங் கதிகளை யெல்லாம் அவருடைய ஞாபகம் இப்போது கிளறிவிட ஆரம்பித்தது. ஓர் அழகிய குதிரையின் மீது தேவகி—தன் தலைமயிர் காற்றில் பறக்க, வஸ் திரம் காற்றில் அசைய — சாமர்த்தியமாய் ஆரோ கணித்துச் சவாரிவருவது போலவும், தன்னை சதானந் தர் வைத்தியசாலையில் வந்து அழைப்பது போலவும் அவருடைய மனோபாவக உணர்ச்சிக்கு இப்போது தோன்றிற்று. முதல் முதல் நெடுங்கறுப்பு அங்கி ஒன்றைத் தரித்துக்கொண்டு வந்து மாணிக்கத்தையும் ஆயிரம் பவுனையும் கொடுத்து விட்டு சிகிச்சை செய்து கொண்டுபோன மனிதனுடைய ஞாபகம் திடீரென அவருடைய மனத்தில் உதித்தது. அந்த மனிதர் யார் என்று அறிந்துகொள்ள வேண்டு மென்னும் அவாவே அவருடைய மனத்தில் பலமாய்க் குடி கொண்டிருந்தது. சிறிது நேரம் வரையில் வைத்தியர் மௌனமாக இருந்துவிட்டுக் கடைசியில் ஒரு பெரு மூச்சு விட்டு தேவகியைப் பின் வருமாறு கேட்டார்.

"தேவகி! என்னுடைய பரபரப்புக்காக என்னை மன்னிக்கவேண்டும். சதானந்தர் வைத்தியசாலைக்கு அன்றிரவு வந்து ஆயிரம் பவுனை எனக்குக் கொடுத்து விட்டு, தன் கைக்கு மருந்துபோட்டு சிகிச்சை செய்து கொண்டுபோன மனிதன் யாரென்று தயைசெய்து எனக்குச் சொல்லலாமோ? அவ்விஷயத்தை அறிந்து கொள்ள வேண்டுமென்கிற ஆசை எனக்கு அதிக மிருக்கிறது" என்று சொன்னார்.

"வைத்தியரே! அப்படிப்பட்ட விசித்திரமான நிலைமையில் இருக்கும் நீர் அந்த மனிதனைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டுமென விரும்புவது இயல்பு தான். அந்த மனிதனே அன்று கற்பகச் சோலையில் வெடிவிபத்து உண்டாகும்படி செய்தாரென்று நான் அப்போது—அதாவது அன்று நான் உம்மைத் திருமுகக் கோட்டையில் வந்து அழைத்தபோது—நினைத்தேன். ஆனால் நான் நினைத்தது முற்றும் தவறு என்பதைப் பிறகு உணர்ந்தேன். வெடிவிபத்து உண்டான சமயத்தில் அவர் கற்பகச் சோலைக்குள் இருந்தார். எங்களுக்கு நேரிடப்போகும் அபாயத்தைப்பற்றி முன்னெச்சரிக்கை செய்வதற்காக அவர் அன்று மன்னார்குடியிலிருந்து பஞ்ஞாநாட்டுக்கு வண்டியில் வந்தார். சந்தேகாஸ்பதமான சிலர் தோட்டத்துக்குள் நடமாடுவதை அறிந்துகொண்டு அவர் கட்டிடத்திற்கு வெளியே ஜன்னலோரமாய் மறைந்திருந்தார். அவர் வருவதற்குச் சில நிமிஷங்களுக்கு முன்பே எங்களுடைய விரோதிகள் வெடிகுண்டு வைத்துவிட்டார்கள். வெடியுண்டான சத்தத்தைக் கேட்டவுடன் அவர் தாம் மறைந்திருந்த இடத்திலிருந்தே அச்சத்துடன் எட்டிப்பார்த்தார். அப்படிப் பார்த்தபோது அச்சத்தின் பயனாகக் கீழே விழுந்துவிட்டார். அவர் உயரமான இடத்திலிருந்து கீழேவிழுந்ததால் அவருடைய கை அடிபட்டு அதனால் பலமான காயங்களும் உண்டாயின. தாம் வந்திருப்பதை எங்களுடைய விரோதிகள் கண்டுவிடுவார்களானால் காரியம் கெட்டுப்போய்விடுமென்று பயந்து, அவர் ஒருவருக்கும் தெரியாமல் வெளியில் சென்று வண்டியில் ஏறிக்கொண்டு திருமுகக் கோட்டைக்குவந்து உம்மிடம்

தம் கைக்கு சிகிச்சை செய்துகொண்டார். உமக்கு அவர் ஆயிரம் பவுன் கொடுத்ததற்குக் காரணம் கற்பகச்சோலையில் நடந்த விஷயம் போலீஸாருக்குத் தெரியாமலிருக்கவேண்டும் என்பதை உத்தேசித்தே தவிர வேறன்று. ஏனெனில், போலீஸாருக்குத் தெரிந்தால் விஷயங்கள் வேறுவிதமாய் மாறிவிடும். அவர் வந்து சிகிச்சை செய்துகொண்டு போனதை வெளியிட்டால் விஷயம் புலப்பட்டுவிடுமென்றே தாம் வந்ததை ஒருவருக்கும் தெரிவிக்கக் கூடாதென அவர் உம்மைக் கேட்டுக்கொண்டார்'' என்று தேவகி சொன்னாள்.

“அந்த மனிதனுடைய பெயர் என்னவென்று எனக்குச் சொல்லக்கூடாதா?'' என்று நரேந்திரர் கேட்டார்.

“உம்மை நேரில் கண்டு விஷயங்களைத் தெரிவிக்கும்படி நான் அவருக்குச் சொல்லியிருக்கிறேன். இப்போது அவர் வெளியூர்களில் சுற்றுப்பிரயாணஞ் செய்துகொண் டிருக்கிறார். நீரும் அவரும் ஒரு சமயத்தில் சந்திக்கும்படி நேரிடும். அப்போது விவரமாய் எல்லாச் சங்கதிகளையும் அறிந்து கொள்ளுவீர்'' என்று தேவகி சொன்னாள்.

“வெடி விபத்து உண்டானபோது நீ எங்கே இருந்தாய்? ஞானசேகரர் எங்கே இருந்தார்?'' என்றுநரேந்திரர் கேட்டார்.

“ஞானசேகரர் யந்திரங்கள் வேலைசெய்யும் சுரங்கத்தில் இருந்தார். அங்கேதான், அவருக்குத் தெரியாமல், வெடிவைக்கப்பட்டது. அதனால்தான் அவருக்குப் பலமான காயம் பட்டது. சாப்பாட்டு

அறையில் இருந்த நான், வெடிசத்தம் கேட்டவுடன் பயந்து யந்திரசாலைக்குள் சென்றேன். சுவர்கள் இடிந்து கிடந்தன ; யந்திரங்களோ உடைந்து கிடந்தன. ஒரே இருளா யிருந்தபடியால், ஒரு விளக்கை ஏற்றி ஞானசேகரரைத் தேடினேன். அவர் வெடி விபத்தினால் படுகாயப்பட்டு, சித்த சுவாதீன மிழந்து ஒரு மூலையில் கிடந்தார். அவரைத் தூக்கிவந்து படுக்கையில் கிடத்திவிட்டு உம்மை அழைப்பதற்குத் திருமுகக் கோட்டைக்கு வந்தேன்'' என்று தேவகி சொன்னாள்.

''சாப்பாட்டு அறையில் இருந்தவர்கள் ஏன் உதவிசெய்ய வரவில்லை?'' என்று நரேந்திரர் உசாவினார்.

''வைத்தியரே ! அவர்கள் எங்கள் சிநேகிதர்களல்லர்; விரோதிகள்'' என்று தேவகி சொன்னாள்.

''சாப்பாட்டு அறையில் ஒரு பெண் கொலை செய்யப்பட் டிருக்கிறாள் என்று தோன்றுகிறதே ? அதைப்பற்றி என்ன சொல்லுகிறாய் ?'' என்று நரேந்திரர் கேட்டார்.

''ஆ ! நரேந்திரரே ! அதை ஏன் இப்போது ஞாபகப் படுத்துகிறீர் ! அந்தப் பாதகர்களுடைய சதியும் சதியாலோசனையும் சாமானியமானவையா?'' என்று கண்ணீர் ததும்ப தேவகி கூறி, அப்படியே மூர்ச்சித்து விட்டாள்.



# 19. மறுபடியும் "கற்பகச்சோலை"



"ஆனாலும் வேண்டுமென்றே ஒரு பெண்ணைக் கொலை செய்த அந்தப் பாதகர்களைக் கண்டுபிடிக்க வேண்டுவது நம்முடைய கடமை — உன்னுடைய கடமையும், என்னுடைய கடமையும் — அன்றோ?" என்று நரேந்திரர், தேவகியை, அவள் மூர்ச்சை தெளிந்து எழுந்தபின்னர், கேட்டார்.

"ஐயா! கண்டுபிடிக்க வேண்டுவது நம்முடைய கடமை என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், அந்த சதியைக் கண்டுபிடித்து வெளிப்படுத்துவது எவ்வாற்றானும் முடியாத விஷயம்!" என்று தேவகி மிகுந்த ஆற்றாமையுடன் கூறினாள்.

"ஏன் முடியாது?" என்று கடாவினார் வைத்தியர்.

"நரேந்திரரே! நாம் எவ்வளவு அபாயகரமான நிலைமையில் இருக்கிறோமென்பதை நீர் அறிந்துகொள்ளவில்லை. நம்முடைய எதிரிகள் நம்மை நன்றாக அறிந்திருக்கிறார்கள். ஆனால் நாமோ, காரிருளில் அகப்பட்ட வெளியூர் வாசியைப்போல், நம்முடைய விரோதிகள் இன்னார் என்று தெரியாமல் தயங்குகின்றோம். தெரிந்த விரோதிகள் பலர் இருப்பினும் பாதகமில்லை; தெரியாத விரோதிகள் சிலர் இருப்பினும் அது அஞ்சத்தக்கதன்றோ?" என்று தேவகி சொன்னாள்.

"பாவாய்! 'நாம்' என்று நீ சொல்வதன் கருத்து எனக்கு விளங்கவில்லையே? 'நாம்' என்றால், — நீயும்

ஞானசேகரருந்தானே ?" என்று நரேந்திரர் ஆச்சரியத்தோடு வினவினர்.

"நானுந்தான், நம் ஞானசேகரருந்தான்,— நீருந்தான் ! என் ? அவரும் நானும் எவ்வளவு அபாயகரமான ஸ்திதியில் இருக்கின்றேமோ அவ்வளவு அபாயகரமான நிலைமையில் நீரும் இருக்கின்றீர்,— உமக்கும் விரோதிகள் பலர் இருக்கின்றார்கள் !" என்று தேவகி உரைத்தாள்.

"என்ன ? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே ?" என்று நரேந்திரர் அச்சத்தினுல் வாய்விட்டு அரற்றினர்.

"வைத்தியரே ! இந்த விஷயத்தில் நீரும் நானும் ஒன்றுபட்ட ஊக்கமும், உற்சாகமும் காண்பித்து உழைக்க வேண்டியவர்களாகவே இருக்கின்றேம். ஆதலால், என்னை மாறுபாட்டுடனும், என் முயற்சியை வேறுபாட்டுடனும் கருதாதீர். அன்று கற்பகச் சோலையில் உமக்கு நான் கொடுத்த மதுபானத்தில் நம்முடைய விரோதிகளே — உம்முடையவும்,என்னுடையவுமான விரோதிகளே —நான் அறியாதவாறு மயக்க மருந்தைக் கலந்து, உண்மை யறியாது நான் அதனை எடுத்துப் பருகிவிட்டால் உயிர் மாய்ந்து போவேன் என்னும் கொடிய எண்ணத்தால், வைத்திருந் திருக்கிறார்கள். அவர்களுடைய பழிக்கத் தகுந்த சூழ்ச்சியைத் தெரிந்துகொள்ளாமல் உமக்கு நான் அந்த பொல்லாத பானத்தை அருந்தக் கொடுத்தேன் —, ஆனல் தெய்வச் செயலாய் நான் மாத்திரம் அதனை உட்கொள்ளாது ஒழிந்தேன். நரேந்திரரே ! இன்னமும் அவர்கள் நம்மை நமனுலகினுக்கு அனுப்பும்

சூழ்ச்சியைச் செய்துகொண்டேதான் இருக்கின்றார்கள். அவர்களுடைய அங்க அடையாளங்களும் காரணகாரியப் போக்குகளும் ஒரு சிறிதும் புலப்படாமல் இருக்கின்றன. ஆனால், அவர்கள் நம்மை அறிந்திருக்கிறபடியால், பிரதிதினமும், — என்? ஒவ்வொரு நிமிஷமும் — நம்மைப் பல கொடும் விபத்துகள் சூழ்ந்துகொண்டிருக்கின்றன என்பதிற் சிறிதும் ஆசங்கை எனக்கு நிகழாமல் இல்லை" என்று தேவகி மிகுந்த உண்மையுடையாள்போலும் திகிலடைந்தாள் போலும் நரேந்திரரை நோக்கி ஒருவகையான வசீகரப் பார்வையுடன் மெதுவாக உரைத்தாள்.

"பாவாய்! இவ்வளவுதானா? இன்னும் எவ்வளவோ விஷயங்கள் உன்னால் வெளிப்படக் கூடுமென்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்" என்று நரேந்திரர் கூவிக் கூறி, "ஆதலால் என்னிடத்தில், கண்ணே, ஒன்றையும் ஒளியாது வெளியிடுதல் நலமாகும்" என்று தேவகியின் நடுங்குகின்ற அங்கையைத் தன் கையால் பிடித்துக்கொண்டு — இதுதான் அவர் தேவகியின் கையைப் பற்றிய முதற்றடவை யாகும் — பின்னும் மொழிந்தார்.

"ஆ!" என்று தேவகி பெருமூச்செறிந்து, தன் கருவிழியின் பார்வையை ஆழ்ந்த சிந்தனையுடன் பெருநிலத்தில் செலுத்தியபடியே தலைகுனிந்து, "சொல்லலாமென்றுதான் விரும்புகின்றேன். ஆச்சரியகரமான என்னுடைய கதையை உம்மிடம் முழுதும் கூறிவிட வேண்டுமென்றே நான் அவாவுகின்றேன், — ஏனெனில், அப்போதாவது உம்முடைய அனுதாபத்தையும் அனுசரணையையும், உதவியையும் ஒத்தாசை

யையும் பெறுவேனன்றோ?" என்று கனிந்த குரலுடன் பணிந்து கூறினாள்.

இதற்குள் இன்னதென்று அறியப்படாத, — அறியப்படினும் விளங்க உரைக்கப்படாத, — ஏதோ ஒரு வஸ்து அவளுடைய குரல்வளையை வந்து அடைத்து விட்டதால் சொற் சொல்லும் சக்தியை அடியோடு இழந்து விட்டவளைப்போல் திடீரென்று தன் பேச்சை நிறுத்திவிட்டு, அயர்ந்து சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்ற தேவகி, மீண்டும் உறக்கத்திலிருந்து திடீரென்று விழித்தாள்போன்று மறுபடியும் ஒரு நெடுமூச்சு விட்டு, "ஆனல், நரேந்திரரே! நான் எதும் பேசாமல், — பேசினுல் பிறரைக் காட்டிக் கொடுத்து விட்டவளாவே னுதலால், — மௌனம் சாதிக்கவே கட்டுப்பட் டிருக்கின்றேன். ஆகையினுலே, நான் என்றைக்கும் மூடிய உதட்டுடனேயே இருத்தல் வேண்டும், — அதன் பலனுக என்றும் நீங்காத துன்பத்தை அனுபவிக்கவும் வேண்டும்" என்று தொடர்ந்து மொழிந்தாள்.

அப்போது அவளுடைய குளிர்ந்த கண்களில் இருந்து, அவற்றினும் குளிர்ந்த நீர்த்துளிகள் முத்துக்கள் போல் துளித்து அவள் கன்னத்தின் வழியாய், தாமரையிலையின் மேலுள்ள ஜலத்துளிகள் அவ்விலையின் அசைவால் உருண்டு சென்று வீழ்வன போல், திரண்டு சென்று அவளுடைய மார்பின்மீது வீழ்ந்தன. வருங்காலத்து வரப்போகும் பெருந்துன்பத்தை நினைந்து அவள் வருந்தினுளென்பதை அவள் கண்கள் சொரிந்த கண்ணீர் இனிது விளக்கிற்று. நரேந்திரரோ, இவ்வுலகத்திலேயே இல்லாத

வர்போன்று, தன்னையும் மறந்து தன் எதிரில் நிற்கும் பெண்ணையும் மறந்து ஸ்தம்பித்து நின்றார்.

"நரேந்திரரே!" என்று இன்னும் அதிகரித்த உண்மை யன்போடு பின்னுந் தொடர்ந்து தேவகி சொல்வாள். "நாம் கள்ளங்கவடு ஏதும் நினையாமல் வெளிப்படையாய்ப் பேசுவோமாக — அல்லது குறைந்த பட்சம் நானாவது உம்மிடம் வெளிப்படையாகப் பேசுகின்றேன். நான் சொல்லுகிற விவரங்களும், கூறுகிற காரணங்களும் நீர் அங்கீகரிக்க ஏலாதவாறு அவ்வளவு நொய்மையாக இருக்குமென்பதை நான் உணராமல் இல்லை. நீர் என்மீது சந்தேகப்படுகிறீர் என்பதை நான் அறிவேன், — ஆனால் அவ்விதம் ஐயுறவுகொள்ளல், இப்போது விஷயங்கள் இருக்கும் நிலைமையில், இயல்பு தானே? நடந்திருக்கிற சம்ப வங்களைப் பற்றி நீர் திட்டமாய் ஒன்றும் அறிந்து கொள்ளாமலிருப்பது வாஸ்தவமே யாயினும், அவ் விதம் இருக்கும்படியான கட்டாயம் நேரிட் டிருக் கிறது. எது எப்படி இருந்தபோதிலும் நீர் என்னைப் பிறழ உணர்ந்திருக்கிறீர் என்று மாத்திரம் சத்திய மாய்க் கூறுவேன்."

தேவகி இவ்விதம் மூச்சுவிடாமல் தொடர்ந்து பேசியபோது பயத்தினால் அவளுடைய மார்பு விம்மு வதும் அடங்குவதும், மீண்டும் விம்முவதும அடங்கு வதுமாக இருந்தது. அவளுடைய கண்களில், பய மும் கவலையும் கலந்த ஒருவகையான பார்வை தோன் றிற்று.

"எனக்குத் தெரிகிறது, தேவகியே, நீ மிகவும் அபாயகரமான நிலைமையில் இருக்கின்றாய் என்பது.

ஆனாலும், நான் சொல்லுவதுபற்றி என்னை மன்னிக்கவும். நீ என்னை வஞ்சித்துஏமாற்ற முயல்வதை நோக்கும்போது, ஏதோ ஒருவிதமான உட்கருத்து இருக்கிறது என்றே எனக்குத் தோன்றுகிறது" என்று நரேந்திரர் வாழைக் கனியில் ஊசி புகுத்துவதுபோல் நயமாயும் ஆனால் சுருக்கென்று அவள் மனத்தில் தைக்கும்படியும் புகன்றார்.

"நான் அதை ஒப்புக்கொள்ளுகிறேன். உம்மை வஞ்சிக்க வேண்டுவது தற்சமயம் எனக்கு இன்றியமையாததாக இருக்கின்றது" என்று அக்கருங்குழலாள் விடை பகர்ந்தாள்.

"அப்படியானால் நான் ஒன்றும் பேசவேண்டுவதே இல்லை, — இனி விவாதத்திற்கு இடமும் இன்று" என்று கோபத்தினால் வெறுப்போடு நரேந்திரர் கூறிவிட்டு, அந்த இடத்தை விட்டு எழுந்துசெல்ல முயன்றார். அவள்மீது அன்றிரவு,— அதாவது பெயர் தெரியாத ஒரு மனிதன் திருமுகக் கோட்டைக்குச் சென்று நரேந்திரரிடம் ஆயிரம் பொன்னையும் விலையுயர்ந்த மாணிக்கத்தையும் கொடுத்துவிட்டு தன் கைக்குச் சிகிச்சை செய்துகொண்டு போன அன்றிரவு; அழகிய அஸ்வத்தில் மிகுந்த இலாவகத்துடன் ஆரோகணித்து சதானந்தர் வைத்தியசாலை சென்று ஞானசேகரருக்கு — அல்லது முதல் முதல் தேவகி கூப்பிட்டபடி மதிவதனன் என்பவருக்கு — வைத்தியம் பார்க்கும்பொருட்டு நரேந்திரரை அழைத்துக்கொண்டு கற்பகச்சோலைக்கு தேவகி திரும்பிய அன்றிரவு; மயக்கமருந்து கலக்கப்பட்ட சாராயத்தை தேவகி நரேந்திரருக்குக் கொடுத்த அன்றிரவு; கற்பகச்சோலை

யிலும் அதற்குள் இருக்கும் பாதாளச் சுரங்கங்களி லும் அநேக அதிசயமான காட்சிகளை நரேந்திரர் முதன் முதற் கண்ட அன்றிரவு,— நரேந்திரருக்கு ஏற் பட்ட சந்தேகம் இன்னமும் முற்றும் விலகுவதற்கு மார்க்கமில்லாமலே இருந்தது. அன்று எப்படி தேவகி என்பவள் ஒருபெரிய மாயக்காரியாக இருக்கவேண்டு மென்று நரேந்திரர் நினைத்தாரோ, அப்படியே இன் றும் நினைத்தார். தேவகியின் வீட்டைவிட்டு எழுந்து செல்ல முயன்ற நரேந்திரரை அவள் தடுத்து, "வைத் தியரே! போகாதீர்! உம்மிடம் பேசவேண்டிய சில விஷயங்களிருக்கின்றன. அதாவது உம்மை ஒரு சகாயம் புரியவேண்டுமெனக் கேட்டுக் கொள்ளு கிறேன்" என்று பணிந்து கூறினாள்.

"என்னால் உனக்கு ஆகவேண்டிய காரியம் யாது?" என்று நரேந்திரர் சரேலென ஒருவித ஆச் சரியமான பார்வையோடு கேட்டார்.

"உம்முடைய மைத்துனருக்குத் தெரியாமல் நீர் மாத்திரம் சென்று, உதயகுமாரியைக் கண்டு பூபேந் திரருடன் அவள் கொண்டிருக்கும் நட்புரிமையை நீக் கிவிடவேண்டு மென்று வற்புறுத்தி அவளுக்குச் சொல்லவேண்டும் என்பதுதான் நான் உம்மைக் கேட்டுக்கொள்ளும் சகாயமாகும்" என்று தேவகி கூறினாள்,

"ஏன்?" என்று நரேந்திரர் அதிசய ஒலிக்குறிப் புத் தோன்றக் கூவி "நான் சொன்னால் அவள் கேட் பாளா?" என்று எதிர்மறுத்து வினவினார்.

"நான் சொல்லுகிற ஒரு செய்தியை அவளிடம் சொல்லுவீரேயானால், அவள் நீர் சொல்லுவதற்கு

மறுத்து உரையாடமாட்டாள். அவசியம் பூபேந்திரருக்கும் தனக்கும் உள்ள சிநேகபாவத்தை ரத்து செய்து விடுவாள். நீர் அவளிடம் சென்று என்னுல்—தேவகியாகிய என்னுல்—கற்பகச்சோலை அதிசயம் பயிரங்கத்துக்கு வந்துவிட்டதென்று சொல்லும். அதன் பிறகு நீர் சொன்ன இந்தச் செய்தி என்ன விதமான வேலையை அவளிடம் செய்கிறதென்று கூர்ந்து கவனியும்" என்று சொல்லி, அவள் தன் உதட்டை மடித்து ஒருவகையான இளநகை அரும்பினுள்.

"பெண்ணே! அந்தக் காதலர் இருவரையும் பிரிப்பதில் நீ ஏதாவது ஓர் உட்கருத்து வைத்திருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது" என்று வைத்தியர் ஐயப்பட்டு உரைத்தார்.

"உம்முடைய மைத்துனரைக் காப்பாற்றவேண்டுமென்பதுதான் என்னுடைய உத்தேசம்" என்று தேவகி அனுதாபக் குறிப்புத்தோன்ற உரைத்தாள்,

நரேந்திரர் அவளுடைய வார்த்தையைத் தினைத்துணையும் நம்பாமல் "பெண்ணே! அவர்கள் இருவரும் நெடுநாள் முன்னரே ஒருவரையொருவர் சந்தித்து, ஒருவர்மீது ஒருவர் உண்மைக் காதல் கொண்டார்கள். ஏதோ விதிவசத்தால் இடையிற் சிலகாலம் பிரிந்திருந்தார்கள். பழையபடியும் ஒருவரை யொருவர் தெய்வச் செயலாய்க் கண்டு, அன்பு பாராட்டி வருகிறுர்கள். அப்படிப்பட்ட இருவரைப் பிரிப்பதற்கு நான் ஒருபோதும் சம்மதியேன்" என்று நரேந்திரர் பிடிவாதமாய்ச் சொன்னுர்.

இருவரும் சிறிதுநேரம் ஒருவரோடொருவர் பேசாமல் மௌனமாக விருந்தார்கள். இனி என்ன

பேசுகிறதென்று தேவகிக்குத் தெரியவில்லை. இவ் விதம் ஏன் இவள் பூபேந்திரரையும், உதயகுமாரியை யும் பிரிக்கப் பார்க்கிறுள் என்பதற்குக் காரணத்தை நரேந்திரர் அறியவில்லை.

"நரேந்திரரே!" என்று தேவகி திடீரென்று வைத்தியரை விளித்து, "என்னுடைய நிலைமை மிகவும் அபாயகரமாய் இருக்கிறது. எனக்கு நீர் உதவிசெய்ய மாட்டீரா"? என்று மிகுந்த பரிதாபத் துடன் கேட்டாள்.

"ஆ! எவ்வளவு உதவி செய்யவேண்டுமானுலும் செய்கிறேன். ஆனுல், நான் எந்த விதமாக உதவி செய்வது?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நான் — நான் உண்மையிலே எதும் அறிந்தி லேன்" என்று தேவகி நாத்தடுமாற நவின்று, "என் னுடைய விரோதிகள் யார், என்னுடைய சிநேகிதர்கள் யார், என்று அறிந்துகொள்ள முடியாதவாறு என் னுடைய நிலைமை அவ்வளவு சன்னல்பின்னலாய் இருக்கிறது. உண்மை என்னவெனில், நான் — நல் லது நான் உதவியற்றவளாகவே இருக்கிறேன்" என்று தொடர்ந்து கூறிஞள்.

"ஞானசேகரர் உனக்கு வேண்டிய நண்பர்தா னே?" என்று மிகத் தாழ்ந்த குரலில் நரேந்திரர் தேவகியைக் கேட்டார்.

"ஆம்!" என்று தேவகி உடனே சொல்லி, அதன்பிறகு சிறிதுநேரம் மௌனமாயிருந்து, "எனக் காக ஞானசேகரர் மிகுந்த பாடுபட்டிருக்கிறுர். அவர் எத்தனையோ விஷயங்களில் எனக்கு உதவி புரிந்திருக்

கிறார். அவர் செய்திருக்கும் உபகாரத்துக்கு எழுமையும் மறவா நன்றி பாராட்ட நான் கடமைப் பட்டிருக்கிறேன்" என்று யோசித்து ஒவ்வொரு வார்த்தையாக வெளியிட்டாள்.

"உன்னுடைய நிலைமை எவ்விதம் இருக்கிறதென்று உள்ளபடியே அறிந்துகொள்ளாமலும், உனக்கு அச்சத்தையும் கவலையையும் கொடுக்கின்ற தீங்குகளின் இயல்பை அறிந்துகொள்ளாமலும் நான் எப்படி உதவிபுரிதல் கூடும்?" என்று நரேந்திரர் வினவினார்.

"சைதாப்பேட்டைக்கு நீர் சென்று, உதய குமாரியைக் கண்டு, நான் சொன்ன செய்தியை இரகசியத்தில் உரைப்பீரே யானால், அதுவே நீர் எனக்குச் செய்த பேருபகாரமாகும்" என்று தேவகி விடை இறுத்தாள்.

"அப்போது கற்பகச் சோலை அதிசயம் வெளிப்பட்டுவிடுமோ?" என்று நரேந்திரர் ஆவலுடன் உசாவினார்.

"ஒரு பகுதி அதிசயம் அப்போது புலனாய் விடும்,—முற்றும் ஆகாது" என்றாள் தேவகி.

"அதாவது கற்பகச்சோலையில் கொலையுண் டிறந்த பெண்மணி யாரென்பது மாத்திரம் தெரிந்துவிடும் என்று சொல்லுகிறாய். ஏன் அப்படித்தானே?" என்று நரேந்திரர் கேட்டார்.

தேவகி தன் முகத்தைச் சுளித்தும், உதட்டைப் பிதுக்கியும், ஏதும் தெரியாது என்பதற்கு அடையாளமாகத் தன் கையை விரித்தும் சைகைகள் செய்தாளே யொழிய வாய்திறந்து ஏதும் பேசவில்லை.

"நீயும் ஞானசேகரரும் என்னிடத்தில் விஷயங்களை உள்ளபடியே சொல்லாமல், ஏன் மறைக்கவேண்டும்? என்னுடைய உதவியை வேண்டும் நீங்கள் உண்மையை என்னிடம் ஒளியாது சொன்னாலன்றோ நான் உதவிபுரிதல் கூடும்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"கற்பகச்சோலை அதிசயம் முழுதும் வெளியாகிறவரையில் ஒன்றும் வெளியிடாதிருக்க நானும் ஞானசேகருமக கட்டுப்பட்டவர்களாய் இருக்கிறோம்" என்று பதில் பகர்ந்தாள் அழகிற் சிறந்த தேவகி.

"ஆனால் நான் அந்த அதிசயத்தைப் பயிரங்கத்துக்குக் கொண்டுவருவதில் உதவி செய்வேன் அன்றோ?"

"நரேந்திரரே! அதுதான் முடியாது. எங்களுக்கு உதவி செய்வது என்பது உம்முடைய சக்தியில் இல்லை. நீர் ஏதாவது செய்யப்புகுந்தால் உம்முடைய செய்கை எங்களுடைய முயற்சியை விழலுக்கு இறைத்த நீர்போல் ஆக்கிவிடுமோ என்று நான் அஞ்சுகிறேன். நாங்கள் உண்மையான வழியில் எப்போதும் வேலைசெய்து வருகிறோம், — அந்த உண்மை வெளியாகும்போது இந்தியாமுழுவதையும் அது திடுக்கிடச்செய்யும். இருந்தபோதிலும் நான் இதில் கலந்து வேலைசெய்கிறேன் என்பதும், நான் யாரென்பதும் எக்காலத்திலுமே வெளிப்படக்கூடாததோர் விஷயமாக இருக்கிறது" என்று தேவகி கூறினாள்.

"ஏன் அவ்விதமிருக்கவேண்டும்?" என்று வைத்தியர் வினவினார்.

"இந்த விஷயத்தில் நான் கலந்திருக்கிறேன் என்பதை உலகம் அறியும்படி விடுவதைக்காட்டிலும் தற்கொலை புரிந்துகொண்டு இறப்பது மேலானதாகும்" என்று தேவகி அச்சத்தோடு கூறினாள். அவள், தான் சொன்னபடியே செய்யக் கூடியவள் என்பது இச்சமயம் அவள் கண்களிலிருந்து புறப்பட்ட ஓர் வகையான பிரகாசத்தால் புலனாயிற்று.

பெரிய குடும்பத்தில் பிறந்து, கௌரவமான நிலைமையை அடைந்து உலகத்தாரால் மிகவும் மதிக்கப்பட்டுவரும் ஒரு சிறந்த குலத்தைச் சேர்ந்தவளாக, தான் இருப்பதனாலே ஒரு சதியாலோசனை சம்பந்தமான விஷயத்தில் தான் கலந்திருப்பதாக உலகத்தாரை அறியும்படிவிட்டு, அதனால் தனக்கும் தான் பிறந்த குலத்துக்கும் இழிவையும் அவமானத்தையும் தேடிக்கொள்வதைவிட உயிர் நீத்தல் சிறந்ததென்று அந்த மங்கை நல்லாள் கருதினாள் என்பதை உள்ளபடியே அறிந்துகொண்ட நரேந்திரர், அவளுடைய சரீரத்தை மீண்டும் ஓர் முறை ஏற இறங்கப் பார்த்து வியப்பும் ஆச்சரியமும் கொண்டார். நரேந்திரர் சுமார் ஒருமணிநேரம் வரையில் அவளுடன் உரையாடிவிட்டு விடைபெற்று மைலாப்பூர் சென்றார். உதயகுமாரியைக் கண்டு விஷயத்தை அறிவிக்கும்படி தேவகி இப்போதும் வற்புறுத்தினாள்.

மைலாப்பூர் சென்ற நரேந்திரருக்கு, மறுபடியும் ஒரு முறை மன்னார்குடிக்குப்போய், கற்பகச் சோலையைப் பார்த்து வரவேண்டுமென்னும் ஒரு எண்ணம் திடீரென்று உதித்தது. அவர் மறுநாள், பூபேந்திரரிடம் சொல்லிவிட்டு, சென்னையை விட்டுப் புறப்பட்டு

மன்னார் குடிக்குப் போய்ச்சேர்ந்தார். யந்திரங்கள் வைத்து வேலைசெய்த மனிதன், வெடிவிபத்து நேர்ந்த பிறகு தன்னுடைய யந்திரசாலையைப்போய்ப் பார்த்திருக்கின்றாரா இல்லையா என்பதை அறிந்துகொள்ள வேண்டும் என்னும் எண்ணமும், இறந்த சரீரம் எந்த இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டப்பட்டிருக்கிறது என்னும் சந்தேகம் தனக்கு இருக்கிறதோ அந்த இரும்புப் பெட்டியை எவ்விதமாவது திறந்துபார்த்துவிட வேண்டுமென்னும் அவாவுமே, வைத்தியரை மன்னார்குடிக்குப் போகும்படி தூண்டின. பகல் முழுவதும் மன்னார்குடியிலேயே நரேந்திரர் தங்கியிருந்துவிட்டு மாலை நான்குமணி சுமாருக்குப் பஞ்ஞாநாடு சென்று கற்பகச்சோலைக்குள் நுழைந்தார். உயிருள்ள எந்தப் பிராணியையும் அவர் அங்கு சந்திக்கவில்லை. வயல்களில் வேலை செய்துகொண்டிருக்கும் ஒரு குடியானவன்கூட அவர் கண்ணுக்கு அகப்படவில்லை. தோட்டத்து மரங்களெல்லாம் அசைவற்று நின்றன. மரங்களில் இலைகள் இரண்டொன்று கூட இல்லை,—இலைகளெல்லாம் கீழே உதிர்ந்து வாடிவதங்கிச் சருகாய்க் கிடந்தன. தோட்டத்தைக் கடந்து கட்டிடத்தை அணுகிய நரேந்திரர், கதவுகளும் எல்லாப் பலகணிகளும்—ஒரே ஒரு ஜன்னலைத் தவிர—சாத்தப்பட்டிருக்கின்றன என்பதைக் கண்கூடாய் அறிந்தார். திறந்திருந்த ஜன்னல்வழியாய் உள்ளே நோக்கினார். அறை வெற்றறையாக இருந்தது. இதற்குள் தனக்குப் பக்கத்தில் ஒரு பெரிய காகிதக் குப்பல் இருப்பதைக் கண்டார். அதன் சமீபத்தில் சென்று பார்க்கவே, அநேக கடிதங்களும் பத்திரங்களும் சிறு சிறு துண்டாகக் கிழிக்கப்பட்டு அக்குப்பலில் கிடப்

பதை வைத்தியர் கண்டார். சாமான்கள் ஏற்றப் படும் பாரவண்டிகளின் சகடச் சுவடுகள் தோட்டத் தில் காணப்பட்டன. இவைகளைக் கண்டவுடன் ஞானசேகரர் கற்பகச்சோலையில் இருந்த தன்னுடைய சாமான்களை யெல்லாம் வண்டியிற்போட்டு அப்புறப் படுத்தி விட்டார் என்று நரேந்திரர் எளிதில் அறிந்து கொண்டார். ஆனாலும், இவ்விஷயமாக ஞானசேகரரும் தேவகியும் வைத்தியரிடத்தில் ஒரு வார்த்தை கூட சொல்லாமற்போனது அவருக்கு பேராச்சரியத்தை விளைவித்தது ஆகவே, இப்போது நரேந்திரருடைய சந்தேகம் இரண்டுமடங்கு அதிகமாயிற்று. கட்டிடத்தின் பின்புறமாகச் சென்று இடிந்துபோன சுவர்களின் வழியாய் ஏறிக்குதித்து நரேந்திரர் யந்திர சாலைக்குள் சென்றார். ஆனால், அங்குச் சென்று பார்த்ததும் யந்திரங்களெல்லாம் அப்புறப் படுத்தப் பட்டு இருக்கின்றன என்பது வைத்தியருக்குப் புலனாயிற்று. இரும்புப் பெட்டிகள் என்னவாயின என்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்னும் விருப்பம் நரேந்திரருக்கு இப்போது உண்டாயிற்று. சாத்தப் பட்டிருந்த ஒரு ஜன்னலை, முரட்டுத்தனமான தன்னுடைய செய்கையால் என்ன விளையுமென்பதையும் கவனியாமல், உடைத்தெறிந்துவிட்டு அதன் வழியாய் வீட்டுக்குள் நுழைந்து இரும்புப்பெட்டிகள் வைக்கப் பட்டிருந்த பாதாளச் சுரங்கத்துக்கு அவர் சென்றார். அங்குச் சென்று பார்க்கவே, அங்கிருந்த ஏழு பெரிய இரும்புப் பெட்டிகளுள் ஒன்றுகூட காணப்படவில்லை. வீடு முழுமையும் நன்றாய்ப் பரிசோதனை செய்துபார்த்தார்,—சிறு துரும்பும் அகப்படவில்லை. வைத்தியர் ஆச்சரியமும் கவலையும் அடைந்தவராய் கற்பகச்சோலை

யைவிட்டு வெளியேவந்து ஆழ்ந்த சிந்தனையோடு மெதுவாக நடந்து மன்னார்குடி நோக்கிச் சென்றார். வழியில் சந்தித்த ஒருவரை விசாரித்ததில், பத்து தினங்களுக்கு முன்புதான் கும்பகோணம் குப்புவையர் கம்பெனியால் கற்பகச்சோலையிலுள்ள சாமான்களெல்லாம் ஏலம் போடப்பட்டன என்று தெரிய வந்தது. மறுபடியும் "கற்பகச்சோலை" வந்தும் பயனில்லாமற் போனதைப்பற்றி நரேந்திரர் ஏக்கமுற்றார். ஆனாலும், குப்புவையரைக்கண்டு விசாரித்தால் உண்மை புலப்படும் என்று அவர் நினைத்து உடனே கும்பகோணம் சென்று குப்புவையரைக்கண்டு வார்த்தையாடத் தொடங்கினார்.



## 20. அதனாற் சிறிது புலனாயிற்று



"ஐயா! தாங்கள்தான் கற்பகச் சோலையில் இருந்த சாமான்களை ஏலங்கூறி விற்பனை செய்தீர்களோ?" என்று நரேந்திரர்வியாபாரியாகிய குப்புசாமி ஐயரைக் கேட்டார்.

"ஆம், ஐயா! தாங்கள் எதற்காகக் கேட்கிறீர்கள்?" என்று குப்புவையர் ஆச்சரியத்தோடு கேட்டார்.

"விசேஷம் ஒன்றுமில்லை; எனக்கு ஒரு பெரிய இரும்புப்பெட்டி விலைக்கு வேண்டியிருக்கிறது. தாங்கள் ஏலங்கூறிய சாமான்களில் இரும்புப் பெட்டி ஒன்று இருந்தால் விலைக்குக் கிடைக்குமோ என்று

தெரிந்து கொள்வதற்காகக் கேட்டேனே தவிர வேறில்லை'' என நரேந்திரர் காரணங் கூறினர்.

''ஐயா! இரும்புப் பெட்டி கற்பகச்சோலையில் இருந்தன வென்பது உண்மையே. ஆனால், நான் சாமான்களை ஏலங்கூறுவதற்கு முன்னரே அச்சோலையின் சொந்தக்காரர் அப்பெட்டிகளை அப்புறப்படுத்தி எடுத்துக்கொண்டு போய்விட்டார் என்றும், அவைகள் மிகவும் பளுவாக இருந்தமையால் அவற்றைச் சுரங்கத்திலிருந்து எடுத்து வெளியே கொணர்ந்து சேர்ப்பதில் பெருங்கஷ்டம் நேரிட்டதென்றும் நான் கேள்விப்பட்டேன்'' எனக் குப்புவையர் விடை பகர்ந்தார்.

'சோலையின் சொந்தக்காரரா! அவர் யார் ஐயா?' என்று வைத்தியர் ஏதும் அறியாதாரைப்போல்வியப்புடன் வினவினர்.

''கற்பகச் சோலையின் சொந்தக்காரர், ஐயா, ஞானசேகரர் என்னும் பெயருடைய ஒரு பிரபல கனவான்'' என்று பதில் அளித்தார் குப்புவையர்.

''கற்பகச் சோலையிலிருந்த சாமான்களை விற்றுவிடும்படி அவர் தங்களிடத்தில் நேரில்வந்து தெரிவித்தாரா? அல்லது கடித மூலமாக அறிவித்தாரா?'' என்று நரேந்திரர் ஆழ்ந்த யோசனையோடு உசாவினர்.

'ஏன்? ஞானசேகரர் நேரிலேயே இரண்டு முறை இங்கே வந்திருக்கின்ருர். முதல் முறை வந்தபோது அவர் என்னையும் தம்முடன் அழைத்துக்கொண்டு கற்பகச்சோலைக்குச் சென்று அங்கிருந்த சாமான்களையெல்லாம்—இரும்புப் பெட்டிகளைத் தவிர—என்னி

டம் காட்டி, அவைகளை ஏலங்கூறி விற்றுவிடும்படி எனக்கு அதிகாரமும் கொடுத்து விட்டுப் போனார். பிறகு இரண்டாம் தடவை அவர் மாத்திரம் தனித்து வந்து இரும்புப் பெட்டிகளை அப்புறப்படுத்தினார் என்றும், யந்திரசாலையிலிருந்த யந்திரங்களைச் சின்னபின்னப்படுத்தி உடைத்துவிட்டார் என்றும், நான் கேள்விப்பட்டேன். அவர் ஏதோ ஒருவகையான நூதன யந்திரத்தைக் கண்டுபிடிக்கிறார் என்றும் தெரிகிறது" எனக் குப்புவையர் மறுமொழி பகர்ந்தார்.

குப்புவையர் சொன்ன இந்த வார்த்தைகள் நரேந்திரருக்கு வரைகடந்த வியப்பினை விளைவித்தது. ஏனெனில், கற்பகச் சோலையில் மறுபடியும் அடியெடுத்துவைக்கப் பயந்தவராய் ஞானசேகரர் வெளியூர்களில் மறைந்து வசிக்கிறார் என்பதை நன்றாய் அவர் அறிந்திருந்தார். இதுவேயுமன்றி, மன்னார்குடிப் பக்கத்தில் தலைநீட்டுவதற்குத் தமக்குப் பயமாயிருக்கிறதென்று ஞானசேகரரே ஒருமுறை நரேந்திரரிடம் கூறியிருக்கின்றார். வைத்தியர் அறிந்தமட்டில் உண்மை இவ்வித மிருக்க, ஞானசேகரர் இரண்டுமுறை கற்பகச் சோலைக்கு வந்துதிரும்பினார் என்று குப்புவையர் சொன்னால் அவருக்கு ஆச்சரிய முண்டாகாதா?

"இருக்கட்டும்; அந்தப் பெட்டிகளை அவர் விற்பனை செய்வதாக உத்தேசித்திருக்கின்றாரோ?" என்று சந்தேகத்துடன் நரேந்திரர் குப்புவையரைக் கேட்டார்.

"அவ்விஷயமாக நிச்சயமாய் ஏதும் சொல்ல என்னால் முடியாது. ஞானசேகரர் தாமே அவைகளைச்

சொந்த உபயோகத்துக்காக வைத்துக்கொள்ளப் போவதாய் என்னிடம் சொன்னுர். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்'' என்று குப்புவையர் கூறினுர்.

“இரும்புப் பெட்டிகளை ஞானசேகரர் எந்த ஊருக்குக் கொண்டுபோனுர் என்ருவது தங்களுக்குத் தெரியுமா?'' என்று நரேந்திரர் கேட்டார்.

“இரண்டு பெரிய ரயில்வே ‘ட்ரக்’ வண்டிகளில் அவைகளை ஏற்றினுர் என்று மாத்திரம் நான் கேள்விப்பட்டேன். ஆனுல், அவைகளை எந்த ஊருக்கு அனுப்பினுர் என்று எனக்குத் தெரியாது, நீடாமங்கலம் ரயில்வே ஸ்டேஷனில் விசாரித்தால் எந்த ஊருக்கு அவைகள் அனுப்பப்பட்டன என்று ஒரு கால் தெரியலாம்'' என்று குப்புவையர் சொன்னுர்.

பெரிய இரும்புப் பெட்டி ஒன்றில் ஒரு பெண் மணியின் இறந்த சரீரம் ஒளித்து வைக்கப்பட்டிருக்கிறதென்பதை நரேந்திரர் உறுதியாய் நம்பினுராதலால், எந்தவிதத்திலும் அந்த இரும்புப்பெட்டிகளைக் கண்டுபிடிக்க வேண்டுமென்னும் ஆசை அவருக்கு அதிகமாக ஏற்பட்டது. ஆகவே நீடாமங்கலம் சென்று ரயில்வே அதிகாரிகளை விசாரிக்கலாமென்னும் உத்தேசத்துடன் அவர் அங்கே சென்று ‘ஸ்டேஷன்மாஸ்டரை’ விசாரித்தார்.

நரேந்திரர் கேட்ட கேள்விக்குப் பதிலாக “ஆம்; சுமார் இரண்டு வாரங்கட்கு முன்னர் ஏழெட்டு இரும்புப் பெட்டிகள் இவ்விடமிருந்து புதுச்சேரிக்கு அனுப்பப்பட்டன'' என்று ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னுர்.

"அங்கே யார் பேருக்கு அவைகள் அனுப்பப் பட்டன?" என்று நரேந்திரர் கேட்டார்.

"புதுச்சேரி பெரியசாலையில் வசிக்கும் சிவகுரு என்பவர் பேருக்கு அவைகள் அனுப்பப்பட்டன" என்று ஸ்டேஷன்மாஸ்டர் பதில் உரைத்தார்.

"ஐயா, உங்களுக்கு ஞானசேகரரைத் தெரியுமோ?" என்று வைத்தியர் கேட்டார்.

"ஆஹா! தெரியாமலென்ன? அவரை நான் நன்ருக அறிவேன். மிகச் சாந்தமாயும் அன்பாயும் வார்த்தையாடும் இயல்புடையவர். ஆனுல் ஒருவகையான பயித்தியம் பிடித்தவரைப்போல் சிற்சில சமயங்களில் தோன்றுவார்" என்ருர் ஸ்டேஷன்மாஸ்டர்.

"சமீபத்தில் அவர் இப்பக்கத்துக்கு — அதாவது நீடாமங்கலம் மன்னார்குடி, திருமுகக்கோட்டை, பஞ்ஞாநாடு முதலான இடங்களுக்கு—வந்தாரோ?" என்று நரேந்திரர் கேட்டார்.

"இல்லை; அவர் வரவில்லை—கற்பகச் சோலையில் வெடிவிபத்துநேர்ந்ததற்குப் பிறகு!" என்று ஸ்டேஷன்மாஸ்டர் கூறினர்.

"வெடிவிப்பது உண்டாகக்காரணம் என்ன?" என்று நரேந்திரர் இதுவரையில் ஒன்றுமே அறியாதார் போன்று கேட்டார்.

"நூதனமாக அவர் ஒரு யந்திரம் கண்டுபிடிப்பதில் முனைந்திருந்தார் என்றும் அம்முயற்சி கைகூடிய பின்னர் அம்முறையைப் பிறர் கற்றுக்கொள்ளாதபடி அவர் தாமே வெடிவைத்து யந்திரங்களையும் யந்திரசாலையையும் சின்ன பின்னப்படுத்திவிட்டார் என்றும்

ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகிறுர்கள்'' என்று ஸ்டேஷன்மாஸ்டர் விடை பகர்ந்தார்.

"ஐயா, அது இருக்கட்டும்; கற்பகச் சோலையிலிருந்த சாமான்களை ஞானசேகரர் நேரிலிருந்து ஏலங் கூறி விற்ருரா? அல்லது ஏலக்காரனை மாத்திரம் அனுப்பி விற்கச்சொன்னுரா?'' என்று நரேந்திரர் மிக நயமாய்க் கேட்டார்.

"கும்பகோணம் குப்புவையருடன் அன்று ஒரு மனிதன் கற்பகச் சோலைக்கு வந்து சாமான்களை விற்பனை செய்தார். அவர் நெட்டையாயும் சரீரம் சிறிது பருத்தவராயு மிருந்தார்; ஆனல் அவர் ஞானசேகரர் அல்லர். இரும்புப் பெட்டிகளை இந்த ஸ்டேஷனுக்குக் கொண்டுவந்து புதுச்சேரி சிவகுரு என்னும் பெயருடையவர்க்கு அனுப்பியவரும் அவரே!'' என்று நீடாமங்கலம் ஸ்டேஷன் மாஸ்டர் பதில் சொன்னுர்.

"என்ன! தாங்கள் கூறுவது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தை விளைவிக்கிறதே! ஞானசேகரர் இங்கு வரவில்லை என்று உங்களுக்கு நிச்சயமாய்த் தெரியுமா?'' என்று நரேந்திரர் வியப்புடன் உசாவினுர்.

"ஐயா, எனக்குத் தெரிந்தமட்டில் அவர் இவ்விடம் வரவில்லை. அவர் மாத்திரம் இந்தப் பக்கம் வந்திருப்பாரேயானுல் ஜனங்கள் எவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்வார்கள்'' என்று ஸ்டேஷன் மாஸ்டர் கூறினுர்.

இப்போது நரேந்திரர் மூளை நாலாபக்கத்திலும், பற்பல எண்ணங்களால் அலைப்புண்டு, கலங்கலாயிற்று. அவருடைய யோசனை பலபல வழிகளில் சென்றது. ஞானசேகரர் என்பவர் தான்தான் என்று

பொய்கூறி ஒரு மனிதன் பொய்மையாக நடித்து கற்பகச் சோலையில் இருந்த சாமான்களை விற்றுவிடும்படி கும்பகோணம் குப்புவையருக்கு உத்தரவு கொடுத்திருக்கிறான் என்று நரேந்திரர், ஸ்டேஷன் மாஸ்டர் சொன்ன சங்கதிகளிலிருந்து, ஒருவாறு அறிந்து கொண்டார். அவ்விதம் ஒருமனிதன் செய்திருப்பானேயானால், அவனே இரும்புப் பெட்டிகளையும் தன் வசப்படுத்திக்கொண்டு ஒரு பெரிய பெட்டியிலிருந்த இறந்த சரீரத்தையும் இதுவரையில் அப்புறப்படுத்தியிருப்பான் என்று நரேந்திரர் சந்தேகித்தார். விற்பனை செய்யப்பட்ட சாமான்களுக்கு உரிய பணத்தை, எந்த மனிதன் ஞானசேகரர் என்று பொய்மையாக நடித்துக் குப்புவையரிடம் அவைகளை விற்றுவிடும்படி சொன்னானோ, அந்த மனிதனிடம் குப்புவையர் சேர்ப்பித்து விட்டாரா இல்லையா என்று அறிந்து கொள்ளவேண்டுவது அவசியமென நரேந்திரருக்குப் பட்டது. ஏனெனில், குப்புவையருடன் கற்பகச் சோலைக்குவந்து சாமான்களை விற்கும்படி சொன்ன மனிதனுடைய அங்க அடையாளத்தைப்பற்றி ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னது, வந்தவர் ஞானசேகரர் அல்லர் என்பதை இனிது விளக்கினமையால், ஆள் மாறுட்டமாக ஏதோ சம்பவித்திருக்கிற தென்பதை நரேந்திரர் எளிதில் தெரிந்து கொண்டார். வைத்தியர் உடனே கும்பகோணம் சென்று குப்புவையரைக்கண்டு உண்மையான ஞானசேகரர் சாமான்களை விற்கச் சொல்லவில்லையென்றும், அவர் பேர் மாறுட்டத்தினல் ஏமாற்றப்பட்டாரென்றும் கூறினர். இதைக் கேட்டதும் குப்புவையருக்குப் பெருந் திகில் உண்டாகி விட்டது. சாமான்விற்ற பணத்தைப்

பொய்யான ஞானசேகரருக்கு அனுப்பிவிட்டதாய்க் குப்புவையர் சொல்லி வருத்தப்பட்டார். இதனுல் தனக்கு என்ன அபாயம் விளையுமோவென்று குப்புவையர் அஞ்சினுர். நரேந்திரர் அவருக்கு வேண்டிய தைரியங் கூறி, புதுச்சேரி சிவகுரு என்பவரைப்பற்றி நன்ருய் விசாரித்துக்கொண்டு உடனே புறப்பட்டு புதுச்சேரிக்குச் சென்ருர். எவ்விதமாவது இறந்த பெண்ணின் சரீரம் வைத்துப் பூட்டப்பட்டிருக்கும் இரும்புப் பெட்டியைக் கண்டுபிடிக்க வேண்டுமென்னும் அவா நரேந்திரருக்கு வரைகடந்து உண்டாயது. புதுச்சேரிக்குச் சென்று பெரியசாலையில் சிவகுரு என்பவரைப்பற்றி விசாரிக்கவே, அவர் ஒரு பெரிய இரும்பு வியாபாரி என்று தெரிந்தது. வைத்தியர் சிவகுருவின் இரும்புக் கிடங்குக்குச் சென்று அவரைச் சந்தித்தார்.

"ஐயா, தாங்கள் யார்? என்ன வேண்டும்" என்று சிவகுரு என்பவர் நரேந்திரரைக் கேட்டார்.

"எனக்கு ஒரு இரும்புப்பெட்டி பழைய விலையில் நயமாக வேண்டியிருக்கிறது. அதிகமான பொருள் கொடுத்துப் புதுவிலையில் வாங்கக்கூடிய சக்தி எனக்கில்லை. அதற்காகவே தங்களிடம் வந்தேன்" என்று நரேந்திரர் சொன்னுர்.

"ஓ! என்னிடத்தில் சில இரும்புப் பெட்டிகள் இருக்கின்றன. ஆனுல் அவைகளுக்குச் சாவி இல்லை. எல்லாம் பூட்டியபடியே இருக்கின்றன. இஷ்டமிருந்தால் அவைகளைத் தாங்கள் பார்த்து எது வேண்டுமோ அதை எடுத்துக்கொள்ளலாம்" என்று சிவகுரு கூறி, நரேந்திரரை அழைத்துக் கொண்டுபோய்

ஓர் அறையில் வரிசையாக வைக்கப்பட்டிருந்த இரும்புப் பெட்டிகளைக் காட்டினர்.

அவைகளைப் பார்த்தவுடனேயே, கற்பகச்சோலையில் பாதாளச் சுரங்கத்தில் இருந்த பெட்டிகள் அவை என்பதை நரேந்திரர் அறிந்துகொண்டார். அவர் ஒவ்வொரு பெட்டியையும் கூர்ந்து கவனித்தார். அவ்விதம் கவனித்து வந்தபோது எந்த இரும்புப் பெட்டியில் ஒரு பெண்மணியின் இறந்த சரீரம் அடக்கம் செய்யப்பட்டிருந்ததோ அந்த இரும்புப் பெட்டிமட்டும் அங்கு இல்லை என்பதை வைத்தியர் உணர்ந்தார். அப்போது அவருக்கு உண்டான ஆச்சரியத்துக்கு அளவில்லை. இவ்வளவுதூரம் பிரயாசைப்பட்டும் அந்தப் பெட்டி அங்கு இல்லாமற்போனதை அறிந்தவுடன் நரேந்திரருக்கு மிகுந்த வருத்தமுண்டாயிற்று.

"ஐயா, இங்கே இருக்கும் பெட்டிகளைவிட இன்னும் சிறிது பெரிதாயுள்ள பெட்டி ஒன்று வேண்டியிருக்கிறது" என்று நரேந்திரர் சிறிது நேரங்கழித்துக் கூறினர்.

"ஐயா, என்ன செய்யலாம்! தற்சமயம் என்னிடத்தில் இவைகளைவிடப் பெரிதான பெட்டி இல்லை. சிற்சில சமயங்களில் பெரிய பெட்டிகளும் பழைய விலைக்கு என்னிடம் கிடைக்கும். உண்மையைக் கூறுமிடத்து ஒரு வாரத்திற்கு முன்புதான் ஒரு பெரிய இரும்புப் பெட்டியை விலைக்கு விற்றேன். அந்தப் பெட்டியையும், இவைகளுடன் சேர்த்தே நான் வாங்கினேன். இவைகளைப் போலவே அதுவும் பூட்டப்பட்டிருந்தது. இவைகளைப் போலவே அதற்கும் சாவி கிடையாது. பெட்டிகளின் சொந்தக்காரர் சாவிகளை எங்கேயோ

ஓரிடத்தில் மறந்துவைத்து இழந்து விட்டாராம். பெட்டிகளை வேறு சாவிகளைக்கொண்டும் திறக்க முடியாது; உடைக்கவும் முடியாது. அவ்விதம் இருந்தும் பெரிய இரும்புப் பெட்டியை ஒரு மனிதன் ஒரு வாரத்திற்கு முன்பு இங்கு வந்து நல்லவிலை கொடுத்து வாங்கிக் கொண்டுபோய் விட்டார்'' என்று சிவகுரு கூறினர்.

இவ்விஷயத்தை இன்னும் தீர விசாரிக்க வேண்டும் என்னும உட்கருத்துடன் "அவர் யார் ஐயா! பூட்டப்பட்டிருக்கும் பெட்டியை யாதொரு பிரயோசனமும் இன்றி வாங்கினவர்! அவருக்குப் பயித்தியமா, அல்லது பெட்டிக்குள் பெரும் புதையல் ஏதாவது இருக்குமென்று நினைத்து வாங்கினரோ?'' என்று நரேந்திரர் மிக விநயமாயும், ஏதும் அறியாதார் போலவும் சிரித்துக்கொண்டே கேட்டார்.

வைத்தியரின் உட்கருத்தை அறியாத சிவகுரு "ஐயா, அந்த மனிதன் பயித்தியம் பிடித்தவராகவே இருக்கவேண்டும், ஏனெனில், பெட்டியின் சொந்தக்காரர் அதற்குள் யாதொரு வஸ்துவும் கிடையாது என்று உறுதிகூறி என்னிடம் சொன்னதை நான் அவருக்கு வற்புறுத்தி உரைத்தும் என் பேச்சைக் கேளாமல் அவர் அதனைப் பெரும்பொருள் கொடுத்து வாங்கிச் சென்றார்'' என்று பதில் தந்தார்.

"அவர் பெயர் என்ன? அவர் எப்படிப்பட்ட மனிதர்?'' என்று நரேந்திரர் உசாவினர்.

"அவர் தம் பெயரை என்னிடம் சொல்லவில்லை. பணத்தைக் கொடுத்துவிட்டுப் பெட்டியை எடுத்துச் சென்றார். அவர் நெட்டையாயும், சரீரம் சிறிது பருத்தவராயும், பார்வைக்கு அழகிய தோற்றமுடைய

வராயுமிருந்தார். அவர் காரைக்காலில் வசிப்பவர் என்று மாத்திரம் உத்தேசமாய்த் தெரிகிறது" என்று இரும்பு வியாபாரியாகிய சிவகுரு பதில் கூறினர்.

குப்புவையர் கூடவந்து கற்பகச்சோலையிலிருந்த சாமான்களை அவருக்குக் காட்டி விற்கும்படி உத்தரவு கொடுத்தவரைப் பற்றிக் குப்புவையர் சொன்ன அங்க அடையாளங்களும், நீடாமங்கலம் ரயில்வே ஸ்டேஷனில் இரும்புப் பெட்டிகளைக் கொண்டுவந்து அவைகளை 'ட்ரக்' வண்டியில் ஏற்றிப் புதுச்சேரிக்கு அனுப்பிய மனிதனைக் குறித்து நீடாமங்கலம் ஸ்டேஷன் மாஸ்டர் சொன்ன அங்க அடையாளங்களும், இப்போது தன்னிடம் ஒரு இரும்புப்பெட்டியை விலைக்கு வாங்கிப்போன மனிதனைப் பற்றி சிவகுரு கூறிய அங்க அடையாளங்களும் ஒரேவிதமாக இருந்தமையால் ஞானசேகரர் என்று பொய்யாக நடித்துவரும் மனிதனே இந்த மூன்று விஷயங்களிலும் கலந்திருக்கிறன் என்பதை நரேந்திரர் எளிதில் அறிந்துகொண்டார். பெட்டியைப் பலர் கையிலும் மாறும்படி செய்வதற்காகவே அந்த மனிதன் இவ்விதம் யுக்திசெய்து நடித்து வருகிறுர் என்னும் உண்மையும் நரேந்திரருக்குப் புலனாய் விட்டது.

"அந்த மனிதன் காரைக்காலில் வசிப்பவர் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று நரேந்திரர், சிவகுரு என்பவரைக் கேட்டார்.

"அவர் பெட்டியை ரயில்மார்க்கமாக, வாங்கின அன்று தினமே, காரைக்காலுக்கு அனுப்பினர் என்று புதுச்சேரியிலுள்ள சில ரயில்வே அதிகாரிகள் மூலமாய்க் கேள்விப்பட்டேன். அதைக்கொண்டு நான்

உத்தேசமாகச் சொல்லுகிறேனே தவிர வேறில்லை'' என்று சிவகுரு மறுமொழி பகர்ந்தார்:

இனி, சிவகுரு மூலமாய் அறிந்து கொள்ளக் கூடிய விஷயம் ஏதுமில்லை என்பதை இனிதறிந்த நரேந்திரர் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு புதுச் சேரியில் அன்றே இரயில் ஏறி மாலை ஐந்துமணி சுமாருக்குக் காரைக்கால் வந்து சேர்ந்தார். காரைக்கால் வந்ததும், இரயிலிலிருந்து சாமான்கள் இறக்குமதி செய்யப்படும் கொட்டகைக்குச் சென்று, அங்குள்ள உத்தியோகஸ்தர்களை "ஒரு இரும்புப்பெட்டி ஒரு வாரத்திற்கு முன்பு புதுச்சேரியிலிருந்து காரைக்காலுக்கு ரயில்மார்க்கமாகக் கொண்டுவரப்பட்டதா?'' என்று நரேந்திரர் விசாரித்தார். அப்படி விசாரித்ததில் ஒரு பெட்டி கொண்டுவரப்பட்டதென்றும், கடைத்தெருவிலுள்ள கணபதியாபிள்ளை கப்பற் கம்பெனிக்கு அது அப்போதே கொண்டுபோகப்பட்டதென்றும் நரேந்திரருக்குத் தெரிய வந்தது. உடனே அவர் கணபதியாபிள்ளை வீட்டை விசாரித்துக் கொண்டு அங்குபோய்ச் சேர்ந்தார். இரவு ஏழுமணி இருக்கும்.

அங்குசென்று விசாரித்ததில் கணபதியாபிள்ளை என்பவர் வெளியே சென்றிருப்பதாகத் தெரிந்தது. ஒரு பெரியவர் மாத்திரம் நரேந்திரர் சென்றபோது கணபதியாபிள்ளை வீட்டுத் திண்ணையில் தனிமையாக உட்கார்ந்திருந்தார். அவரைக்கொண்டு கணபதியாபிள்ளையின் இயல்பை அறிந்து கொள்ளலாமென்னும் உத்தேசத்துடன் வைத்தியர் அவரோடு சம்பாஷிக்கத் தொடங்கினார்.

"ஐயா, பெரியவரே! கணபதியா பிள்ளையைத் தங்களுக்குத் தெரியுமோ?" என்று நரேந்திரர் கேட்டார்.

"ஓ! தெரியாமலென்ன! அவர் பெரிய கப்பல்கள் பலவைத்து ஓட்டுபவராயிற்றே! இந்த ஊரில் அவரைத் தெரியாதவர்கள் ஒருவருமே இருக்க மாட்டார்கள். அவருக்கும் அவருடைய பாகஸ்தர்களுக்கும் கப்பல் வரும்படி விஷயத்தில் ஏதோ சச்சரவு நேரிட்டிருக்கிறதுபோல் தெரிகிறது. அதற்காக அவர் ஒரு சமயம் வக்கீல் வீட்டுக்குப் போயிருக்கலாம். சற்று நேரம் இருங்கள்; ஒன்பது மணிக்கு அவசியம் வந்துவிடுவார். அவருடைய சகோதரர் மாணிக்கம் பிள்ளை "தனலட்சுமி"யின் சொந்தக்காரர். அவரும் சிறந்த செல்வாக்குடையவர்" என்று அந்த வயோதிகர் சொன்னார்.

"நான் மாணிக்கம்பிள்ளையைத் தனித்து ஒரு முக்கியமான விஷயத்தைக்குறித்துப் பார்க்கவேண்டும்" என்று நரேந்திரர் சொல்லிவிட்டு, ஏதோ ஆழ்ந்த யோசனையில் அழுந்தி யிருப்பவர்போல் மௌனமாயிருந்தார்.

"தனலட்சுமி" என்றால் என்ன என்னும் சந்தேகம் அவர் மனத்தில் ஜனித்ததால், அவர் அவ்விதம் ஆழ்ந்து சிந்திக்கலானாரே தவிர வேறில்லை. புதுச்சேரியில் சிவகுரு சொன்ன சங்கதியினால் உண்மை நரேந்திரருக்கு விளங்காவிடினும், காரைக்காலில் ரயில்வே சாமான் கொட்டகையிலுள்ள அதிகாரிகள் சொன்னதனால் சிறிது புலனாயிற்று.



# 21. "தனலட்சுமி" இரகசியம் வெளியாயிற்று



நரேந்திரரும் அந்தவயோதிகரும் சிறிதுநேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். ஒன்பது மணி வரையில் காத்திருந்தும் "தனலட்சுமி" யின் சொந்தக்காரர் வரவில்லை. ஆனால், கருமை நிறமும், ஸ்தூலசரீரமும் கொண்டு விளங்கிய ஒருவன் அங்கே வந்தான். தோணியும் படகும் செலுத்தும் வத்தற்காரனைப்போல் அவன் தோன்றினனென்பதை யாரும் எளிதில் அறிந்துகொள்ளுவார்கள். அம்மனிதன் மாணிக்கம் பிள்ளையிடம் வேலை பார்ப்பவன் என்று, அந்தவயோதிகர் சொன்னதைக் கொண்டு, நரேந்திரர் தெரிந்து கொண்டார். உடனே நம் கதாநாயகர் அந்த வத்தல் காரனோடு சம்பாஷிக்கத் தொடங்கினார்.

"அப்பா, உன் பெயர் என்ன? நீ என்ன வேலை பார்க்கின்றாய்?" என்று நரேந்திரர் அவனைக் கேட்டார்.

"ஐயா, என் பெயர் முனியாண்டி. நான் கப்பலில் வேலை பார்க்கிறேன். என்னுடைய எஜமானன் மாணிக்கம் பிள்ளையாவர்" என்று அந்த மனிதன் பதில் சொன்னான்.

"இருக்கட்டும்; 'தனலட்சுமி' யை உனக்குத் தெரியுமோ?" என்று வைத்தியர் வினவினார்.

"தெரியாமலென்ன? நான் அந்தக் கப்பலில் நெடுநாளாக வேலைபார்த்து வந்தேன்" என்று முனியாண்டி பதில் புகன்றான்.

அவன் சொன்ன இந்த மறுமொழியிலிருந்து "தன லட்சுமி" என்பது ஒரு கப்பலின் பெயர் என்பதை எளிதில் நரேந்திரர் அறிந்து கொண்டார்.

"இப்போதும், 'தனலட்சுமி' கப்பலிற்றான் வேலை பார்க்கின்றாயோ?" என்று வைத்தியர் உசாவினார்.

"நேற்றுவரையில் நான், ஐயா, அந்தக் கப்பலில் வேலை பார்த்து வந்தேன். இன்றுதான் அந்த வேலையை நான் விட்டு நீங்கினேன்" என்று முனி யாண்டி கூறினான்.

"நீ ஏன் வேலையை விட்டு விட்டாய்?" என்று வைத்தியர் மிகுந்த அனுதாப முடையவர்போல் வினவினார்.

"ஐயா, எனக்கும் என்னுடைய எஜமானன் மாணிக்கம் பிள்ளைக்கும் மனத்தாங்கல் நேரிட்டு விட்டது. அதனால் நான் வேலையைவிட்டு நீங்கினேன். என்போன்ற கூலிக்காரர்களுக்கு எப்போதும், எங்கே போனாலும் வேலைகிடைக்கும். 'இந்த மடம் இல்லாவிட்டால் இன்னொரு சந்தை மடம்' என்னும் பழமொழி தங்களுக்குத் தெரியாததன்றே?" என்று முனியாண்டி பதில் உரைத்தான்.

"நல்லது; முனியாண்டி, உன்னால் எனக்கு ஒரு காரியம் ஆகவேண்டும். இவ்விஷயத்தில் நீ சிறிது உதவி செய்வாயேயானால் அதுவே நீ எனக்குச் செய்த பேருபகாரமாகும்" என்று நரேந்திரர் அன்பு தோன்ற உரைத்தார்.

"மாணிக்கம் பிள்ளையைப் பற்றியா?" என்று அந்த வத்தல்காரன் அருவருப்போடு கேட்டான்.

முனியாண்டி அவ்விதம் கேட்ட மாதிரியிலிருந்து அவன் உளவறிந்து செல்ல வந்திருக்கும் 'கஸ்டமாபீஸ்' உத்தியோகஸ்தனெனத் தன்னை நினைத்து ஏதும் சொல்ல அஞ்சுகிறான் என்பதை நரேந்திரர் இலேசிலே உணர்ந்தார்.

"அப்பா, நான் 'கஸ்டமாபீஸ்' உத்தியோகஸ்தன் அல்லன். உளவறிந்துபோய் மேலதிகாரிகளிடம் சொல்லுவதற்காக நான் வந்திருக்கிறேன் என்று நீ நினைக்கிறாய் போலும்! அவ்விதமாக எண்ணி ஏங்காதே!" என்று நரேந்திரர் சாவதானமாய்ச் சொன்னார்.

"ஐயா, தாங்கள் யாராயிருப்பினும் சரியே! என்னை நானே ஆபத்துக்குள் அகப்படும்படி செய்து கொள்ளும் விதமான எந்த விஷயத்தையும் நான் சொல்லமாட்டேன்" என்று முனியாண்டி மறுமொழி சிறிது அச்சக் குறிப்புடன் கூறினான்.

"நான் கேட்கும் சமாசாரம் உன்னை எவ்வித மான ஆபத்திலும் அகப்படுத்தாது. சில தினங்களுக்கு முன்னர் புதுச்சேரியிலிருந்து மாணிக்கம் பிள்ளைக்கு ஒரு இரும்புப் பெட்டி அனுப்பப்பட்டது. அதைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா? — அது இன்னமும் உன் எஜமானிடம் இருக்கின்றதா? அல்லது அது இருக்குமிடத்தை எனக்குச் சொல்லக் கூடுமோ?" என்று நரேந்திரர் வினவினார்.

முனியாண்டி ஒருவகையான மிரண்ட பார்வையுடன் நரேந்திரரைப் பார்த்தான்.

"இல்லை — இல்லை — எனக்கு — ஒன்றும் — அதைக் குறித்துத் — தெரியாது!" என்று முனியாண்டி விட்டு விட்டுப் பேசினான்.

அவன் பேசிய மாதிரியிலிருந்தே அவனுக்கு இரும்புப் பெட்டியைப் பற்றிய எல்லா விஷயங்களும் தெரியுமென்பதையும், ஆனாலும் பயத்தினால் அவன் உண்மையைக் கூறுதற்குப் பயப்படுகிறான் என்பதை யும் நரேந்திரர் அறிந்து கொண்டார்.

"அப்பா, இருக்கட்டும்; அந்த இரும்புப் பெட்டி மாணிக்கம்பிள்ளை வீட்டில் இப்போது இருக்கிறதா அல்லது இல்லையா என்பதையாவது அறிந்து சொல்ல உன்னால் முடியுமன்றோ?" என்று நரேந்திரர் நய மாய்க் கேட்டார்.

"இல்லை; அறிந்து சொல்ல என்னால் முடியாது!" என்று முனியாண்டி மறுத்துரைத்தான்.

"அப்பா, இங்கே வா!" என்று முனியாண் டியை விளித்து, நரேந்திரர் அருகிலழைத்துத் தன் பார்வையைக் கூர்மையோடு அவன்மீது செலுத்தி, "உண்மையிலேயே அந்த இரும்புப் பெட்டியைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாதா? பயப்படாதே! உண் மையைச் சொல்! நீ எப்போது வேலையிலிருந்து நீங்கி னாய்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"நேற்று நீங்கினேன்" என்றான் முனியாண்டி.

"அப்படியானால் நீ ஏன் உண்மையைக் கூற மறுக் கின்றாய்? நீ அந்த இரும்புப் பெட்டியைப் பார்த் திருக்கின்றாய் என்பதை உன் முகக்குறிப்பே இனிது விளக்குகின்றது! தயைசெய்து அது எங்கே இருக்கிற தென்று எனக்குச் சொல்லக்கூடாதா?" என்று வைத் தியர் நயமாய்க் கேட்டார்.

"இல்லை, ஐயா, அது எங்கே இருக்கிறதென்று எனக்குத் தெரியாது!" என்று உடனே அந்த வத்தல் காரன் பதில் கூறினான்.

"ஏன் தெரியாது? தெரியாமற்போவதற்குக் காரணம் என்ன?" என்று நரேந்திரர் வினவினார்.

"ஏனெனில், அந்தப் பெட்டி, சமுத்திரத்தின் மத்தியில் கிடக்கிறது! எந்த இடத்தில் அது கிடக்கிறதென்று குறிப்பாய்ச் சொல்லுவது அசாத்தியம்; அதனை இனிக் கண்டு பிடிப்பதும் சாத்தியமன்று" என்று முனியாண்டி சொன்னான்.

"என்ன! கடலுக்குள் கிடக்கிறதா!" என்று நரேந்திரர் திடுக்கிட்டு ஆச்சரியத்தோடு கேட்டார். கொலைக் குற்றத்தை இனிக் கண்டுபிடிக்க முடியாதபடி அந்த இரும்புப் பெட்டியை சமுத்திரத்தில் போட்டு விட்டார்கள் என்ற செய்தி நரேந்திரருக்கு இதுவரையிலிருந்த சிறிது நம்பிக்கையையும் அடியோடு ஒழித்தது.

"என்னைப்பிடித்து, ஐயா, ஹிம்சை செய்வதில்லை என்று நீர் வாக்குத்தத்தம் செய்வீரேயானால் உண்மையை — ஆம், உண்மை விளங்கும்படி நான் நடந்த சங்கதியைச் சொல்லுகிறேன். தவிர, நான் சொல்லுவதை அதிரகசியமாய்க் கொள்ளவேண்டும். இரும்புப் பெட்டி சாகரத்திடையில் மூழ்கிக் கிடக்கின்றது என்பது மெய்யே" என்று முனியாண்டி சொன்னான்.

"அப்பா, நீ விரும்பியபடியே நான் உறுதி கூறுகின்றேன். உன்னை நான் எவ்வித ஆபத்துள்ளும் அகப்படுத்தேன். இரகசியத்தையும் வெளியிடேன்" என்று நரேந்திரர் சொல்லி, அவன் கேட்டுக்கொண்டபடியே சத்தியமுஞ் செய்துகொடுத்தார்.

அவ்விதம் நரேந்திரர் சத்தியம் செய்தபின்னர் முனியாண்டி பின் வருமாறு தனக்குத் தெரிந்த விஷயங்களை விளங்க விளம்பினான்.

"ஐயாவே! நான் சொல்லுவதைக் கவனமாய்க் கேளுங்கள். இரண்டு மூன்று தினங்களுக்கு முன்னர் ஓர் நாள் இரவு மாணிக்கம் பிள்ளை கப்பலில் ஏறிச்செல்ல விரும்பினார். அவ்விதம் அவர் விரும்பியது எனக்கு ஆச்சரியமாகவே தோன்றிற்று. ஏனெனில், அதற்கு முன்பு, அவர் பெரிய கப்பற்காரராக இருந்தபோதிலும், கப்பலில் ஏறிச்சென்றதாவது, செல்ல விரும்பியதாவது கிடையாது. அன்றிரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு அவர் தனித்து என்னிடம் வந்து, தூங்கிய என்னை எழுப்பி, "தனலட்சுமி" யில் பிரயாணம் செய்யவேண்டியிருக்கிறதென்றும், தன் வீட்டிலிருக்கும் ஒரு சாமானை அப் புறப்படுத்தவேண்டியிருக்கிறதென்றும் சொன்னார். அவர் சொன்ன விஷயத்தின் கருத்தை நான் உடனே அறிந்துகொண்டேன் — ஏனெனில், போலீஸாரின் கவனத்தைக் கவரக்கூடிய சாமான்களை நாங்கள் இரவில் திருட்டுத்தனமாய்க் கப்பலில் ஏற்றி, அவர்கள் கையில் அவைகள் அகப்படாதிருக்கவேண்டி, நடுச்சமுத்திரத்தில் கொண்டுபோய்ப் போடுவது சர்வசாதாரணமான வழக்கம். மன்னார் குடிப் பக்கத்திலிருக்கும் சிலருடனும், சென்னையில் வசிக்கும் சிலருடனும் மாணிக்கம்பிள்ளை கடிதப் போக்கு வரவுவைத்துக்கொண்டிருக்கிறார். அவர்கள் சில சாமான்களை இரயில்மார்க்கமாக மாணிக்கம்பிள்ளைக்கு அனுப்புவார்கள். அவர் அவைகளைக் கப்பலில் ஏற்றி மத்திய சமுத்திரத்தில் இரவில் கொண்டுபோய்ப்

போடும்படி எங்களுக்குக் கட்டளையிடுவார். இப்படி அடிக்கடி நிகழுவதுண்டு.

"அன்றிரவு மாணிக்கம்பிள்ளை என்னிடம்வந்து சங்கதியைச் சொல்லிக் கூப்பிடவே, நான் என்னுடைய சிநேகிதனும், என்னோடு சேர்ந்து வேலை பார்ப்பவனுமான பேயாண்டி என்பவனையும் — நாங்கள் இருவருமே இப்படிப்பட்ட இரகசிய விஷயங்களில் வேலை செய்வோம்—கூட அழைத்துக்கொண்டு அவர் வீட்டுக்குப் போனேன். வீட்டில் ஒரு பெரிய இரும்புப் பெட்டி பூட்டப்பட்டபடியே — அதனுள் விலையேறப்பெற்ற சில சாமான்கள் இருந்தாலுமிருக்கலாம்; ஆனாலும் நிச்சயமாக ஒன்றும் சொல்லமுடியாது — இருந்ததைக் கண்டேன். வீட்டுவாயிலில் ஒருபெரிய பாரவண்டி நின்றுகொண்டிருந்தது—இந்த வண்டியைத்தான் எங்கள் எஜமானன் வழக்கமாக இரவுக்காலங்களில் சாமான்கள் ஏற்றுவதற்கு வரவழைப்பார்! மிக்க பிரயாசையுடன் நாங்கள் இருவரும் அந்த இரும்புப்பெட்டியைத் தூக்கி வண்டியில் வைத்தோம். வண்டி ஜனநடமாட்டமில்லாத ரஸ்தாக்களின் வழியாய்ச் சென்று கடைசியில் கடற்கரை சேர்ந்தது. அதன் பிறகு வண்டியிலிருந்த பெட்டியை இறக்கி "தனலட்சுமி" யில் கொண்டுபோய்ச் சேர்த்தோம். இதற்காக நாங்கள் எடுத்துக்கொண்ட கஷ்டம் கடவுளுக்குத்தான் தெரியும், ஒருவரும் சந்தேகங்கொள்ள முடியாதவிதமாய்க் கப்பலைச் செலுத்திப்போய் அந்தப் பெட்டியை நடு சமுத்திரத்தில் தள்ளிவிட வேண்டுமென்று எங்கள் எஜமானன் எங்களுக்குக் கண்டிப்பான உத்தரவு கொடுத்துவிட்டு வீட்டுக்குத் திரும்பிவிட்டார். மறுபடியும், அவர் என்ன நினைத்

தாரோ என்னவோ, அவர் திரும்பி சிறிதுநேரத்துக் கெல்லாம் வந்து தாமும் கப்பலில் வருவதாகக் கூறிக் கப்பலில் ஏறிக்கொண்டார். நாங்கள் கப்பலை நடுச் சமுத்திரம் வரையில் செலுத்திக்கொண்டுபோய் நிறு த்தி, ஒரு சரிவான பலகையை கப்பலிலிருந்து சமுத் திர ஜலத்துள் செல்லும்படி சாய்வாக வைத்து, பெட் டியை அதில் ஏற்றி ஓசை புலப்படாமல் மெதுவாக அதை உருட்டி விட்டோம். அதுவும் ஓசைபடாமல் நழுவிச்சென்று சமுத்திரத்தின் அடிவாரத்தில் விழுந்து விட்டது. நாங்கள் செய்த வேலையை ஒருவரும் கவ னிக்கவில்லை யென்பதைத் தீர அறிந்துகொண்டபின் கப்பலைக் கரைக்குச் செலுத்திவந்தோம். எங்கள் எஜமானன் இவ்விஷயத்தை மறந்தும் வெளியில் பிரஸ் தாபிக்கக் கூடாதென்று எங்கள் இருவரையும் எச் சரித்துவிட்டுத் தம்முடைய வீட்டுக்குச் சென்றார்; நாங்களும் எங்கள் குடிசைக்குப் போனோம். மணி இரண்டிற்கு மேலாகியும் எங்களுக்குத் தூக்கம் பிடிக்க வில்லை. அந்தப்பெட்டி விஷயமாகவே எங்களுக்குத் தோன்றியதை நாங்கள் பேசிக்கொண் டிருந்தோம். அந்தப் பெட்டிக்குள் என்ன இருக்கக்கூடு மென் பதை இன்னமும் அறிய முடியவில்லை'' என்று முனி யாண்டி கூறிய இக்கதை நரேந்திரருக்கு வியப்பை உண்டாக்கிற்று.

"மூழ்கி எடுக்கமுடியாதா?'' என்று நரேந்திரர் மிகுந்த ஆவலோடு கேட்டார்.

"முழ்கவாவது — எடுக்கவாவது! முடியாத காரி யம்! கனவிலும் நினையாதீர்கள்! நாங்கள் எவ்வள வோ ஜாக்கிரதையாக வேலை செய்பவர்களாயிற்றே!

எந்தப் பாகம் மூழ்குவதற்குச் சாத்தியமாகாதபடி யிருந்த ஆழமாயிருக்கிறதோ அந்தப் பாகத்திலன்றோ நாங்கள் அதைக் கொண்டுபோய் ஆழ்த்தியிருக் கிறோம்" என்று முனியாண்டி பதில் கூறினன்.

"அது போகட்டும்; இரும்புப் பெட்டியை மாணிக்கம் பிள்ளைக்கு அனுப்பியவர்கள் யார் என்று உனக்குத் தெரியுமா?" என்று நரேந்திரர் அவனை வினவினர்.

"ஐயா, எனக்கு அந்த விஷயம் தெரியாது. அதை அனுப்பியவரும், எங்கள் எஜமானனும் பொருள் சேகரிக்கும் வழியில் மிக நெருங்கிய சிநேகபாவ மான சம்பந்த முடையவர்களா யிருக்கக்கூடுமென்று மாத்திரம் என்னுற் சொல்லமுடியும். சிற்சில சம யங்களில் சென்னையிலிருந்தும் மன்னார்குடியிலிருந்தும் சிலர் இங்குவந்து என் எஜமானனேடு நேரில் பேசி யிருக்கிருர்கள். அவ்விதம் அவர்கள் வந்து பேசி விட் டுப் போன பின்பு சிலதினங்கள் கழித்து ஏதாவது ஒரு சாமான் ரயில்மார்க்கம் இங்கு வரும் இவ்விதம் நிகழ்வதுதான் வழக்கம். இதற்குமேல் ஒன்றும் எனக் குத் தெரியாது" என்று வத்தற்காரன் மறுமொழி மொழிந்தான்.

"சரி; அவர்கள் அவ்விதம் அனுப்பும் சாமான் கள் எப்படிப்பட்டவை?" என்று வைத்தியர் அலட் சியமாய்க் கேட்டார்.

"எப்படிப்பட்ட சாமான்கள் என்று நிச்சயமாக ஒரு வரையறைப்படுத்திச் சொல்லல் சாத்தியமான விஷயமன்று. ஆனலும், என்னை எவ்விதமான சந்

கடத்திலும் அகப்படுத்துவதில்லை என்று தாங்கள் வாக்குத்தத்தம் செய்திருக்கிறபடியால், எனக்குத் தோன்றும் சில சந்தேகங்களைக் கூறுகிறேன்'' என்று சொன்னான் முனியாண்டி.

"உனக்குத் தோன்றும் சந்தேகங்கள் யாவை?'' என்று நரேந்திரர் இணங்கிக் கேட்டார்.

"ஐயா, பலவிதமான பெட்டிகளையும், மூட்டைகளையும் இந்தக் கைகள் தூக்கி சமுத்திரத்துள் போட்டிருக்கின்றன!'' என்று முனியாண்டி தன் இருகரங்களையும் நரேந்திரருக்குச் சுட்டிக்காட்டி உரைத்து, "அவைகள் ஒருவகையான துர்நாற்றம்— இரத்த வாசனையைப்போல்— வீசுகின்றன!'' என்று காதோடு காதாய் மீண்டும் இரகசியமாய் கூறினான்.

"நீ சொல்லுவது இன்னதென்றே எனக்கு விளங்கவில்லையே!'' என்று ஆச்சரியக் குறிப்பும் அறியாமைக் குறிப்பும் கலந்துதோன்ற நரேந்திரர் வினவினார்.

"ஐயா, விளங்க உரைக்க என்றால் முடியாது; உதாரணமாக ஒருமுறை நடந்த சம்பவத்தை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். அதிலிருந்து விஷயத்தை நீங்களே யூகித்தறிந்துகொள்ளுங்கள். ஒரு மாதத்துக்கு முன்பு ஓர் நாளிரவு என் எஜமானன் ஒரு சிறிய சாக்கு மூட்டையை என்னிடம் கொடுத்து நடுக்கடலில் அதை ஒருவருக்குந் தெரியாமல் போட்டுவிடும்படி சொன்னார். அது இரத்த வாசனை வீசியதால் அதைப் பிரித்துப்பார்க்க வேண்டுமென்னும் ஆசை எனக்கு உண்டாயிற்று. நான் ஒருவருக்குந் தெரியாமல் தையலைப் பிரித்துவிட்டு உள்ளே இருந்த

வஸ்துவை வெளியில் இழுத்தேன். ஆ! அப்போது எனக்குண்டான ஆச்சரியத்தையும் அச்சத்தையும் நான் எவ்விதம் உரைப்பேன்! ஒரு அழகிய கை அவ் வஸ்துவா யிருக்கக்கண்ட நான் உடல் நடுங்கினேன். அந்தக் கையின் செந்நிறத்தையும் மென்மையையும், திரண்டுருண்டு கரவுசரிவாயிருந்த நேர்மையையும் கண்டவுடன் அழகிற் சிறந்த ஒரு இளம்பெண்ணின் கையாக அது இருக்கவேண்டுமென்பதை நான் எளி தில் அறிந்துகொண்டேன். முழுக்கையும் அதில் இல்லை; முழங்கையிலிருந்தே இருந்தது! அதன் இரண் டாவது விரலில் விலை உயர்ந்த ஒரு வைரமோதிரம் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அந்த மோதிரத்தை நான் கழற்றிவைத்துக்கொண்டு, கையையும் சாக்குப் பையையும் சமுத்திரத்தில் போட்டுவிட்டேன்" என்று முனியாண்டி கூறினான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் நரேந்திரர் ஸ்தம்பித்து நின்றார். ஆடிக்காற்றில் அகப்பட்ட இல வம்பஞ்சுபோல் அவருடைய எண்ணங்கள் நாலாபக் கத்திலும் சிதற வாரம்பித்தன. மூளை கிறு கிறு வென்று சுற்ற ஆரம்பித்தது. மனோதிடம் என்பதை அவர் அடியோடு இழந்தார். அவருடைய சரீரம் வெளுத்து வெண்சாம்பல்போல் தோன்றியது. சிறிது நேரம் பிரேதம்போல் மூச்சையுமிழந்து அசையாது நின்றார். பிறகு ஒரு நெடுமூச்சுவிட்டு "அந்தப் பெண் கொலை செய்யப்பட்டவளாகவே இருத்தல் வேண்டும்; அதிற் சந்தேகமில்லை!" என்று வாய்விட்டு ஆற்றாமை யால் அலறினார்.

"ஆம்; அதிற் சந்தேகமா? "தனலட்சுமி" எத் தனையோ இறந்த சரீரங்களையும், அவயவங்களையும்

இதுவரையில் சுமந்துசென்று சமுத்திராதேவியிடம் ஒப்புவித்திருக்கிறாள்" என்று பெருமூச்சுடன் முனியாண்டி சொன்னான்.

"இப்படிப்பட்ட சாமான்கள் எந்த இடத்திலிருந்து உன் எஜமானனுக்கு வருகின்றன ?" என்று நரேந்திரர் மறுபடியும் வற்புறுத்திக் கேட்டார்.

"பெரும்பாலும் சென்னை நகரத்திலிருந்துதான் வருகின்றன !" என்று முனியாண்டி பதில் சொன்னான்.

"நல்லது ; முனியாண்டி ! நீ சொன்ன சங்கதி எனக்கே மிகுந்த அச்சத்தை விளைவிக்கிறது. நீ இப்படிப்பட்ட கொடிய வேலையிலிருந்து நீங்கியதுபற்றி நான் மிகுந்த சந்தோஷப்படுகிறேன். இருக்கட்டும் அந்த வைரமோதிரத்தை நான் பார்க்கலாமோ ?" என்று நரேந்திரர் நயமாய்க் கேட்டார்.

"ஆஹா ! பார்க்கலாம் ! இதோ இருக்கின்றது ! அதை நான் ஒருபோதும் வீட்டில் வைக்கிறதில்லை; எப்போதும் என் மடியிலேயே வைத்துக்கொண்டிருக்கிறேன். வேண்டுமானால், அதை நீங்களே எடுத்துக்கொள்ளலாம். நான் அதை வைத்துக்கொண்டு என்ன செய்யப்போகின்றேன். எனக்கு ஏதாவது—" என்று சொல்லி, முனியாண்டி தன் மடியைத்திறந்து மோதிரத்தை எடுத்து நரேந்திரர் கையில் கொடுத்துவிட்டுத் தன் கடைசி வாக்கியத்தை முடிக்காமல் சங்கோசப்பட்டவனைப்போல் நின்று கொண்டிருந்தான்.

"நீ சொல்லுவதை நான் அறிந்துகொண்டேன். மோதிரம் என்னிடத்தில் இருக்கட்டும். இவைகளை அதற்குப் பிரதியாக நீ எடுத்துக்கொள்" என்று நரேந்

திரர் கூறி முனியாண்டியிடம் பத்து பவுன்களைக் கொடுத்துவிட்டு மோதிரத்தை உற்று நோக்கினார்; ஸ்தம்பித்து நின்றார்!

"வசந்தமாலை" என்று அந்த மோதிரத்தில் செதுக்கப்பட்டிருந்த பெயரானது அவரை அவ்விதம் ஸ்தம்பிக்கச் செய்துவிட்டது.

"ஆ! "தனலட்சுமி" இரகசியம் வெளியாயிற்று — இப்பொழுது!" என்று இழைந்த குரலில் நரேந்திரர் கூறிப் பெருமூச் செறிந்தார். பிறகு தம்மைத்தாமே திடப்படுத்திக்கொண்டு "அப்பா, இன்னொரு விஷயம் உன்னைக் கேட்க விரும்புகிறேன். ஞானசேகரர் என்பவரை நீ எப்போதாவது பார்த்திருக்கிறாயா? அல்லது அவரைப்பற்றிக் கேள்வியாவது பட்டிருக்கிறாயா?" என்று நயமாக உசாவினார்.

ஞானசேகரர் என்னும் பெயரைச் சொன்னவுடன் முனியாண்டியின் பார்வை ஒருவகையாக மாறிற்று. "ஜயராம் என்று சொல்லப்படுகிறவரின் சிநேகிதரைப்பற்றிக் கேட்கின்றீர்களோ?" என்று அவன் ஒருவித வியப்புடன் நரேந்திரரைக் கேட்டான்.



## 22. ஜயராமைப்பற்றிய விவரங்கள்



"ஆமாம்; ஜெயராம் என்பவரை உனக்குத் தெரியுமா?" என்று நரேந்திரர் மிக்க அவசரத்துடன் முனியாண்டியைக் கேட்டார்.

"அவர் பெரிய பணக்காரர்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் மிகவும் வேண்டிய சிநேகிதரென்று நான் நினைக்கிறேன்." என்று முனியாண்டி, தன் வாயிலிருந்த புகையிலைக் கட்டையை ஒரு பக்கத்துக் கதுப்பிலிருந்து மற்றொரு பக்கத்துக் கதுப்புக்குத் தள்ளிக்கொண்டே, சொன்னான்.

"அவர் இங்கே வந்திருக்கின்றாரோ?" என்று நரேந்திரர் சந்தேகமாய்க் கேட்டார்.

"வராமலென்ன! எத்தனையோ முறை வந்திருக்கிறார்! இரண்டொரு சமயங்களில் ஒருவருக்கும் தெரியாமல் அவரைப் படகில் ஏற்றிக்கொண்டு போய் நாகூர், நாகபட்டிணம், முதலிய இடங்களில் நான் விட்டு வந்திருக்கிறேன்" என்று முனியாண்டி கூறினான்.

"கடைசி முறையாக சமீபத்தில் அந்த ஜெயராம் என்பவர் எப்போது இங்கே வந்தார்?" என்று நரேந்திரர் வினவினார்.

"பத்து நாட்களுக்கு முன்பு அவர் திருமலைராஜன் பட்டிணத்தில் வந்திருந்தார். இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு நானும், பேயாண்டியும் சென்று அவரை இரகசியமாக அழைத்து வந்து என்

கள் எஜமானனிடம் விட்டோம். காரைக்காலிலிருந்து அவர் மறுநாள் சென்னபட்டினத்துக்குப் புறப்பட்டுச் சென்றார். நாலைந்து தினங்கள் கழித்துப் பழைய படியும் இங்கே வந்து மாணிக்கம் பிள்ளையிடம் ஏதோ இரகசியமாகப் பேசிக்கொண்டிருந்தார். அன்றிரவே நாங்கள் அவரைப் படகிலேற்றிக் கொண்டுபோய் நாகபட்டினம் துறைமுகத்தில் விட்டோம். அவர் நாகையிலிருந்தபடியே இரயில் மார்க்கமாக நீடாமங்கலம் சென்றார். மன்னார்குடியில் அவருக்கு ஏதாவது வேலை இருக்கும்போலிருக்கிறது" என்று முனியாண்டி விளக்கமாக விஷயங்களைச் சொன்னான்.

"அவர் நீங்கள் படும் சிரமத்துக்குத் தகுந்த கூலி கொடுக்கின்றார் என்றே நான் நினைக்கிறேன்" என்றார் நரேந்திரர்.

"ஓ! ஒவ்வொரு தடவையிலும் அவர் ஐந்து ரூபா எனக்குக் கொடுக்கின்றார்!" என்று முனியாண்டி சொல்லி, கூலிவிஷயத்தில் அவர் தாராளமாக இருந்த போதிலும், அவருடைய நடத்தை தனக்குப் பிடிக்கவில்லை யென்பதையும் குசிப்பித்தான்.

"முதல் முதல் ஞானசேகரரை நீ எப்போது பார்த்தாய்; எங்கே பார்த்தாய்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"காரைக்கால் கவர்னர் தோட்டத்தில் பார்த்தேன். ஜெயராமும் கவர்னரும் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டே தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தார்கள். அச்சமயத்தில் ஞானசேகரர் கவர்னரைப் பார்க்கவேண்டுமென்னும் உத்தேசத்துடன் தற்செய

லாக வந்து அங்கு ஜெயராமைச் சந்தித்தார். அவர்களிருவரும் ஒருவரையொருவர் அறிந்துகொண்டார்கள். ஆனாலும், அவ்விதம் இருவரும் சந்தித்தது ஒரு பேராச்சரியத்தை அவர்களிருவருக்குமே விளைவித்தது என்பதை, அவ்விருவரும் ஒருவரையொருவர் ஆச்சரியமும் அச்சமுந்தோன்றப் பார்த்துக்கொண்ட பார்வையே இனிது விளக்கிற்று'' என்று முனியாண்டி பதில் சொன்னான்.

"அவர்கள் இருவரும் சிநேகபாவமாய்த்தானே இருந்தார்கள்?'' என்று நரேந்திரர் ஒரு சந்தேக வினா நிகழ்த்தினார்.

"அவ்விஷயமாக நிச்சயமாய் ஏதும் சொல்ல என்னால் முடியாது. அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்ட மாதிரியிலிருந்து சிநேகபாவமாக அவர்கள் இல்லை என்றே நினைக்கவேண்டியிருக்கிறது. தனித்துப் பேசவேண்டுமென்றும், ஆதலால் தெருவுக்கு வரவேண்டுமென்றும் ஞானசேகரர் கூறி ஜெயராமை வெளியே அழைத்தார். இருவரும் வெளியே சென்றார்கள். அதன் பிறகு நான் ஞானசேகரரை மறுபடியும் பார்க்கவில்லை'' என்று முனியாண்டி புகன்றான்.

"ஜெயராமோடு ஒரு பெண்மணியைப் பார்த்திருக்கின்றாயோ?'' என்று வைத்தியர் உசாவினார்.

"முதல்முதல் ஜெயராம் இங்கு வந்தபோது அவரோடு ஒரு பெண்மணி வந்திருந்தாள். ஆனாலும், அவளுடைய அங்கம் முழுமையும் ஒரு நெடு அங்கியால் மறைக்கப்பட்டிருந்ததால், அவளை அடையாளங்

கண்டுகொள்ள என்னாலும் பேயாண்டியாலும் முடியாதுபோயிற்று. இருந்தபோதிலும், அவள் வாலிபர் மனத்தை வசீகரிக்கக்கூடிய வயதை அச்சமயம் அடைந்திருந்தாள் என்றும், இயற்கையாகவே அழகிற் சிறந்து விளங்கினாள் என்றும் மாத்திரம் சொல்ல என்னால் முடியும்'' என்று கூறினான் முனியாண்டி.

நரேந்திரர் ஒன்றும் பேசாமல் மௌனமாக விருந்தார். அப்பெண்மணியை அடையாளங் கண்டுகொள்ளுவதற்கு முடியாமற் போயிற்று என்று முனியாண்டி கூறியது அவருக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்கிற்று. ஜயராமும் அவரைச் சேர்ந்தவர்களும் அடிக்கடி இரகசியமாக ஒருவருக்குந் தெரியாமல் கடல் மார்க்கமாகக் காரைக்காலுக்கு வந்து போகிறார்கள் என்பது மாத்திரம் அவருக்கு இனிது புலப்பட்டது. சென்னையிலும், சென்னைக்கு வெளியிலும் அவசரமும் அவசியமுமான சிலவேலைகளை ஜயராம் ஏககாலத்தில் கவனிக்க வேண்டியவராயிருக்கிறார் என்றும், அதனாலேயே திருட்டுத்தனமாய்க் கப்பலில் பிரயாணஞ் செய்வதை யாராவது கண்டுபிடித்து விட்டால் அதனால் நேரிடும் துன்பத்தையும் ஒரு பொருட்படுத்தாமல் அவர் அடிக்கடி இவ்விதம் வந்துபோகிறார் என்றும் வைத்தியர் நினைத்தார்.

"ஞானசேகரருக்கும் உன்னுடைய எஜமானனுக்கும் எந்த வகையான லேவாதேவி நடந்தது?'' என்று நரேந்திரர் வினவினார்.

"எனக்கு எவ்விதம் அவ் விஷயங்களெல்லாம் தெரியவரும்? அநேக மனிதர்கள் அநேகவிதமானவேலையை முன்னிட்டு என் எஜமானனிடம் வருவார்கள்.

எஜமானன் அவர்களைக் கப்பலில் இரகசியமாக அழைத்துப் போய்க் குறித்த இடத்தில் விட்டு வரும்படி சொன்னால், நாங்கள் அவ்விதம் செய்யக் கடமைப்பட்டவர்களே தவிர, மற்ற விஷயங்களைக் கவனிக்கக் கடமைப்பட்டவர்கள் அல்லர்'' என்று முனியாண்டி கூறினான்.

"இவ்விடமிருந்து இவ்விதம் இரகசியமாக இது வரையில் எத்தனை பேர்கள் சென்றிருப்பார்கள்?'' என்று நரேந்திரர் வினவினார்.

"எத்தனை பேர்களா? எட்டில் அடங்குமா; எண்ணத் தொலையுமா!'' என்று சிரித்துக்கொண்டே முனியாண்டி கூறினான்.

"அவ்வாறு செல்லும் பிரயாணிகள் உனக்கு நல்ல வெகுமதி செய்கிறார்களா?'' என்றார் நரேந்திரர்.

"ஆ! அதிலும் சந்தேகமா? அவர்கள் போவதற்கு வேறு மார்க்கம் இல்லாமையால் எனக்கு நல்ல வரும்படி அவர்களால் கிடைக்கத்தானே வேண்டும்'' என்று வத்தற்காரன் பதில் உரைத்தான்.

கடல் மார்க்கமாக ஒரு இரகசிய வழியைப் பின்பற்றி சென்னை முதலான இடங்களுக்குக் காரைக்காலிலிருந்து மாயக்காரர் சிலர் அடிக்கடி செல்லுகிறார்கள் என்று முனியாண்டி கூறியது நரேந்திரருக்கு ஓர் பேராச்சரியமாகவே தோன்றிற்று. இப்படிப்பட்ட ஒரு இரகசிய வழியும் இருக்கிறதோ வென்று அவர் வியப்படைந்தார்.

ஆனால், ஒரு விஷயம் அவருக்கு மிகுந்த திருப்தியையும் சந்தோஷத்தையும் கொடுத்தது. அதா

வது முனியாண்டி உண்மையை உள்ளபடியே வெளியிட்டதுதான்.

முனியாண்டியும் பேயாண்டியும் உண்மையைப் பேசுகிறவர்களாயும், தெய்வத்திற்குப் பயந்தவர்களாயும், கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடைகிறவர்களாயும், ஒற்றுமையும் உழைப்பும் நிரம்ப வாய்ந்தவர்களாயும், பிரதிதினமும் தெய்வ வழிபாடு இயற்றுகிறவர்களாயும் இருந்தார்கள். இவ்விதமாக இரண்டு வத்தற்காரர்கள், நாகரிகமும் கல்வியும் இல்லாதவர்களாயிருந்தும் சற்குணங்கள் நிறைந்தவர்களாயும், நன்னடக்கை உடையவர்களாயும் இருக்கின்றார்கள் என்பதை அறிந்த நரேந்திரர் திருப்தியும் சந்தோஷமும் அடைந்தார் என்பது ஓர் வியப்பாமோ? மேலும், நாகரிக விருத்தியும், கல்விப் பெருக்கும் அதிகமாகி வருகின்றனவென்று பொதுவாய்க் கருதப்படும் இக்காலத்தில் பெரும் பணக்காரர்களும், பேருத்தியோகஸ்தர்களும் சுயநலப்பற்று மிகுதியும் உடையவர்களாய்ப் பொய்ப் பேசுவதிலும், சூது செய்வதிலும், பிறர் பொருள்களைக் கவருவதிலும், குடிக்கும் கள்ளுக்கும், சூதுக்கும் வேசிக்கும் தங்கள் பொருளை அழிப்பதிலும் பெரும்பான்மையும் அழுந்தித் தலைகால் தெரியாமற் கிடக்கும்போது கல்வி அறிவு இல்லாத சாமானியமான இரண்டு படகோட்டிகள் உண்மையும் நன்னெறியும் உடையவர்களா யிருப்பது எவ்வளவு விசேஷம் என்பதை நினைக்கும்போது நரேந்திரர் தம்மை அறியாமலே ஆனந்தமடைவார். ஆம்; வாஸ்தவந்தானே! கூலிவேலை செய்து பிழைக்கும் ஒரு ஏழைக்கு இருக்கும் திருப்தி கோடிக்கணக்கான பணத்தை மிகுந்த பிரயாசையுடன் சேர்க்கும் ஒரு

பணக்காரனுக்கு இருக்கின்றதா? கல்லாதவர்களா யிருப்பினும் அவர்களுக்குள்ள அன்புரிமையும், ஜீவ காருண்ய ஒழுக்கமும், தெய்வபக்தியும் கற்றுத் தேர்ந்தவல்லவர்களுக்கு இருக்கின்றனவா? கடவுளே இல்லையென்று சாதிக்கும் பெரும்படிப்பாளிகள் எத்தனைபேர் இக்காலத்தில் இருக்கின்றார்கள்! ஒரு கூலிக்காரனுடைய மனைவிக்கு உள்ளபடியே இருக்கும் பதிவிசுவாசமும், கற்பொழுக்கமும், பெரும்பான்மையும் கனதனவான்கள் வீட்டு ஸ்திரீகளுக்கு இல்லையென்றே சொல்லும்படியானவிதமாய் அவர்களுடைய தற்பெருமையும், அடக்கமின்மையும் குறிப்பிடுவதை நாம் அனுபவத்தில் பார்த்து வருகிறோமன்றோ? இவ்விதமாக உலகத்தில் பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படுபவர்களுடைய ஒழுக்கமும் நடத்தையும் அப்பெயருக்குச் சிறிதும் ஏற்காத இழிகுணமுடையவையாக இருக்க, மீன்பிடித்தும் கப்பல் ஒட்டியும் கிடைக்கும் சொற்ப பொருளைக்கொண்டு ஜீவனம் செய்யும் ஒருவனுடைய ஒழுக்கமும் நடத்தையும் தேவர்களாலும், முனிவர்களாலும் சிலாகிக்கக் கூடியவையாக இருக்குமாயின், அவன் அப்பெரிய மனிதர்களினும் நூறு மடங்கு பெரியன் என்று ஏன் சொல்லக்கூடாது?

நரேந்திரர் நெடுநேரம் வரையில் முனியாண்டியுடன் இவ்விதமெல்லாம் பேசி மாணிக்கம்பிள்ளை செய்யும் விநோதமான வியாபார முறையைப்பற்றியும், ஞானசேகரர் ஐயராம் முதலியவர்களைப் பற்றியும், அநேக இரகசியங்களைத் தெரிந்து கொண்டார். ஆனாலும், இரும்புப் பெட்டியை விலைக்கு வாங்கினவர் உண்மையான ஞானசேகரரா அல்லது அல்லரா

என்னும் சந்தேகம் மாத்திரம் வைத்தியருடைய மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தது. கடைசியில் ஞானசேகரரே இரும்புப் பெட்டியை இவ்விதமெல்லாம் பலர்கையில் மாறும்படிசெய்து, இறுதியில் சமுத்திரத்தில் தள்ளிவிடும்படியான ஏற்பாடு செய்தார் என்று நரேந்திரர் முடிவு செய்துகொண்டார். ஏனெனில், இரும்புப் பெட்டியில் ஒரு பெண்மணியின் இறந்த சரீரம் ஒளிக்கப்பட்டிருக்கிற தென்பதையும், அது கண்டுபிடிக்கப்பட்டால் தமக்கு அபாயம் விளையுமென்பதையும் ஞானசேகரர் ஏற்கெனவே அறிந்திருக்கக் கூடுமானதால், அவர் இந்தவிதமான சூழ்ச்சியைச் செய்திருத்தல் கூடுமென்று நரேந்திரர் எண்ணினார். சரவணன் என்பவனுடைய அங்க அடையாளங்களை நரேந்திரர் முனியாண்டியிடம் விவரமாய்க் கூறி அவனைப்பற்றி அவனுக்கு ஏதாவது தெரியுமாவென்று கேட்டார். அதற்கு முனியாண்டி சரியான பதில் சொல்லாதது கொண்டு சரவணனைப்பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது என்பதையும் நரேந்திரர் அறிந்து கொண்டார்.

"முனியாண்டி! நீ எனக்கு ஒரு முக்கியமான உதவி சய்யவேண்டும்! அதாவது, ஜயராமைச் சந்திக்கும்படியான தந்திரத்தை நீ எனக்குக் கூறவேண்டும். அவர் இங்கு இன்னொரு சமயம் வரும்போது சென்னைக்கு நீ உடனே தந்தி கொடு. நான் உடனே புறப்பட்டு வந்து தற்செயலாய் அவரைச் சந்திப்பவனைப்போல் கண்டு பேசிக்கொள்ளுகிறேன்" என்று நரேந்திரர் கூறி அவன் கையில் ஒரு நூறு ரூபாய் நோட்டையும் வைத்தழுத்தி, மயிலாப்பூர் பூபேந்திரர் விலாசத்திற்குத் தந்திதவறாது கொடுக்

கும்படி ஆக்கியாபித்தார். அவனும் ஒருவாறு அவருடைய யோசனைக்கு இணங்கி நடக்கச் சம்மதித்தான். சாதாரணமான கப்பலோட்டி எவ்வளவு சிறந்த குணமுடையவனாக இருந்தபோதிலும், பெருந்தொகையான பணம் வலியவந்தால் அதை வேண்டாமென்று தடுத்துக்கூறி நிராகரிக்க வேண்டுமென்று நினைக்கும்படியான அவ்வளவு உன்னத நோக்கத்தை அவனுடைய கல்வியறிவற்ற மனத்திலிருந்தும் மூளையிலிருந்தும் நாம் எதிர்பார்த்தல் நியாயமன்று. ஆகவே முனியாண்டி நரேந்திரர் கொடுத்த நூறு ரூபாய்க்குக் கட்டுப்பட்டு, அவன் மறுபடியும் மாணிக்கம் பிள்ளையிடம் வேலை ஒப்புக்கொண்டு, ஜயராம் "தனலட்சுமியில்" மறுமுறை பிரயாணம் செய்யும்படி நேரிடும் சமயத்தை அவருக்குத் தெரிவிக்கச் சம்மதித்ததைப் பற்றி நாம் அவனை இகழவேண்டாம்.

வைத்தியர் முனியாண்டியிடம் பேசவேண்டிய சங்கதிகளை பேசிய முடித்துக்கொண்டு, மாணிக்கம் பிள்ளையைக் கண்டு பேசாமலே, காரைக்காலிலிருந்து மறுநாள் புறப்பட்டு சென்னைக்குச் சென்று மைலாப்பூரிலுள்ள பூபேந்திரர் கிருகத்தை அடைந்தார். வீட்டில் பூபேந்திரர் காணப்படவில்லை. வேலைக்காரனைக் கூப்பிட்டு நரேந்திரர் விசாரித்தார். முதல் நாளிரவு பூபேந்திரர் திடீரென்று தன்னைக் கூப்பிட்டுத் தாம் வெளியூருக்குப் போகவேண்டுமென்றும், அங்கு போன பின்பு கடிதம் வைத்தியருக்கு எழுதப்படுமென்றும் சொல்லிவிட்டு உடனே சில துணிமணிகளை எடுத்துக்கொண்டு போய்விட்டார் என்று வேலைக்காரன் சொன்னான். அவன் கூறிய இச்செய்தி வைத்தியருக்கு மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்தது. அவ

சைதாப்பேட்டையில் உதயகுமாரி வசித்துவரும் ஜாகைக்குச் சமீபத்தில் இன்னமும வசித்துவருகிறார் என்று நரேந்திரர் நினைத்துக் கொண்டிருந்தார். ஏனெனில், அவருக்கு உதய குமாரிமீதுள்ள அடங்காப் பெருங்காதல் அவரைச் சைதாப்பேட்டையை விட்டு அப்புறப்படுத்தாது என்பதை நரேந்திரர் நன் கறிந்திருந்தார். அப்படி யிருந்தும் பூபேந்திரர் வெளி யூருக்குப் போய் விட்டதானது வைத்தியருக்கு மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்தது. அவருக்கும் உதயகுமாரிக்கும் ஏதாவது மனஸ்தாபம் நேரிட்டு அவளுடன் சண்டையிட்டுக்கொண்டு பூபேந்திரர் வந் திருக்கக்கூடுமோ வென்று நரேந்திரர் சந்தேகித்தார்.

இவ்விதம் அவர் ஆழ்ந்த சிந்தனையில் இருந்த போது "தேவகி அம்மாவும் உங்களைப் பார்க்கும் பொருட்டு இவவிடம் வந்தார்கள். நேற்று இரவு அவர்கள் வந்தபோது பத்துமணி இருக்கும். நீங்கள் ஊரில் இல்லை என்று நான் சொன்னேன். வந்த வுடன் சென்னை தம்புச்செட்டித்தெருவி லிருக்கும் தமது வீட்டுக்கு உங்களை வரும்படியாகச் சொல்லும் படி என்னிடம் கூறிவிட்டுப் போனார்கள்" என்று வேலைக்காரன் சொன்னான்.

"என் மைத்துனர் வெளியூருக்குப் புறப்பட்டுப் போன பின்பு வந்தாளா அல்லது அவர் வீட்டிலிரு ந்தபோதே வந்தாளா?" என்று வைத்தியர் இடை மறித்து வினவினார்.

"உங்கள் மைத்துனர் போனபின்பு தான் அந்த அம்மா வந்தார்கள். ஆனால், அவரைப்பற்றியும் விசாரித்தார்கள். சைதாப்பேட்டையில் அவர் வசி

த்து வருவதை அறிந்தவர்கள்போல் அவர் சைதாப் பேட்டையிலிருந்து திரும்பி வந்து விட்டாரா என்று கேட்டார்கள்'' என்று வேலைக்காரன் சொன்னான்.

தேவகி வந்து தன்னைத் தேடிவிட்டுப் போனாள் என்னும் செய்தி நரேந்திரருக்கு இன்னும் அதிக ஆச்சரியத்தை உண்டாக்கிற்று.

வைத்தியர் சாப்பிட்டு விட்டு உடனே தேவகி வீட்டுக்குச் செல்ல உடை மாற்றிக்கொண்டார். பழைய சட்டையைக் கழற்றிப் போடும்போது அவருடைய கை தற்செயலாய் சட்டைப் பை ஒன்றின் மேற் பட்டது. பைக்குள்ளிருந்த ஒரு வஸ்து அவருடைய ஸ்பரிச உணர்ச்சிக்குப் புலப்படவே, அதை வெளியே எடுத்துப் பார்த்தார். முன்பு தங்கசாலை வீதியில் நடந்த ஆரவாரத்தின்போது சதிநடந்த வீட்டின் மாடி அறையில் மாட்டப்பட்டிருந்த ஜயராமின் சட்டைப் பைக்குள்ளிருந்து நரேந்திரரால் எடுக்கப்பட்ட பொருள் விளங்காத கடிதமாக அது இருந்தது. அதைப் பார்த்தவுடன் நரேந்திரருக்குப் பழைய ஞாபகங்கள் வந்தன. பாம்பின் வாயிலிருந்து தாம் தப்பி உயிர் பிழைத்ததை நினைந்து அச்சமும் சந்தோஷமும் கொண்டார். கடிதம் எப்பொருளை விளக்குகிறது என்று சிந்தித்துப் பார்த்தார். ஆனாலும், அவருடைய மூளைக்கு எதும் எட்டவில்லை. அவ்விஷயமாய்ச் சிந்தித்துக் காலத்தை வீணாய்க் கழிப்பதற்குச் சமயம் இது வன்று என்று நினைத்து அக்கடிதத்தை உடன் எடுத்துக்கொண்டு தேவகியின் இல்லத்திற்குச் சென்றார். நரேந்திரர் சென்ற சமயத்தில் தேவகி அகிலாண்டம்மையுடன் கூடத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தாள்.

நரேந்திரரைக் கண்டதும் தேவகி ஒருவிதமான அச்சக் குறிப்புடன் "வைத்தியரே! வரவேண்டும். ஏது, அபூர்வமாக இருக்கிறதே! தாங்கள் வெளியூருக்குச் சென்றிருந்தீர்கள் என்று கேள்விப்பட்டேன். எப்போது வந்தீர்கள்?" என்று மிக விநயமாய்க் கேட்டாள்.

"ஆம்; தேவகி! நான் இன்றுதான் இவ்விடம் வந்தேன்" என்று பதில் உரைத்தார் வைத்தியர்.

"சைதாப் பேட்டைக்கும் போயிருப்பீர்கள் என்று நான் நினைக்கிறேன்!" என்று தேவகி பொருள் நிரம்பிய ஒருவகைப் பார்வையுடன் சொன்னாள். அவளுடைய பார்வை வெளியிட்ட பொருளை நரேந்திரரும் நன்றாய் அறிந்துகொண்டார். ஏதோ ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றிப் பேச தேவகி விரும்புகிறாள் என்றும், ஆனாலும் பக்கத்தில் அகிலாண்டம்மை உட்கார்ந்திருப்பதால் அவள் முன்னிலையில் தேவகி அந்த விஷயத்தைச் சொல்லப் பயப்படுகிறாள் என்றும் நரேந்திரர் தெரிந்துகொண்டார். முனியாண்டி கூறிய ஜயராமைப்பற்றிய விவரங்கள் எல்லாம் தேவகியிடம் சொல்லப்பட வேண்டுமென்று நரேந்திரர் விரும்பினார். அகிலாண்டம்மை இருந்தது நரேந்திரருக்கும் இடையூறாகவே இருந்தது. இருவரும் தனித்துப்பேச விரும்பினார்கள். அவர்களுடைய குறிப்பை அறிந்து விலகிப்போக வேண்டும் என்கிற நுண்ணுணர்வு அகிலாண்டம்மைக்கு உண்டாகவில்லை. புருஷனும் மனைவியும் தனித்தாட வேண்டிய உரைகள் பல இருப்பினும், புருஷனுடைய பெற்றோர்கள் அதற்கு இடையூறாக இருந்து தடுப்பதைப் பெரும்பான்மையான குடும்பங்களில் நாம்

பார்த்து வருகிறோம். சில தாய்மார்கள் தங்கள் புத்திரன் தங்கள் மருமகளோடு ஏதாவது பேசினால், சக்களத்தியைப்போல் அவளை நினைத்து வலிந்து சண்டையிடுவது இன்றும் எத்தனையோ குடும்பங்களில் வழக்கமாயிருக்கிறது! "நம் மாமியார் தொலைய வேண்டும்" என்று மாரிக்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் மருமக்களையும், "மகன் செத்தாலும் சாகிறான்; என் மருமகள் கொட்டம் அடங்கவேண்டும்!" என்று பிடாரியை வேண்டிக்கொள்ளும் மாமிமார்களையும் நம் தமிழ்நாட்டில் பார்ப்பது ஒரு கஷ்டமான காரியமன்று. எவ்வாற்றானும் ஒன்றே என்று நினைக்கும்படியானவிதமாய் ஒன்றுபட் டிருக்கின்ற கணவனும், மனைவியும் தனித்துரையாடுதற்கே இவ்வாறானால், அவ்வுரிமையை, உலகவழக்கப்படி விவாகம் என்னும் கயிற்றால் கட்டப்பட்டுப் பெறாத நரேந்திரரையும் தேவகியையும் தனித்துப் பேசும்படி முதிர் வயதுடைய அகிலாண்டம்மை விடுவாளோ! ஆகவே, அவள் எப்போது எழுந்து அப்புறம் செல்லுவாள் என்று எண்ணிக்கொண்டே நரேந்திரரும் தேவகியும் இருந்தார்கள்.

"சென்னை எப்போதும் உஷ்ணம் மிகுந்திருக்கிறது. இங்கிருப்பதற்கு எனக்கு இஷ்டமே இல்லை" என்று தேவகி பொதுவாய்ச் சொன்னாள்.

"உனக்கு இங்கிருக்க விருப்பமிருக்குமா; காரைக்காலில் மீன்பிடிக்கும் செம்படவர்கள்கூட இருந்தால் உனக்குத் திருப்தியாயிருக்கும்!;' என்று அகிலாண்டம்மை கடுகடுத்த முகத்துடன் பல்லைக் கடித்துக்கொண்டு கூறினாள்.

தேவகியின் முகம், இந்த வார்த்தைகளைக் கேட்டதும், ஒரு விதமான மாறுதலடைந்ததை நரேந்திரர் கவனித்தார்.



## 23. சைதாப்பேட்டை விஷயங்கள்



அகிலாண்டம்மை எப்போது வெளியே செல்லுவாள் என்று நரேந்திரர், தேவகி இருவரும் எதிர் பார்த்துக்கொண்டிருந்த சமயத்தில், ஒரு வேலைக்காரன் கூடத்திற்குவந்து தையற்காரன் கூப்பிடுவதாய் அகிலாண்டம்மையிடம் கூறினான். உடனே அகிலாண்டம்மை எழுந்து வெளியே சென்றாள்.

"நரேந்திரரே, ஏதோ அபாயகரமான சம்பவம் நேரிடப் போகிறதென்று எனக்குப் பயமாயிருக்கிறது! நேற்றிரவு நான் உம்முடைய வீட்டுக்கு வந்திருந்தேன், ஒரு சமாசாரம் உம்மிடம் சொல்லுவதற்காக நான் அவ்வளவு அவசரமாய் வந்தேன்" என்று அகிலாண்டம்மை வெளியே சென்றவுடன் தேவகி நரேந்திரரிடம் சொன்னாள்.

"என்ன சமாசாரத்தைக் குறித்து என்னிடம் பேச விரும்பினாய்?" என்று நரேந்திரர் கேட்டார்.

"உதயகுமாரி காணமற் போய்விட்டாள்! அவ் விஷயத்தையே நான் சொல்ல விரும்பினேன்" என்று தேவகி கூறினாள்.

"என்ன! உதயகுமாரியா காணமற்போய்விட்டாள்! உனக்கு அவ்விஷயம் எப்படித் தெரியும்?" என்று நரேந்திரர் ஆச்சரியத்தோடு வினவினார்.

"ஞானசேகரர் சைதாப்பேட்டைக்குச் சென்றிருந்தார். அவர் அங்கு சென்றதை உதயகுமாரி அறிந்துகொண்டு எங்காவது ஓடிமறைந்தாளோ, அல்லது அவளுடைய விரோதிகள் கையில் அகப்பட்டுக்கொண்டாளோ, நிச்சயமாய்த் தெரியவில்லை. ஆனால் அவள் சைதாப்பேட்டையிலிருந்து ஒருவருக்குந்தெரியாமல் ஓடிப்போனாள் என்பது மாத்திரம் நிச்சயம். அவ்வூர் போலீஸார் அவளைத் தேடித் திரிகிறார்கள்" என்று தேவகி சொன்னாள்.

பூபேந்திரர் திடீரென்று மைலாப்பூரைவிட்டு வெளியூர் சென்றதும், உதயகுமாரி சைதாப்பேட்டையை விட்டு மறைந்துபோனாள் என்று தேவகி சொன்னதும் நரேந்திரருக்குப் பெரும் மனக்கலக்கத்தையும் சந்தேகத்தையும் உண்டாக்கி விட்டன. உதயகுமாரியோடு சேர்ந்துகொண்டு பூபேந்திரர் சென்றாரா, அல்லது அவள் போய்விட்டதை அறிந்து அவளைத் தேடிக்கொண்டு சென்றாரா, அல்லது உதயகுமாரி மறைந்த சங்கதியை அறியாது வேறு ஏதாவது தன் சொந்த வேலையை உத்தேசித்துச் சென்றார் என்று பலவிதமான ஆசங்கைகள் நரேந்திரருக்குத் தோன்றின.

"போலீஸார் அவளைத் தேடித் திரிகிறார்களா!" என்று நரேந்திரர் அதிசயத்தோடு கேட்டுவிட்டு "தேவகி! உனக்குத் தெரிந்த சங்கதிகளை விவரமாய்ச் சொல்லு ஞானசேகரர் இப்போது எங்கிருக்கிறார்?" என்று மீண்டும் வினவினார்.

"ஓ! ஞானசேகரர் மறுபடியும் சைதாப்பேட்டைக்குச் சென்றுவிட்டார். வைத்தியரே! நான்

கேள்விப்பட்ட மட்டில் கிடைத்த சங்கதிகளைத் திரட்டிச் சொன்னால், பின்வருமாறு சொல்லலாம்;—நாலைந்து நாளைக்கு முன்பு உதயகுமாரி அதிகாலையில் எழுந்து நல்ல உடைகளை அணிந்துகொண்டு ஊருக்கு வெளிப்புறத்திலிருக்கும் ஒரு பூம்பொழிலுக்குச் சென்றுளாம். அங்கே பூபேந்திரர் வழக்கம்போல் அவள் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் என்று தெரிகிறது. அங்கே எட்டுமணி வரையில் இன்பம் பயக்கும் காதற்சொற்கள் பலப்பல பேசிக்கொண்டிருந்துவிட்டு வீட்டுக்குத் திரும்பி யிருக்கவேண்டும். அங்ஙனம் திரும்பி வந்துகொண்டிருந்தபோது அவர்களிருவரும் ஒரு வயோதிகனைத் தற்செயலாய் சந்தித்திருக்கவேண்டும் என்று புலப்படுகிறது. அந்த வயோதிகர் உதயகுமாரியை நோக்கியவுடன் அவள் யார் என்று தெரிந்துகொண்டார். உடனே அவ்விருவரையும் பின்தொடர்ந்து அவர் சென்றார். பூபேந்திரர், அந்த வயோதிகர் பின்பற்றி வருவதைக் கண்டும் சந்தேகம் ஏதும் நினையாமல் தம் வீடு சமீபித்தவுடன் வேறொரு வழியாய்த் திரும்பிச் சென்றார். அந்த வயோதிகர் உதயகுமாரி வீடுவரையிற் சென்று அவள் தன் வீட்டுக்குள் நுழைந்தவுடன் அவ்வீட்டின் கதவிலக்கத்தை ஒரு கடிதத்தில் குறித்துக்கொண்டு ஒருவகையான புன்சிரிப்பு சிரித்துக்கொண்டே போய்விட்டாராம். ஞானசேகரர் இவ்வளவு விஷயங்களையும் கவனித்துக்கொண் டிருந்தாராம். ஆனால் அச்சமயம் விகல்பமாக ஏதும் நினைக்கவில்லையாம்'' என்று கூறி, மீண்டும் தொடர்ந்து சொல்லுவாள்: ''மறுபடியும் மாலை ஆறுமணி சுமாருக்கு உடை உடுத்துக்கொண்டு உதயகுமாரி பூபேந்திரர் வீட்டை

நோக்கிச் சென்றுளாம். அவருடைய வீட்டுக்கும் அவள் கடைசியாகச் சென்ற இடத்துக்கும் மத்தியில் உள்ள தூரம் சுமார் நாற்பது, ஐம்பது அடிக்குள் ளிருந்தும், அவள் அவர் விட்டுக்குச் செல்லவில்லை. வழியின் இடையிலேயே மறைந்து விட்டாள். எங்கே சென்றாள், ஏன் சென்றாள் என்பதை அறிந்துகொள் ளுதல் அசாத்திய மென்று தெரிகிறது.''

“பூபேந்திரர் வீட்டுக்குப் போகவில்லையா அவள்! என்ன! நீ சொல்லுவது ஒன்றும் எனக்கு விளங்க வில்லையே!'' என்று திடுக்கிட்டு நரேந்திரர் கேட்டார்.

“உதயகுமாரி மறைந்துபோனாள்! ஏதோ ஒரு சாலை ஓரமாய்த் திரும்பி அவள் சென்றதை ஒரு ஸ்திரீ பார்த்துக் கொண்டிருந்தாளாம். அதன் பிறகு அவள் எந்த வழி சென்றாள் என்று தெரியவில்லையாம். திடீ ரென்று மறைந்துவிட்டாளாம். பூபேந்திரர் வழக் கம்போல் பொழிலில் உதயகுமாரிக்காகக் காத்திருந் தார். அவள் அன்று வராமற்போனதைக் கண்டு அவள் வீட்டுக்குச் சென்றார். அங்கே கேள்விப்பட்ட சங்கதி பூபேந்திரருக்கு மிகுந்த ஆச்சரியத்தை விளைவித் தது. தனக்கு மிகவும் நெருங்கிய உறவினர் ஒருவர் வெளியூரில் அபாயகரமான நோயினால் வருந்துவதா கத் தந்திவந்ததால் உதயகுமாரி உடனே புறப்பட்டு ஒருவருக்கும் சொல்லாமல் போய்விட்டாளென்றும், அவளுடைய உத்தரவின்மேல் ஒரு மனிதன் வீட்டு வாடகையைக் கொடுத்துக் கணக்குத் தீர்த்துவிட்டு அவளுக்குச் சொந்தமான சாமான்களை அப்புறப் படுத்தி விட்டான் என்றும், அவ்வீட்டின் சொந்தக் காரி சொன்னாள். ஆகவே மிகுந்த ஆவலோடு தன் காதலியைச் சந்திப்பதற்காகச் சென்ற பூபேந்திரர்

அதிசயமும் அச்சமும் வருத்தமும் கலந்து தோன்ற ஏதும் அறியாது ஸ்தம்பித்து நின்றார். உதயகுமாரி காணாமற்போனது முதல் அரிய மாணிக்கத்தை இழந்துவிட்ட நாகம்போல் பூபேந்திரர் மிகுந்த மன வருத்த மடைந்திருக்கிறார் என்று தெரிகிறது. அவர் இரண்டு நாள்வரையில் சைதாப்பேட்டையி லிருந்து கொண்டு உதயகுமாரி சென்றிருக்கும் இடத்தைக் கண்டுபிடிப்பதற்குப் போலீஸாருடன் கலந்து வேலை செய்தார். ஆனாலும், பிரயோஜன மில்லாமற் போய் விட்டது. அவள் எங்கே சென்றாள் என்பது எவ ராலும் அறிந்து கொள்ளமுடியாத ஒரு மாயமாகவே இருக்கிறது. அந்த வயோதிகனைப்பற்றி பூபேந்திரர் சந்தேகம் கொள்ளவில்லை யாகையால், அவனுடைய வருகையே உதயகுமாரி ஓடிப்போனதற்குக் காரண மாயிருக்கக் கூடுமென்று அவர் நினைக்கவில்லை'' என்று தேவகி விடைபகர்ந்தாள்.

"ஒரு சமயம் விரோதிகள் கையில் அகப்பட்டு, அவள் ஏதாவது ஆபத்துக்கு உள்ளாயிருக்கக் கூடுமோ?'' என்று மிகுந்த பயத்துடன் நரேந்திரர் தேவகியை வினவினார்.

"அவ்விதமிருந்தாலும் இருக்கலாம். ஆனாலும், அவள் தன் இஷ்டத்தின்மேல் ஓடிப்போயிருக்கிறாள் என்றே எனக்குத் தோன்றுகின்றது'' என்று தேவகி சொன்னாள்.

"போலீஸார் உதயகுமாரியை எதற்காகத் தேடுகிறார்கள் என்பதைப்பற்றி ஞானசேகரர் உன்னிடம் ஏதாவது பிரஸ்தாபித்தாரா?'' என்று வைத்தியர் வினவினார்.

"முதலில் மிகுந்த கவலையோடுதான் உதயகுமாரியைக் கண்டுபிடிப்பதில் போலீஸார் முனைந்திருந்தார்கள். ஆனால் பிற்பாடு 'காதல் சம்பந்தமான விஷயம்' என்று அவர்கள் அலட்சியம் செய்துவிட்டார்கள். பூபேந்திரரைவிட்டு விலகிப் போகவேண்டுமென்று அவள் விரும்பினாள் என்றும், அந்த விருப்பமே அவளை ஓடிப்போகும்படி செய்தது என்றும் அநேகர் நினைக்கிறார்கள்; அவ்விதமாகவே போலீஸாரும் கருதுகிறார்கள்" என்று தேவகி விடை இறுத்தாள்.

பூபேந்திரர் எங்கே சென்றார் என்னும் யோசனை நரேந்திரர் மனத்தில் ஆழ்ந்து நிகழ்ந்தது. ஏற்கனவே ஒருமுறை அவள் ஸ்ரீரங்கத்திலிருந்து வைதேகி அம்மாவுடன் ஓடிவந்தவள் என்பது அவருடைய ஞாபகத்துக்கு வந்தது. பூபேந்திரரிடம் சென்னையில் காதல்கொண்டவள்போல் நடித்து இறுதியில் அவருக்குச் சொல்லிக்கொள்ளாமல் அவள் ஓடிப்போனதையும் நரேந்திரர் மறந்துவிடவில்லை. ஆங்கில ஸ்திரீயைப்போல் உடையணிந்து "மிஸ் ரோஸ்பரி" என்று புனைபெயர் வைத்துக்கொண்டு ஐயராம் வீட்டில் அவள் நடித்துவந்தது வைத்தியரின் ஞாபகத்தை விட்டு அகலவே இல்லை. உதயகுமாரியும், தேவகியைப் போலவே, மாயாநிலத்திற்றோன்றிய ஒரு சூர் மகள்போல் நரேந்திரருக்குத் தோற்றினாள். அவள் ஒரு மாயக்காரி என்றே அவர் நினைத்தார்; அவர் நினைத்தற் கேற்ப அவளுடைய செய்கைகளும் மாயச் செயல்களாகவே இருந்தன.

"எனக்குத் தெரிந்தமட்டில் தேவகியே, அவள் பூபேந்திரருக்குப் பயந்து ஓடுவதற்கு நியாயம் ஏதும்

காணப்படவில்லை. ஏனெனில், அவர்கள் இருவரும் ஒருவரோடொருவர் மிகுந்த அன்பு பூண்டு ஒழுகினார்கள். "காதல்" என்னும் அரிய அமிழ்தத்தை உதய குமாரியும் பூபேந்திரரும் அருந்தி மகிழ்ந்ததைப் போல் இப்பூவுலகத்தில் வேறு எவரும் அனுபவித்திருக்க மாட்டார்கள். அவர்கள் இருவரும் எல்லா வகையிலும் ஒன்றுபட்டவர்களாகவே இருந்தார்கள். ஆதலால் என் மைத்துனருக்குப் பயந்து அவள் ஓடி விட்டாள் என்பதை நான் ஒருகாலும் நம்பேன்" என்று நரேந்திரர் வற்புறுத்தி உரைத்தார்.

ஆம்; வாஸ்தவந்தானே? காதலின் மகிமையையும் அதற்கு இருக்கும் அதியற்புதமான சக்தியையும் யாரே முற்றும் எடுத்துரைக்க வல்லார்? அந்த நந்தா மணி விளக்கால் பெறப்படும் திவ்விய அன்பு ஒளியை நரேந்திரர் தம் மனக்கண்ணால் கூர்ந்து பார்த்து அனுபவிக்கும் தருணத்தில் இருந்தாராதலால், தேவகி உதயகுமாரி விஷயத்திற் சொன்ன சங்கதிகளை நம்புவதற்கு அவரால் முடியவில்லை. காதலின் மாட்சிமையை இனிதறிந்த யார்தான் நம்புவார்கள்? ஒருவரும் நம்ப மாட்டார்கள்! என்? காதலின் பெருமை அத்தகையதன்றே! கா—த—ல் ஆ! மூன்று எழுத்தாலாகிய இந்த வார்த்தை மிகச் சிறிதாயிருப்பினும் அது தனக்குள் எவ்வளவு அர்த்தங்களை அடக்கிக் கொண்டிருக்கிறது! எமதரிய சகோதரர்களே, பாருங்கள்! இவ்வார்த்தை மனத்தால் நினைக்கப்படினும், வாயால் உரைக்கப்படினும் ஓர்வகையான இன்பத்தைப் பயக்கும் மாட்சி வாய்ந்திருக்கின்றதென்றால், அதனை ஆன்ம அனுபவசித்தமாய்ப் பெற்றாரின் இன்பம் பேரின்பமே என்பதில் தடையுளதோ? ஒரு ஆன்மா

வினிட மிருந்து மற்ற ஆன்மாக்கள் வேண்டிநிற்கும் அன்பு என்னும் ஆராவமுதமும், ஒவ்வொரு ஆன்மாவும் தானே வேண்டிநிற்கும் இன்பம் என்னும் தேவாமிர்தமும் காதல் என்பதில் ஒருங்கே அமைந்திருக்கின்றன வென்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ? காதல் என்பது எல்லாம் வல்ல இறைவனின் அருள் ஒளியிலிருந்து உண்டாவதாதலாலும், அது தெய்வீக சம்பந்தம் பெற்றிருப்பதாலும், பேரலைவீசும் இருங்கடல் மத்தியில் அகப்பட்டுத் தவிக்கும் ஒருவனுக்கு தெய்வசங்கற்பத்தால் மிதவைக்கட்டை ஒன்று அகப்படுவதுபோல, துக்கமுந் துயரமும், கஷ்டமும் நஷ்டமும் நிறைந்திருக்கும் உலக வாழ்க்கை என்னும் பெரிய சமுத்திரத்தில் அகப்பட்டு உய்யும் வகை காணாது அழுதுபுலம்பும் ஜீவான்மாக்களுக்கு ஓர் மிதவைக் கட்டையைப்போல் அது இருப்பதாலும், அன்பும் இன்பமுமே அதன் சொரூபம் என்று கூறுவதால் நேரிடும் இழுக்கென்னவென்று விடுக்க. இன்னும் உண்மைக்காதலின் இயல்பு விளங்க விளக்க வேண்டுமானால், அதற்கோர் சிறிய உதாரணங் கூறுவோம்: ஒத்த அன்பும், ஒத்த குணமும், ஒத்த செல்வமும், ஒத்த கல்வியும், ஒத்த குலமும், ஒத்த வயதுமுடைய காதலர் இருவர் தம்மைத்தாமே வலிந்தெதிர்ப்பட்டு முதலில் மனத்தாலேயே விவாக உரிமையைப்பூண்டு, அதன் பிறகு உற்றார் உறவினரின் மகிழ்ச்சிக் காகவும், ஊராரின் திருப்திக்காகவும் உலகவழக் கத்தை அனுசரித்து விவாகம் செய்துகொள்ளுகிறார்கள் என்பதாக நாம் வைத்துக்கொள்ளுவோம். "விவாகம்" என்னும் அந்த உரிமையைப் பெற்று, கணவனாகவும் மனைவியாகவு மிருந்து, அந்த இரண்டு

காதலர்களும் இல்லறம் புதுவதாக நடத்தத் தொடங்குகும்போது அவர்களுடைய ஜீவியதசையில் திடீரென்று ஏற்படும் மாறுதல்களைக் கூர்ந்து கவனியுங்கள்! அப்போது காதலின் மாட்சியை நீங்களே தெரிந்து கொள்ளுவீர்கள்! சகோதரர்களே! தற்காலத்தில் நம் சென்னை ராஜதானியில் பெரும்பாலும் நடைபெறும் விவாகங்களைக் குறித்து யாம் கூறவில்லை. ஏனெனில், அவைகள் "விவாகம்" என்னும் பெயர் பெறுதற்குச் சிறிதும் யோக்யதை அற்றவைகளாய், "அவிவேகம்" என்னும் பெயருக்கே உரிமையுடையவைகளாய் இருக்கின்றன! உதாரணமாக உயர்ந்த குலத்தோர் என்று கூறிப் பெருமை பாராட்டிக்கொள்பவர்களும், அறிவு விருத்தியும் கல்வியறிவும் நிரம்ப வாய்ந்தவர்களென்று ஏனையஜாதியாரால் பிறழ உணரப்படுபவர்களுமாகிய பிராமணர்களை எடுத்துக்கொள்ளுவோம். "வரதட்சணை" என்னும் கொடிய வழக்கம் அவர்களுக்குள் வரவர எவ்வளவு அதிகமாகி வருகின்றது என்பதை நீங்களே கவனித்துப் பாருங்கள்! பெண்வீட்டுக்காரர் தங்கள் பெண்களையும் கொடுத்துப் பெருந் தொகையான பொருளையும் கொடுக்கவேண்டியவர்களாய் இருக்கின்றார்கள்! பெண் வீட்டார் பரம ஏழையாக இருந்தபோதிலும் கடன் வாங்கியாவது அல்லது தங்களுக்குள்ள வீடுவாசல்களை விற்றுவது மணமகனுக்கு ஆயிரம் இரண்டாயிரம் என்று கொடுக்க வேண்டுமாம்! இதுவென்ன அநியாயம்! அதிலும் சர்வகலாசாலைப் பரிட்சைகளில் தேறி உயர்தரப் பட்டம் பெற்ற அறிவீனர்கள் பலர் செய்யும் அநியாயம் மனத்தால் நினைப்பினும் அருவருப்புண்டாக்கும் இயல்புடையதாயிருக்கிறது. பரம ஏழைகள்

என்று தெரிந்தும் பெண்வீட்டுக்காரரை நிர்ப்பந்தப்படுத்திப் பெருந்தொகையான வரதட்சணையை இவர்கள் வாங்குகிறார்கள். கட்டாயத்தின்மேல் பணம் பறிக்கும் முறை ஒன்றுதான் இவர்கள் படித்த கல்வியின் பயன்போலும்! பணத்துக்காக விவாகம் செய்துகொண்டால் தங்களுக்கும் தங்கள் மனைவிமார்களுக்கும் பரஸ்பர அன்பும், உண்மைக் காதலும் எங்ஙன மேற்படும் என்பதை இவர்கள் சிந்தியாததேனோ! உயர்ந்த வகுப்பில் இவர்கள் படித்த மனோ தத்துவ சாஸ்திரங்களும், ஆன்ம தத்துவ நூல்களும், மனத்தையும் ஆன்மாவையுமே பெரும்பான்மை சார்ந்தும், சரீரத்தைச் சிறுபான்மை சார்ந்தும் நிலைபெறுவதான காதல் விஷயமாய் இவர்களுக்கு ஒன்றும் போதிக்கவில்லையா? தங்களுடைய வாழ்நாளைச் சிறப்பிக்கவும், சுகத்தை மிகுதிப்படுத்தவும், இன்பத்தைப் பெருகச்செய்யவும் இன்றியமையாது வேண்டப்படுகிற மனைவிமார்களை, கூலிக்காக சுடலை காக்கும் வெட்டியான் உயிரற்ற பிணங்களை வாங்கிச் சுடுதற்குச் சம்மதித்தல் போல, பணத்துக்காக வாங்குவார்களானால் கற்றுத் தேர்ந்த இவர்களுக்கும் கல்லாத முழுமூடனாகிய ஒருவனுக்கும் வித்தியாசம் ஏதும் இருக்கிறதென்று நினைக்க இடமில்லையே! பெண்வீட்டாரும் எவ்விதமாவது பருவமடைவதற்கு முன்பு தங்கள் பெண்ணை ஒருவனுக்கு விவாகஞ் செய்து கொடுத்துவிடவேண்டும் என்னும் அநாவசியமும் மதியீனமுமான கொள்கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பெண்ணின் பிற்கால சுகத்தையும் க்ஷேமத்தையும் ஒரு சிறிதும் கருதாதவர்களாய், உயிரற்ற பிணங்களை நாம் மயானக் காவலனிடம்

தள்ளிவிடுவதைப்போல், தங்கள் பெண்ணை ஒரு கணவனிடம் தள்ளிவிடுகிறார்கள்; அப்படித் தள்ளப்படும் பெண்களில் பெரும்பாலார் உயிர்ப்பிணங்களாயும், நடைப்பிணங்களாயும் இருக்கிறார்களே தவிர வேறில்லை. இப்படி நடைபெறும் விவாகங்களால் உண்மைக்காதல் புலப்படுமா? பிராமணர்கள் அல்லாத பிள்ளைமார்கள், முதலிமார்கள், செட்டிமார்கள் இவர்களுக்குள் நடைபெறும் விவாகங்களும் பெரும்பான்மையும் வெறுக்கத்தக்கவையாக இருக்கின்றன. இவர்களுக்குள்ளும் *சைவர்களாக இருக்கும் வகுப்பாருள் விவாகமுறை மிகவும் சீர்கெட்டிருக்கிறது. ஒரு பெண்ணுக்கும் ஒரு புருஷனுக்கும் விவாகம் செய்யும்படி இவ்வகுப்பாருள் நேர்ந்தால் பல இடையூறுகள் கூடவே நேரிடுகின்றன. முதலாவது இவர்கள் தங்கள் உறவின்முறையாருடைய சம்மதத்தை வேண்டிநிற்கிறார்கள். ஒரு உறவினர் சொல்லும் அபிப்பிராயப்படி மற்றொரு உறவினர் சொல்லமாட்டார். ஒருவர் "அந்த வழி கூடாது; அது கொஞ்சம் மட்டம்" என்பர்! வேறொருவர் "இல்லை; இல்லை! அதை முதல் தரம் என்று சொல்ல முடியாவிட்டாலும் கூடியவரையில் பாதகமில்லை! அவருடைய சிற்றன்னையின் பேத்தி மகளைக் கொடுத்த இடம் இரண்டுபடி இறக்கம்!

---

* "சைவர்கள்" என்னும் இந்த வார்த்தை இங்கு மாமிச போஜனத்தை சில தலைமுறைகளாக ஒதுக்கிவிட்டு மரக்கறி போஜனம் செய்துவருகிறவர்களைக் குறிப்பதாகும். ஆனால், சிவபெருமான் ஒருவரே முழுமுதற்கடவுள் என்று கொண்டு சைவமதத்தை அனுஷ்டிக்கும் வகுப்பாரை நோக்கியே இந்த வார்த்தை முதலில் உண்டாயிற்று. மக்கள் எல்லோருமே ஓர் காலத்தில் மாமிச பட்சணிகளாய் இருந்தார்களென்பது இங்கு கவனிக்கற்பாலது.

அதைத்தான் சிறிது யோசிக்கவேண்டியிருக்கிறது!'' என்பார் மற்றொருவர்! "அது கூடவே கூடாது! இஷ்டமிருந்தால் நீங்கள் செய்துகொள்ளுங்கள்! நான் சாப்பாட்டுக்கு வரமாட்டேன்!'' என்பார் பிறி தொருவர். நாகப்பட்டினம் ஆவணி மூலத்திலும், திருவாரூர் குருபூசைமடத்திலும் அவரைப் பங்க்தியில் வைத்துச் சாப்பாடு போடுகிறார்கள் என்று நிச்சய மாய்த் தெரிந்தால் அவர் வீட்டுப் பெண்ணைக் கொள் ளலாம்!'' என்பார் இன்னொருவர். ஆங்கில வைத்தி யர்கட்கு நோயாளியின் இயல்பை அறிய சீதோஷ்ண மானி என்னும் கருவி உபயோகப்படுதல் போல, ஒருவர் உயர்ந்த குலமா அல்லது தாழ்ந்த குலமா என்பதை அளந்தறிவதற்கு இவருக்கு ஆவணிமூலச் சாப்பாடும், குருபூஜை மடத்துச் சாப்பாடும் கருவிக ளாக இருப்பது விந்தையினும் விந்தையே!

இவ்விதம் சாதாரணமான உறவினர்கள் வருத்த மறியாது கூறும் வெற்றுரைகளை அனுசரித்து சைவர் களுக்குள் விவாகங்கள் செய்ய நேரிடுவது முதல் இடையூறாகும். இனி நெருங்கிய உறவினர்களுக்குள் சம்பந்தம் ஏற்படவேண்டுமே தவிர வெளியிற் சம்பந் தம் செய்தல் கூடாதென்னும் பிடிவாதமுடையோர் ஒரு சிலர். மணமகன் கற்றுத் தேர்ந்தவனாயும், நற்குண நற்செய்கை உடையவனாயும், தன்னுடலின் ஓர் பாகமாகவே, இல்லாள் இருக்கின்றாள் என்பதை உணர்ந்து அவளைக் கௌரவமாயும் கண்ணிய மாயும் நடத்தும் மாட்சியுடையவனாயும், இல்லற மென்னும் நல்லறத்தை செம்மையாய் நடத்தக் கூடியவனாயும் இருக்கின்றானா இல்லையா என்பதை ஒரு சிறிதும் கவனியாமல், மணமகனுக்கு ஆஸ்தி

எவ்வளவு இருக்கிறது. அவன் எத்தனை ரூபாய்க்கு பெண்ணுக்கு நகை போடுவான், பெண்வீட்டாருக்கு எவ்வளவு பணங்கொடுப்பான் என்னும் இவை போன்ற பிரச்னைகளையே முக்கியமாய்க் கவனித்து, ஒருவன் எழுத்துவாசனை அறியாத நிரட்சரகுட்சியாயிருந்தாலும், தீயகுணங்களுக்கெல்லாம் ஒரு பெரிய களஞ்சியம்போ லிருந்தாலும், ஒரு குதிரைக்காரன் தன் குதிரையை எவ்வளவு அன்புடனும் பட்சமுடனும் நடத்துகிருனே அவ்வளவு அன்புடனும் பட்சமுடனுமாவது தன் மனைவியை நடத்தவேண்டுமென்னும் உணர்ச்சி சிறிது மின்றி வாயுபுத்திரன் கைகளிலே அகப்பட்ட பூமாலையைப்போல் மனைவியைக் கொடுமையாய் நடத்துகிறவனு யிருந்தாலும், அவன் ஆயிரம் ரூபாய்க்கு நகைபோடுகிறே னென்று சொன்னால், உடனே தங்கள் பெண்ணை அவனுக்குக் கொடுக்க இசையும் பெற்றோர்கள் இவ்வகுப்பாருள் அளவுக்கு அதிகமாக இருக்கின்றார்கள்! கடைசியில் பெண்கள் தங்கள் ஆயுள்காலம் முழுமையும் கண்ணீருங் கம்பலையுமாய் இருக்கிறார்கள். ஒற்றுமையில்லாத புருஷனுடன் வாழ்வதிலும் உயிர் துறத்தல் நலமென்று எண்ணி எத்தனை ஸ்திரீகள் தற்கொலை செய்து கொண்டிருக்கிறார்கள்! எத்தனை பெண்கள் தங்களைத் தாங்களே சுட்டுக்கொண்டு இறந்திருக்கிறார்கள்! எத்தனை புருஷர்கள் இரக்கம் சிறிதுமின்றி தங்கள் மனைவிமார்களைக் கொன்றிருக்கிறார்கள்! எத்தனை ஸ்திரீகள் அதிருப்தியாலும் வருத்தத்தாலும் புருஷனை விடுத்து அப்புறப்பட்டிருக்கிறார்கள்! இவ்வளவுக்கும் காரணமென்ன? மணமகன், மணமகளுடைய நோக்கத்தை அறிந்து விவாகம் செய்யாமல் தங்கள் சௌகரியத்

தையே பெரிதாகக்கொண்டு பெற்றோர்கள் விவாகம் செய்விப்பதன்றோ? இப்படிப்பட்ட விவாகங்களால் காதல் என்பதன் மாட்சி விளங்காது ஆனால் எல்லா வகையிலும் சிறந்தவர்களாயும், பரஸ்பர அன்புடைய வர்களாயுமுள்ள ஒரு மணமகனுக்கும், மணப்பெண்ணுக்கும் 'விவாகம்' ஒரு உபகார சக்தியாயிருந்து காதல் என்னும் சஞ்சீவியை எவ்விதம் அவ்விருவருள்ளும் வளர்த்துவருகிற தென்பதைக் கவனியுங்கள்! புருஷன் இயற்கையாகவே வன்மையுடையவனும், சுதந்தரமுடையவனும் இருக்கிறான்; ஸ்திரீயோ இயற்கையாகவே மென்மையுடையவளாயும், பிறரைச் சார்ந்திருக்க வேண்டியவளாகவும் இருக்கின்றாள். இவ்விதம் இவர்களிருவருடைய இயல்பும் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருப்பினும் அந்த மாறுபாடு இருவரையும் ஒன்றுபடுத்துவதாயிருக்கிற தென்பதை உண்மைக் காதலர்களே அறிவார்கள். காதல் நிறைந்த கணவன் இருக்கும் வரையில் எவ்வளவு துன்பங்கள் நேரிடினும், துக்கங்கள் நேரிடினும் மனைவி கஷ்டமென்பதை அறியாமல் சுகமாகவே இருப்பாள்; அங்ஙனமே காதல் நிறைந்த மனைவியுட னிருக்கும் வரையில் புருஷன் துன்பம் என்பதை அறியாமல் இன்புற்றிருப்பான். ஒருவன் தான் முன்னொரு காலத்திலிருந்த உயர்ந்த பதவியையும், அந்தஸ்தையும் இழந்து மிகத் தாழ்மையான நிலையி லிருந்தபோதிலும், உண்மைக் காதலுட னிருக்கும் மனைவி தன்னருகில் இருக்கும்பட்சத்தில் தன் கவலையை அடியோடு மறந்து இன்புறுவான். ஒருவன் வெளியிற் சென்று வேலைசெய்து களைத்து ஆயாசத்துடன் வீட்டுக்குத் திரும்பியவுடன் அவனுடைய ஆயாசம் நீங்

குவதற்கு, அவனை எதிர்சென்று உபசரித்து இன்மொழி கூறும் இல்லாளன்றே காரணம்! எத்தனையோ ஸ்திரீகள் தங்கள் கணவன் மீதிருக்கும் காதலால் தங்களுடைய அந்தஸ்தையும், இயல்பையும் ஒரு பொருட்படுத்தாமல் அவன்பொருட்டு எதையும் மனமுவந்து செய்துவருகிறார்கள்! புருஷனுடைய கோபத்தை அடித்துவிரட்டும் பார்வை, பெண்களின் கண்களில் எவ்வளவு விசித்திரமாய் அமைந்திருக்கிறது! கவலையைப் பஞ்சாய்ப் பறக்கவடிக்கும் சக்தி மனைவியின் அமிழ்தினும் இனிய சொல்லுக்கு இருப்பதுபோல வேறு எதற்கேனும் உளதோ! புருஷன் எவ்வளவு சஞ்சலத்தோடு இருப்பினும், அன்புடை மனைவியின் மென்கரம் மேற்பட்ட மாத்திரத்தில் அவனுடைய கவலை கதிரவன் முன் பனியென அறவே நீங்குகிறதன்றே! இவ்வளவுக்கும் காரணம் என்ன?—உண்மைக் காதல்! கிடைத்தற்கருமையான இதனைப் பெற்று இல்லறம் நடத்திவரும் ஸ்திரீ புருஷர்களே உலகத்தில் அனுபவிக்கக்கூடிய இன்பத்தினுள் மேலான இன்பத்தை அனுபவிப்பவராவார்கள்! ஏனையோர் பிறவி பயனற்ற தொன்றேயாம். நிற்க, இனி நாம் நம் கதையினைத் தொடர்ந்து செல்லுவோம்.

"உதயகுமாரியைப் பின்தொடர்ந்து சென்ற அந்த வயோதிகன்மீது ஞானசேகரருக்கு சந்தேக மிருக்கிறது. அவன் முகத்தில் ஒருவகையான கெட்ட குறி காணப்பட்டதென்று ஞானசேகரர் சொல்லுகிறார். அவள் ஓடிப்போனதைக் கவனித்துக்கொண்டே இருந்து அவன் அவளைப் பின்பற்றிச் சென்றிருக்கவேண்டுமென்று ஞானசேகரர் சொல்லுகிறார்'' என்று தேவகி கூறினாள்.

"அந்த வயோதிகன் யாரென்றும், அவன் பெயர் என்ன வென்றும், அவன் எந்த ஊர் என்றும் ஒருவருக்கும் தெரியாதா?" என்று நரேந்திரர் வினவினர்.

"அவனை இதற்கு முன்பு தாம் பார்த்ததே இல்லையென்று ஞானசேகரர் சொல்லுகிறார். ஆனால், அவனைப் பார்த்தால் வெளியூரான் என்று மாத்திரம் தெரிகிறதாக அவர் சொன்னார்" என்றாள் தேவகி.

"இருக்கட்டும்; ஞானசேகரர் எதற்காக சைதாப்பேட்டைக்குச் சென்றார்?" என்று திடீரென்று நரேந்திரர் கேட்டார்.

"அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல என்னால் முடியாது. எந்த நோக்கத்தோடு அவர் அங்கே சென்றார் என்பதை நான் அறியேன். சில தினங்களுக்கு முன்பு அவர் சைதாபேட்டைக்குச் சென்றார் என்று மாத்திரம் எனக்குத் தெரியும்; எதற்காக வென்று தெரியாது" என்று தேவகி விடைபகர்ந்தாள்.

"சரி; இருக்கட்டும்! ஞானசேகரர் சைதாப்பேட்டை வந்திருக்கிறார் என்பதை உதயகுமாரி அறிந்துகொண்டிருந்தால், அவருக்குப் பயந்து அவள் ஓடிப்போகும்படியான ஏது ஏதாவது உண்டோ?" என்று நரேந்திரர் மறித்து வினவினர்.

தேவகி பதில் சொல்லுவதற்குச் சிறிது தயங்கினாள். அவளுடைய கண்கள் ஒருவகையான ஊன்றிய பார்வையுடன் நரேந்திரர் கண்களைச் சந்தித்தன.

"என்னால் எப்படிச் சொல்லமுடியும். அவருடைய நோக்கத்தை அவர் என்னிடம் சொல்லவில்லையே!" என்று தேவகி நழுவினாற்போல் சொன்னாள்.

"தேவகியே! நான் கேட்கிற இந்த ஒரு கேள்விக்கு மாத்திரம் சரியான பதில் சொல்! கற்பகச் சோலைக்கு ஞானசேகரர் மறுபடியும் சென்றாரா?" என்று நரேந்திரர் வினவினர்.

"எனக்குத் தெரிந்து அவர் போகவில்லை" என்று ஒன்றிலும் படாமல் விநயமாய் தேவகி பதில் தந்திட்டாள்.

"அப்படியானால் அன்று வெடிவிபத்து நேர்ந்த போது கற்பகச்சோலை என்ன நிலைமையில் இருந்ததோ அதே நிலைமையிலா இன்னமும் பூட்டப்பட்டுக் கிடக்கிறது!" என்று ஆச்சரியத்தோடு கூவினர் வைத்தியர்.

"அப்படியேதான் அது கிடக்கிறதென்று நான் நினைக்கிறேன். ஏனெனில், மன்னார்குடிப் பக்கத்தில் தலை நீட்டவே ஞானசேகரர் அஞ்சுகிறார். அவர் திடீரென்று அங்கிருந்து புறப்பட்டுவிட்டபின்பு, அவரைப் பற்றி ஜனங்கள் பற்பலவிதமாய்த் தங்களுக்குத்தோன்றியபடி ஆச்சரியத்துடன் பேசிக்கொள்ளுகிறார்களாம்! இப்படிப்பட்ட சமயத்தில் அவர் அங்கு சென்றால் கண்டுபிடிக்கப்பட்டுவிடுவார் என்பதை நாம் அறிந்திருப்பதுபோலவே அவரும் அறிந்திருப்பாராதலால், அங்கே அநேகமாய்ச் சென்றிருக்கமாட்டார்" என்று தேவகி சொன்னாள்.

"ஆனாலும் உதயகுமாரி விஷயமாக நீ சொல்லுவது தான் எனக்கு ஆச்சரியத்தை விளைவிக்கிறது. அவளையும் பூபேந்திரரையும்போல் ஒருவர்மீதொருவர் காதல் கொண்டிருக்கும் வேறு ஸ்திரீ புருஷர்களை நான் கண்டதில்லை. அவ்வளவு அன்புரிமை பாராட்டி

வந்த அவள் பூபேந்திரரை விட்டு விலக எண்ணி ஓடிப் போனாளென்பது அசம்பாவிதம். போலீஸார் கொண்டிருக்கும் அந்த அபிப்பிராயம் சிறிதும் சரியானதன்று. அநேக விஷயங்களில் போலீஸார் உண்மையை உள்ளபடியே அறிவதற்குத் தவறுவதுபோலவே இவ்விஷயத்திலும் அவர்கள் தவறிப்போனார்கள். மேலும் சென்னை மாகாணத்திலுள்ள போலீஸ் உத்தியோகஸ்தர்களில் பெரும்பாலார்களுக்குப் போதுமான சாமர்த்தியமும், உண்மையாய் நடக்கவேண்டும் என்னும் நற்சிந்தையும், புத்திசாலித்தனமும், ஓவாது முயலும் பெருந்தன்மையும் வேண்டிய அளவு இல்லாமலிருக்கின்றன. ஆதலால், உதயகுமாரி விஷயத்தில் அவர்கள் தப்பபிப்பிராயம் கொண்டிருப்பது ஓர் ஆச்சரியமன்று" என்று நரேந்திரர் வற்புறுத்தி மீண்டும் கூறினார்.

"ஆனாலும் ஆண் துணையின்றி ஒரு பருவமங்கை தனித்து வெளிச் செல்ல மனந்துணியாள் என்பதை நீர் அறியவில்லைபோலும்! அந்த வயோதிகனுடைய சம்மதத்தைப்பெற்றே உதயகுமாரி வெளிப்பட்டிருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது" என்று தேவகி சொன்னாள்.

"ஓ! உனக்குத் தெரியாது! நல்ல பட்டப்பகலில் திடீரென்று எத்தனையோ ஸ்திரீகள் பிறரால் அபகரிக்கப்பட்டு, பின்பு எக்காலத்திலும் அகப்படாமற் போகிறார்கள்" என்று நரேந்திரர் கூறினார்.

"நரேந்திரரே! அவள் காணாமற்போன விஷயமாய் உம்மிடம் பூபேந்திரர் ஏதும் சொல்லவில்லையா?" என்று வினவினாள் தேவகி.

"இல்லை ; அவர் ஒன்றும் சொல்லவில்லை. அவர் வெளியூருக்குச் சென்றிருக்கிறார். அவரை நான் காணவில்லை" என்று நரேந்திரர் விடை அளித்தார்.

"அப்படியானால் உதயகுமாரி காணமற்போன தைப்பற்றித் தமக்கு நேரிட்டிருக்கும் கவலையைக் குறித்து அவர் உமக்கு எழுதவில்லையா, என்ன?" என்று ஆச்சரியத்தோடு தேவகி கேட்டாள்.

"இல்லை, அவர் எனக்கு அவ்விஷயமாய் ஒன் றுமே எழுதவில்லை" என்றார் வைத்தியர்.

"ஏன் எழுதவில்லை?" என்று தேவகி வினவினாள்.

"உதயகுமாரி தன் பெயரை மிஸ்ரோஸ்பரி என்று மாற்றி வைத்துக்கொண்டு ஆங்கிலேய ஸ்திரீயைப் போல் நடித்ததும், விவாகம் ஆகாதவளாயிருந்தும் விவாகம் ஆனவளைப்போல் தான் 'மிஸ்' அல்ல, 'மிஸஸ்' என்று என்னிடம் பொய் புகன்றதும் அவளைச் சந் தேகத்துடன் நோக்கும்படி என்னைச் செய்துவிட்டன வென்பதை அவர் நன்கறி வாராதலால், என்னிடம் அவள் காணமற்போனதைப்பற்றி அறிவிக்க அவர் விரும்பவில்லைபோலும்" என்றார் நரேந்திரர்.

"இருக்கட்டும், பூபேந்திரர் எங்கே சென்றிருக் கிறார்?" என்று தேவகி கேட்டாள்.

"எனக்குத் தெரியாது! தேவகி! உதயகுமாரி யைப் பின்பற்றிச் சென்ற அந்த வயோதிகன் யாரா யிருக்கலாம்? உனக்குத் தெரியுமா?" என்று வைத்தி யர் வினவினார்.

"எனக்குத் தெரியாது!" என்றாள் தேவகி.

"ஆனாலும் உதயகுமாரி பூபேந்திரரைப் பிரிந்து செல்லச் சிறிதும் துணிந்திராள். ஏனெனில் அவர்மீது அவள் அவ்வளவு காதல் கொண்டிருந்தாள்! தேவகி! சமீபத்தில் அவர் சைதாப்பேட்டையிலிருந்து எனக்கு எழுதிய கடிதத்தில 'ஒரு பெண்மணியின் உண்மைக் காதலை ஒருவன் அடைந்து விட்டானேயானால், அதைவிட அவன் இவ்வுலகத்தில் அனுபவிக்கக்கூடிய மேலான இன்பம் வேறில்லை' என்று எனக்கு எழுதியிருக்கிறார்" என்று நரேந்திரர் கூறி அக்கடிதத்தையும் சட்டைப்பையிலிருந்து வெளியே எடுத்தார். அப்படி எடுத்தபோது பொருள் விளங்காத கடிதமும் அதனுடன் வெளிவந்து தவறிக் கீழே விழுந்தது.

"ஆ! அக்கடிதத்தை என்னிடம் கொடும்! அது எங்கிருந்து உமக்குக் கிடைத்தது?" என்று ஆச்சரியத்தோடு தேவகி வினவினாள்.



## 24. கடிதத்தின் பொருள் விளக்கம்.



"தேவகியே! இந்தப் பொருள் விளங்காத கடிதம் என்னுடைய பகைவனை ஜயராமுக்குச் சொந்தமானது. ஓர் நாளிரவு சரவணன் என்பவன் என்னை வஞ்சித்து, தங்கசாலை வீதியிலுள்ள ஒரு வீட்டுக்கு அழைத்துப்போய், ஓர் கரும்பாம்பை விட்டு என்னைக் கடிக்கச்செய்து, என் உயிரை வாங்கப்பார்த்தான் என்றும், அப்போது தங்கசாலை வீதியில் நடந்த ஆரவாரம் இத்தகையதென்றும், ஏற்கெனவே விவரமாக

உன்னிடம் நான் கூறியிருக்கின்றேன் அன்றோ? அன்று தினம் அவ்வீட்டின் அறை ஒன்றில் மாட்டப்பட்டிருந்த ஜயராமின் சட்டைப் பையிலிருந்து ஒருவருக்குந் தெரியாமல் நான் இக்கடிதத்தை எடுத்தேன்' என்று நரேந்திரர் ஒருவகையான கவலையுடன் கூறினார்.

"ஆ! அப்படியா!" என்று அதிசயத்தோடு தேவகி கேட்டாள்.

"இக்கடிதத்தில் விசித்திரமான கோடுகள் கிழிக்கப்பட்டிருப்பதையும், "சூரியன்," "தனுசு," "மகரம்" என்று வரையப்பட் டிருப்பதையும் நோக்கினால், ஜோசிய சம்பந்தமான ஒரு குறிப்பைப்போல் அன்றோ இக்கடிதம் இருக்கிறது?" என்று நரேந்திரர் ஒரு சந்தேக வினா நிகழ்த்தினார்.

"ஆம்; அவ்விதந்தான் தோன்றுகின்றது!" என்று ஒருவிதமாகத் தலையை அசைத்துக்கொண்டு தேவகி சொன்னாளே தவிர மேற்கொண்டு விவரமாக ஏதும் அவள் கூறவில்லை.

ஆனாலும் இந்தக் கடிதம் தேவகியின் கவனத்தைக் கவர்ந்து அவள் மனத்தில் ஒருவகையான கவலையையும் அச்சத்தையும் உண்டாக்கிவிட்டதென்பதை அவளுடைய பார்வை தெளிவாய்க் குறிப்பிடுவதை நரேந்திரர் அறிந்துகொண்டார்.

"தேவகியே! இந்தக் கடிதம் எனக்கும் மற்றவர்களுக்கும் தன் கருத்தை எளிதில் புலப்படுத்தாவிட்டாலும், உனக்கு ஒருவாறு தன் கருத்தை விளக்கிக் காட்டுகிறதென்பதை உன் கண்ணின் பார்வை இனிது விளக்குகிறதே! தயை செய்து இக்கடிதத்தின் பொருள் யாதென எனக்குச் சொல்லக் கூடாதா? நாம் இரு

வரும் கலந்து முயன்றாலன்றி கற்பகச் சோலை அதி சயம் வெளியாதல் சாத்தியமன்று என ஏற்கெனவே நான் உனக்கு எச்சரித்திருக்கிறேன் அன்றோ? அதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு இக்கடிதத்தின் பொருள் உனக்கு விளங்கினால் அதை என்னிடம் ஒளியாமல் சொல்லி விடு" என்று நரேந்திரர் மிக நயமாய் வற்புறுத்திக் கேட்டார். தேவகி பதில் சொல்ல முதலில் தயங்கினளாயினும், பிறகு ஒருவாறு கடித விஷயத்தில் தனக்குத் தோன்றிய அபிப்பிராயத்தை வெளியிடத் துணிந்தாள்.

"சிலர் ஒன்றுகூடி ஓரிடத்தில் சந்திக்கப் போகிறார்கள். வைத்தியரே! அவர்கள் அவ்விதம் சந்திக்கப் போகும் இடத்தையும், தினத்தையும், காலத்தையும் இந்தக் கடிதம் குறிப்பிடுகிறது" என்று தேவகி, அக் கடிதத்தை உற்று நோக்கி விட்டு உரைத்தாள்.

"என்ன! நீ சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே! சிலராவது — ஒன்று — கூடவாவது — சந்திக்கவாவது!" என்று வியப்புடன் வைத்தியர் கூவிக் கேட்டார்.

"ஆம்; இந்த விஷயம் உமக்கு ஆச்சரியமாகத் தான் தோன்றும். ஆனாலும், அந்த இடத்தை இதற்கு முன்பும் எத்தனையோ முறை தெரிந்தெடுத்திருக்கிறார்கள்" என்று தேவகி சொன்னாள்.

"அப்படியானால் அந்த இடத்தை நீ அறிந்திருக்கின்றாயா, என்ன!" என்று வைத்தியர் அதிசயத்தோடு வினவினார்.

தேவகி "ஆம்" என்று சொல்லுபவளைப்போல் தலை அசைத்தாள்.

"அது எங்கே இருக்கிறது? சென்னபட்டினத்திலா?" என்று நரேந்திரர் கேட்டார்.

"இல்லை; அந்த இடம் மைசூரில் இருக்கிறது. இக் கடிதத்தின் வடமேற்கு மூலையில் *"சூரியன்" என்று வரையப்பட் டிருப்பதையும், அதற்கு நேர் எதிர் மூலையில் "15" என்னும் எண் போடப்பட்டிருப்பதையும், நரேந்திரரே, கவனியும்! அவை இரண்டும் சிலர் சந்திக்கப்போகும் நேரத்தைக் குறிப்பிடுகின்றன" என்று தேவகி சொன்னாள்.

"பெண்ணே! நான் எந்த இடம் என்று உன்னைக் கேட்டால், நேரத்தை நீ எனக்குச் சொல்லுகிறாயே!" என்று வைத்தியர் சிறித்துக்கொண்டே மீண்டும் வற்புறுத்தி வினவினார்.

"வைத்தியரே! ஆக்கப் பொறுத்த நீர் ஆறப் பொறுக்கக் கூடாதா? அவசரப் படாதீர்! ஒவ்வொரு விஷயமாய்க் கவனிப்போம்" என்று தேவகியும் சிறித்துக்கொண்டே கூறினாள்.

"சரி, இருக்கட்டும்! கடிதத்தின் வடகிழக்கு மூலையில் "மகரத்தின் தலையும்" என்றும், தென்மேற்கு மூலையில் "தனுசின் கடையும்" என்றும் எழுதப்பட்டிருக்கின்றனவே? அவைகள் எதைக் குறிப்பிடுகின்றன?" என்று நரேந்திரர் இன்னும் அதிக உற்சாகத்துடன் வினவினார்.

"வைத்தியரே! அவைகள் சிலர் சந்திக்கப் போகும் தினத்தைக் குறிப்பிடுகின்றன! தனுர் மாதம்

---

* இப்பகுதி தெளிவாக விளங்குவதற்கு இக்கதையினை வாசிப்போர் இப்புத்தகத்தின் 138-வது பக்கத்தில் காணப்படும் குறிப்புப் படத்தைப் பார்த்துக்கொள்ளல் நலமாகும்.

என்பது மார்கழி மாதம் அன்றோ? ஆகவே, "தனுசின் கடையும்" என்பது மார்கழிமாதக் கடைசி என்று பொருள்படுகிறது. தைமாதமே மகரமாதம் எனப்படுமாதலால், "மகரத்தின் தலையும்" என்பது தைமாத ஆரம்பத்தைக் குறிப்பிடுவதாகும். எனவே மார்கழிமாதக் கடைசித் தேதியிலோ அல்லது தை மாதம் முதல் தேதியிலோ பகல் பதினைந்து நாழிகைக்கு அவர்கள் ஓர் இடத்தில் சந்திக்கப் போகிறார்கள் என்பதை இக்கடிதம் குறிப்பிடுகிறது" என்று தேவகி விளக்கிச் சொன்னாள்.

"தேவகியே! இதுவரையில் நீ விளக்கிய விஷயங்களை நான் தெளிவாய் அறிந்து கொண்டேன். நாளும், நேரமும் தெரிந்து விட்டன. ஆனாலும், எந்த இடம் என்பதை அன்றோ முக்கியமாய்த் தெரிந்துகொள்ள வேண்டும். இடம் தெரியாமல் தினமும் காலமும் தெரிந்து யாது பயன்?" என்று வைத்தியர் கேட்டார்.

"நரேந்திரரே! இடமும் இந்தக் கடிதத்திலேயே குறிப்பிடப் பட்டிருக்கிறது. கடிதத்தின் நடுவில் நட்சத்திரம்போல் ஒரு புள்ளி காணப் படுகிறதன்றோ அப்புள்ளியே இடத்தைக் குறிப்பிடுவதாகும்! என்று தேவகி சொன்னாள்.

"நீ சொல்லுவது எனக்கு விளங்கவில்லை! விவரமாக எனக்கு விளங்கும்படி சொல்லு" என்று மீண்டும் வைத்தியர் தேவகியை வற்புறுத்திக் கேட்டார்.

"நரேந்திரரே! விளக்கமாகவே சொல்லுகிறேன்; கவனமாய்க் கேளும். இந்தக் கடிதத்தில் தெற்குவடக்கில் இரண்டு கோடுகளும், அவைகளின் குறுக்கே செல்

னும்படி கிழக்கு மேற்கில் இரண்டு கோடுகளும் கிழிக்கப்பட்டிருக்கின்றன அல்லவா? தெற்கு வடக்காகக் கிழிக்கப்பட்டிருக்கும் இரண்டு கோடுகளில் ஒரு கோட்டின் இரு நுனியில் "75" என்னும் எண்ணும் மற்றொரு கோட்டின் இருநுனியில் "80" என்னும் எண்ணும் கிழக்கு மேற்காய்ச் செல்லும் இருகோடுகளின் ஒரு கோட்டின் இருநுனியில் "10" என்னும் எண்ணும் மற்றொரு கோட்டின் இருநுனியில் "15", என்னும் எண்ணும் காணப்படுகின்றன. தெற்கு வடக்காய்ச் செல்லும் கோடுகள் பூமியைச் சுற்றித் தெற்கு வடக்கில் பூமத்தியரேகையையும், உத்தர துருவ தட்சண துருவங்களையும் குறுக்காக வெட்டிக் கொண்டு செல்லுவன வென்பதும், கிழக்கு மேற்காகச் செல்லும் கோடுகள் மேற்சொன்ன தெற்கு வடக்குக் கோடுகளைக் குறுக்காக வெட்டிக் கொண்டும், ஆனால் பூமத்தியரேகை, வட துருவ தென் துருவங்களுக்குக் குறுக்காகச் செல்லாமல் அவைகளுக்கு நேராகச் செல்லுவன வென்பதும் பூகோளசாஸ்திரத்தின் கொள்கைகளாம் என்பதை நீர் அறிந்திருக்கிறீரன்றோ. "75," "80" என்னும் எண்களுக்கு மத்தியில் சிலுவைபோன்ற ஓர் குறி காணப்படுகிறதன்றோ? அது 75, 80 என்னும் இரண்டு எண்களுக்கும் உட்பட்டிருக்கும் மத்திய இடத்தை குசிப்பிக்கிறது. அதாவது அந்த சிலுவைக்குறி $77\frac{1}{2}$ என்னும் கோட்டின்மேல் நிற்கிறது. இவ்விதமே "15," "10" என்னும் எண்களுக்கு மத்தியில் காணப்படும் சிலுவைக்குறி பூமியைச் சுற்றிக் கிழக்கு மேற்காய்ச் செல்லும் $12\frac{1}{2}$ என்னும் கோட்டைக் குறிப்பிடுவதாகும். இனி, நட்சத்திரக் குறி போன்ற புள்ளி எதைக் குறிப்பிடுவ

தாகு மென்றால், பூமியின் தெற்கு வடக்காய்ச் செல்லும் $77\frac{1}{2}$ என்னும் எண்ணுடைய கோடும் கிழக்கு மேற்காய் செல்லும் $12\frac{1}{2}$ என்னும் எண்ணுடைய கோடும் ஒன்றுக்கொன்று குருக்காய்ச்சென்று சந்திக்கும் இடத்தைக் குறிப்பிடுவதாகும். நீர் இந்தியா தேசத்தின் படத்தை எடுத்துவைத்துக்கொண்டு, தெற்கு வடக்காய்ச் செல்லும் $77\frac{1}{2}$ என்னும் கோடும், கிழக்கு மேற்காய்ச் செல்லும் $12\frac{1}{2}$ என்னும் கோடும் எந்த இடத்தில் சேர்ந்து ஒன்றை ஒன்று வெட்டிச் செல்லுகின்றன என்று கவனித்துப்பாரும் அப்போது அவர்கள் சந்திக்கும் இடம் எதுவென்று தெரியும்'; என்று தேவகி விஸ்தரித்துக்கூறினாள்.

"தேவகியே! நான் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை. இவ்வளவுதூரம் இக்கடிதத்தின் பொருளை விளக்கிய நீ, அக்கோடுகள் சந்திக்கும் இடம் எதுவென்பதையும் நன்றாய் அறிந்திருப்பாய் என்றே நான் நம்புகிறேன். தயைசெய்து அந்த இடம் எதுவென்பதை எனக்கு விரைவில் கூறு" என்று நரேந்திரர் அவசரப்பட்டுக் கேட்டார்.

"நரேந்திரரே! அந்த இடம் ஸ்ரீரங்கபட்டினம்" என்று தேவகி சொன்னாள்.

"ஆ! அப்படியா! இப்போது இந்தப் பொருள் விளங்காத கடிதத்தின் கருத்தை நான் நன்றாக அறிந்துகொண்டேன். பெண்ணே! நீ செய்த இப்பேருதவிக்கு நான் என்றும் நன்றி பாராட்டக்கடமைப்பட்டிருக்கிறேன். மார்கழி மாதக் கடைசித் தேதியிலோ, அல்லது தைமாத முதல் தேதியிலோ, பகல் பதினைந்து நாழிகைக்கு ஸ்ரீரங்கபட்டினத்தில் சிலர் ஏதோ ஒரு

பெரிய காரியத்தை முன்னிட்டு இரகசியமாகக் கூடப் போகிறார்கள்' என்பது இக்கடிதத்தால் வெளிப்படும் கருத்து என்பதை நான் அறிந்துகொண்டேன். தேவகியே! ஸ்ரீரங்கபட்டினத்தில் எந்த இடத்தில் என்று தெரியவேண்டுமே!'' என்று நரேந்திரர் கேட்டார்.

கடிதத்தின் பொருளை அறிந்துகொண்டவுடன் வைத்தியருக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஒரு பெரும் புதையல் கண்டெடுத்தவனைப்போல் அவர் சந்தோஷமடைந்தார்.

"வைத்தியரே! ஸ்ரீரங்கபட்டினம்கோவிலில்தான் அவர்கள் கூடுவார்கள். ஏனெனில் இரகசியக் கூட்டம் கூடுவதற்கு ஸ்ரீரங்கபட்டினத்தில் வேறு வசதியான இடம் கிடையாது'' என்று தேவகி சொன்னாள்.

"அப்படியானால் நீ ஸ்ரீரங்கபட்டினத்துக்குப் போயிருக்கின்றாயோ?'' என்று நரேந்திரர் உசாவினார்.

"ஆம்; நான் இரண்டு மூன்று முறை ஸ்ரீரங்கபட்டினம் சென்றிருக்கின்றேன்'' என்று தேவகி பதில் சொல்லிவிட்டு மேற்கொண்டு ஏதும் சொல்லாமல் தன் நாவை அடக்கிக் கொண்டாள்.

"பெண்ணே! அப்படியானால் நீயும் என்னோடு புறப்பட்டு ஸ்ரீரங்க பட்டினத்திற்கு வருகின்றாயா? இன்று மார்கழிமாதம் தேதி இருபத்தேழுதானே ஆயிற்று. அவர்கள் கூடுவதற்குக் குறிப்பிட்டிருக்கும் நாள் வருதற்கு இன்னும் மூன்று நான்கு தினங்கள் இருக்கின்றனவே. நாம் அதற்குள் அங்கே சென்று, அவர்கள் கூடி என்னவிதமான சதியாலோசனை இன்னமும் புதிதாய்ச் செய்யப்போகிறார்கள் என்

பதைக் கவனிப்போம்'' என்று நரேந்திரர் ஒரு யோசனை சொன்னார்.

நரேந்திரர் சொன்ன இந்த யோசனையைக் கேட்டவுடன் தேவகி திடுக்கிட்டு இரண்டொரு அடி பின் வாங்கினாள்.

"நானா!'' என்று பெருமூச்சுவிட்டு "நானா — நானா ஸ்ரீரங்கபட்டினத்துக்கு உம்முடன் வருவது!'' என்று நாத் தடுமாற அச்சத்துடன் தேவகி கூறினாள்.

"ஆம்; நீதான் என்னுடன் ஸ்ரீரங்கபட்டினத்துக்கு வரவேண்டும்! ஜயராமும் அவனைச் சேர்ந்தவர்களும் ஓர் நாளைக் குறிப்பிட்டு அங்கு வந்து கூடிப் பேசுவார்களென்று இக்கடிதத்தால் நமக்குத் தெரிகிறபடியால், நாம் அங்கே சென்று கவனித்து வந்தால் அவர்களுடைய உத்தேசம் என்ன வென்பதை நிச்சயமாய்த் தெரிந்துகொள்ளலாம்'' என்று வைத்தியர் வற்புறுத்தி உரைத்தார்.

"அது முடியாது. அந்த விஷயமாய் என்னை வற்புறுத்தவே வேண்டாம்'' என்று நரேந்திரருக்குத் தேவகி கண்டித்துப் பதில் சொன்னாள்.

"ஏன் முடியாது?'' என்று திடுக்கிட்டு நரேந்திரர் வினவினார்.

"ஏன் முடியாதா ? காரணத்தைச் சொல்ல எனக்கு வெட்கமாயிருக்கிறது !'' என்று பூமியைப் பார்த்தபடியே சிறிது புன்சிரிப்புடன் நாணப்பட்டு இனிய மொழியால் மொழிந்தாள். இதுவரையில் இல்லாத நாணமும் வெட்கமும் அவள் அடைந்தாள்.

"பாதகமில்லை; சொல்லலாம்!" என்று நரேந்திரர் மீண்டும் கட்டாயப்படுத்தினார்.

"நரேந்திரரே! நீரோ பெண்களின் மனத்தை வசீகரிக்கும் இயல்பினையுடைய பேரழகு வாய்ந்து விளங்குகின்றீர். தவிர உம்முடைய பருவமோ மங்கையர்களை மயக்கும் வாலிபப் பருவமாயிருக்கின்றது. நானோ இன்னமும் விவாகமாகாத பருவமங்கையாயிருக்கின்றேன் இப்படிப்பட்ட நிலைமையில் நாம் இருவரும் தனித்து வெளியூருக்குப் போதல் நியாயமாகுமா? நாம் அவ்விதம் சென்றால் ஊர் ஜனங்கள் நம்மை இழிவாகப் பேசமாட்டார்களா? மேலும்; உம்முடன் தனித்துவர எனக்கு வெட்கமாயிருக்கிறது!" என்று தேவகி கொஞ்சிக்கொண்டே கூறினாள்.

ஆ! பெண்களின் மனத்தை அளந்தறிதல் எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது! ஒரு புருஷன்மீது ஒரு பெண் எவ்வளவுதான் காதல்கொண்டவளாயிருந்தபோதிலும், எவ்வளவுதான் அன்புடையவளாயிருந்தபோதிலும், எவ்வளவுதான் விருப்பமுடையவளாயிருந்தபோதிலும் அவள் தன்னுடைய ஆசையை வெளிவிட்டு இலேசிலே பிறரிடம் சொல்லுகின்றாளில்லை; தான் விரும்பும் புருஷனிடத்திலும் வியக்தமாய்த் தன் மனக்குறிப்பை உணர்த்துவதில்லை! பெண்களினுடைய மனோவமைதி பெரும்பாலும் இவ்விதம் இருப்பதை நாம் அநுபவத்தில் பார்த்துவருகிறோமன்றோ? எத்தனையோ மங்கையர்கள், தாங்கள் குறிவைத்திருக்கும் புருஷனை அடைவதற்கு மிக அரிய முயற்சிகள் செய்திருக்கிறார்கள்; செய்து வருகிறார்கள்! ஆனாலும் அவர்களுடைய முயற்சி வெளிப்படையாய்த் தெரிவதில்லை. தாங்கள் இச்சித்த புரு

ஷர்களை அடையவேண்டி தங்களுடைய சுகத்தை எல்லாம் திரணமாக மதித்து துன்பப்படுகிற ஸ்திரீகள் எத்தனையோ பேர் இக்காலத்திலும் இருந்துவருகிறார்கள். தங்களுடைய ஜீவியத்தையும், சரீர சுகத்தையும் ஒருபொருட்படுத்தாமல் எவ்விதமான கஷ்டங்களையும் பொறுமையுடன் சகித்துக்கொண்டு எப்படியாவது தங்கள் காதலர்கள் சுகமாய் இருந்தால் போதும், திருப்தியடைந்தால் போதும், சந்தோஷப்பட்டால் போதும்என்பதையே குறியாகக்கொண்டு தங்களுக்கு உண்ண உணவில்லாமலும் உடுக்க உடையில்லாமலும் இருந்தபோதிலும் தங்கள் காதலர்களின் சௌக்கியத்தில் மிக்க கவனம் செலுத்திவரும் உத்தம ஸ்திரீகள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். தாங்கள் விரும்பிய புருஷர்களின் அன்பைப் பெற்றால் போதுமெனநினைத்து அதை அடையும்பொருட்டு உயிரையும் ஒருபொருட்படுத்தாமல், மானத்தையும் சட்டை செய்யாமல் எக்காரியத்தையும் தைரியமாய்ச் செய்யக்கூடிய பெண்கள் எத்தனையோ பேர் இக்காலத்திலும் இருந்து வருகிறார்கள். இதற்குக் காரணம் என்ன? பெண்களுக்குள்ள காதலின் பெருக்கே காரணம். பெண்களுடைய காதல் ஆண் மக்களின் காதலைவிட எத்தனையோ மடங்கு அதிகமாயிருப்பினும் அவர்கள் ஆண்களைப்போல் எளிதில் தங்கள் காதலின் பெருக்கைப் பிறருக்குப் புலனாகும்படி காட்டிக்கொள்ள மாட்டார்கள். ஆனாலும், பெண்களுக்குப் புருஷர்கள்மீது ஏற்படும் காதல் எவ்வளவு ஆழ்ந்ததாயும் நீடித்து நிற்பதாயும் இருக்கிறதோ அவ்வளவு ஆழ்ந்ததாயும் நீடித்து நிற்பதாயும் புருஷர்களுடைய காதல் பெரும்பாலும் இருப்பதில்லை. பெண்கள் மட்டற்ற

காதல் உடையவர்களாயிருந்த போதிலும், அதைக் காட்டிக்கொள்ளாமல் நடிக்கும் சாமர்த்தியம் அவர்களுக்கு இயல்பாகவே இருத்தலால், தேவகி நரேந்திரரோடு ஸ்ரீரங்கபட்டினத்துக்குப் போவதற்கு மிகுந்த விருப்பமுடையவளாக விருந்தும் அதைக் காட்டிக் கொள்ளாமல் மிகுந்த நாணப்பட்டவளைப்போல் அபிநயித்தது ஓர் ஆச்சரியமன்று.

"நீமட்டும் என்னோடு தனித்து வருதல் சரியன்றென உனக்குப் படும்பட்சத்தில் அகிலாண்டம்மையையும் கூட அழைத்துக்கொண்டுவா!" என்று நரேந்திரர் மீண்டும் வற்புறுத்தினர்.

"அது முடியவே முடியாது!" என்று மறுத்துக் கூறினள் தேவகி.

இவ்விஷயமாய் தேவகியும் நரேந்திரரும் நெடுநேரம் விவாதம் செய்துகொண்டிருந்தார்கள். கடைசியில் ஞானசேகரருடைய சம்மதத்தைப் பெற்றுக் கொண்டு வருவதாக தேவகி கூறினள். ஞானசேகரரை இவ்விஷயமாய் தேவகி ஏன் கலந்து யோசிக்க விரும்புகிறுள் என்று வைத்தியர் சிந்தித்தார். ஆனுலும் அவருக்குக் காரணம் புலப்படவில்லை. இருந்த போதிலும் தேவகியின் விருப்பத்துக்கு அவர் இணங்கி மறுநாள் காலையில் தாம் தேவகியின் வீட்டுக்கு வருவதாயும், அதற்குள் அவள் ஞானசேகரரைக் கலந்து யோசித்துக்கொண்டு ஸ்ரீரங்கபட்டினம் போகத் தயாரா யிருக்கவேண்டியது அவசியமென்பதாயும் சொல்லிவிட்டு அவளிடம் விடைபெற்றுச் சென்றார். மறுநாள் காலையில் நரேந்திரர் தேவகியின் வீட்டுக்குச்

செல்லவே தேவகி ஸ்ரீரங்கபட்டினம் போகத் தயாரா யிருப்பதாய்ச் சொன்னாள். அன்று மாலையிலேயே சேன்டிரல்ஸ்டேஷனில் நரேந்திரரும் தேவகியும் ரயில் ஏறி ஸ்ரீரங்கபட்டினத்துக்குப் பிரயாணமானார்கள்.



## 25. இதுவன்றோ உண்மைக் காதல்!



"நரேந்திரரே! அந்தக் கிழவி—அகிலாண்டம்மை—என்ன சொல்லுவாள் என்று எனக்குத் தெரியவில்லை! நான் அவளுக்குத் தெரியாமலே உம்மோடு புறப்பட்டு விட்டேன்! எனக்கு என்ன ஆபத்து விளைந்ததோ, என்ன கெடுதி சம்பவித்ததோ என்று நினைத்து அவள் மிகவும் வருத்தப்படுவாள்! இருந்தாலும், விடியற்காலையில் அவளிடம் சென்று எனக்குச் சென்னை நகரம் ஒத்துக்கொள்ளாததனால் சுற்றுப்பக்கத்துக் கிராமத்துக்குப் போயிருக்கிறேன் என்று சொல்லும்படி ஞானசேகரரிடம் கூறி வந்திருக்கிறேன்" என்று இரயிலில் போய்க்கொண் டிருக்கும்போதே தேவகி வைத்தியரிடம் சொன்னாள்.

சதியாலோசனைக்காரர் கண்களில் தானும் வைத்தியரும் அகப்படக்கூடா தென்பதைப்பற்றி அடிக்கடி தேவகி வற்புறுத்திக் கூறி, நரேந்திரரை எச்சரித்து வந்தாள்.

"வைத்தியரே! நாம் கண்டு பிடிக்கப்பட்டுவிட்டால் நம்முடைய முயற்சி வீணாய்ப் போவதுமன்றி நம்முடைய உயிருக்கும் ஹானி நேரிடும். ஜெயரா

மாகட்டும், மற்றவர்களாகட்டும் உம்மைப் பார்க்கவே கூடாது. அவ்விஷயத்தில் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளவேண்டும்'' என்று தேவகி அடிக்கடி கூறுவாள்.

இவ்விதமாக தேவகியும், நரேந்திரரும் பேசிக் கொண்டே இருந்தார்கள்,—இரயில் வண்டி ஸ்ரீரங்க பட்டிணம் செல்லும் வரையில்! இரயில் வண்டி ஸ்ரீரங்க பட்டிணம் சென்றதும், இருவரும் வண்டியை விட்டுக் கீழே இறங்கி, ஏற்கனவே தாங்கள் பேசிக்கொண்ட படி, வெவ்வேறு மார்க்கங்களில் பிரிந்து தாங்கள் குறிப்பிட்டிருந்த இடத்தை நோக்கிச் சென்றார்கள்! தேவகி, தாயாரம்மா என்னும் பெயருடைய ஒரு பிராமண விதவையால் வைக்கப்பட்டிருந்த ஒரு சாப்பாட்டு விடுதிக்குச் சென்று, அங்கே தனக்கு ஜாகை ஏற்படுத்திக்கொண்டாள். நரேந்திரரோ, ஸ்ரீநிவாச ஐயர் என்பவரால் ஏற்படுத்தப்பட்டிருந்த சாப்பாட்டு விடுதிக்குச் சென்று அங்கே தமக்கு வசதியாக ஒரு ஜாகை ஏற்படுத்திக்கொண்டார். தேவகியை விட்டு அரை நிமிஷம் பிரிந்திருத்தல் ஒரு யுகம்போல் நரேந்திரருக்கு அவருடைய காதலின் பெருக்கால் தோன்றியபோதிலும் சந்தர்ப்பத்தை உத்தேசித்து அவர் தனித்திருந்தார்.

மறுநாட் காலையில் நரேந்திரர் எழுந்து காலைப் போஜனத்தை முடித்துக்கொண்டு ஸ்ரீரங்கபட்டினத்தைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டார். ஸ்ரீரங்கபட்டினத்தில் எந்த இடத்தில் தைமாதம் முதல் தேதியில் அல்லது மார்கழி மாதக் கடைசித் தேதியில் சதியாலோசனைக்காரர்கள் கூடப்போகிறார்கள் என்பதை

அறிந்துகொள்ளவேண்டு மென்னும் அவா நரேந்திர ருக்கு அதிகமிருந்ததால், நோக்கத்தகுந்த பற்பல இடங்களையும் அவர் மிகுந்த கவனத்துடன் பார்த்துக் கொண்டே சென்றார். ஒவ்வொரு தெருவாய்ச் சுற்றி னார். ஒவ்வொரு பொதுக் கட்டிடங்களிலும் நுழைந்து நுழைந்து புறப்பட்டார். இவ்விதமாக இவர் பார்த் துக்கொண்டே சென்றபோது தனக்கு எதிரில் ஒரு பெரிய கோவில் தோன்றுவதைக் கண்டார். அந்த ஆலயத்துள் நுழைந்து பார்க்கவேண்டு மென்னும் ஆசை அவருக்குத் தற்செயலாய் உண்டாகவே, அவர் அதனுள் நுழைந்து தாம் காணும் ஒவ்வொன்றையும் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினார். கோவிலின் வெளிப் பிரகாரத்தின் வடவண்டை மூலையில் ஒரு சிறு வாயிற்படி காணப்பட்டது. அதன் வழியாக அவர் உள் நுழைந்து சென்றார். ஒரு பெரிய தோட்டம் காணப் பட்டது. தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துக்கொண் டே வந்தபோது தோட்டத்தின் ஓர் புறத்தில் மணல் களின் இடையிடையே ஏதோ ஒரு வஸ்து மினுமினு வென்று மின்னுவதை நரேந்திரர் கண்டார். அது அவ ருடைய கவனத்தைக் கவரவே, அவர் அதன் அருகிற் சென்று மணல்களை அப்புறப்படுத்திவிட்டு மிகுந்த கூர் மையோடு கவனித்தார். சுமார் நான்கடி சதுரமுள்ள ஒரு பித்தளைத் தகடு பூமியோடு பூமியாய்ப் பொருந்தி யிருக்கும்படி புதைக்கப்பட் டிருப்பதை அவர் கண் டார். அத்தகட்டின் மத்தியில் பெரிய எழுத்துக்களில் பின்வருமாறு செதுக்கப்பட்டிருந்தது :—

ன்விஜாராகாம ர்கூமை ழிவ தந்இ"
"துறகிலுல்செ ச்குக்லைசா ஷகிக்பொ

தவிர, தகட்டின் ஓர் மூலையில் "மார்கழி கடைசி" என்றும், மற்றோர் மூலையில் "தை ஆரம்பம்" என்றும் பொடி எழுத்தால் வெட்டப்பட் டிருந்தது. இவை-களைக் கண்டவுடன் நரேந்திரருக்குமிகுந்த ஆச்சரியம் உண்டாயிற்று.

இந்தக் குறிப்புக்களைக் கொண்டு சதியாலோசனைக் காரர்கள் ஒன்றுகூடி ஏதோ ஒரு காரியத்தைச் செய்ய உத்தேசிக்கும் இடம் இந்த இடந்தான் என்பதை நரேந்திரர் அறிந்துகொண்டார். ஆனாலும் அவர்கள் செய்யப்போகும் காரியம் என்ன வென்பதைப்பற்றி ஒரு சிறிதாயினும் அறிந்துகொள்ள அவரால் முடியாது போயிற்று. அந்த இடத்திலேயே வைத்தியர் ஆச்சரியத்தாலும் அச்சத்தாலும் ஸ்தம்பித்தபடியே நின்றார்; பலவாறு சிந்தித்தார். தாம் கவனிக்கவேண்டிய ஒவ்வொரு விஷயத்தையும் மிக்க கவலையுடனும் ஜாக்கிரதையுடனும் கவனித்துவிட்டு சாதாரணமான ஒரு வழிப்போக்கனைப்போல் அந்த இடத்துக்குச் சிறிது தூரத்தி லிருக்கும் ஓர் ஆலவிருட்சத்தின் மறைவில், என்ன நடக்கிற தென்பதை அறிந்து கொள்ளலா மென்னும் நோக்கத்துடன், நின்றுகொண் டிருந்தார். அவ்விதம் நின்ற சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு மனிதன் தன்னை நோக்கி வருவதுபோல் நரேந்திரருக்குத் தோன்றிற்று. அந்த மனிதன், கழுத்துமுதல் கால் வரையிலும் மறைந்திருக்கும் படியாக மிகத் தடிப்பான கம்பளிச்சட்டை ஒன்று போட் டிருந்தார். பச்சை நிறமான மூக்குக்கண்ணாடி அணிந்திருந்தார். வலக்கையில் ஒரு மெல்லிய பிரம்பு வைத்திருந்தார். அந்த வலக்கையின் மூன்றாவது நான்காவது விரல்கள் வெங்காயச் சருகுபோன்ற செந்நிறத்தையுடைய

தழும்புடையவைகளா யிருந்தன. அவர் ஒருவகை யான பார்வையோடு நரேந்திரரை உற்று நோக்கிய தானது வைத்தியருக்கு மிருந்த ஆச்சரியத்தை விளை வித்தது. தன்னைக் கூர்ந்து அவர் கவனிக்கக்கூடா தென்பதைக் காட்டிக்கொள்ளாமலே நரேந்திரர் மற் றோர் புறமாய்த் தலையைத் திருப்பி வேறு எதையோ கவனிப்பவரைப்போ லிருந்தார். அப்படி அவர் செய்தும் மீண்டும் அவரை அந்த மனிதன் உற்று நோக்கினர். அவரை இந்த முறை வைத்தியரும் கூர்ந்து கவனித்தார். அவர் இன்னுரென்பதை அவர் கைவிரல்களில் காணப்பட்ட தழும்புகளைக் கொண்டு வைத்தியர் அறிந்துகொண்டார். அவ்விதம் வைத்தியர் தன்னை அறிந்துகொண்டார் என்பதைக் குறிப்பா லறிந்துகொண்ட அந்த மனிதன் மெதுவாக அவ்விடத்தை விட்டு நீங்கினர். நரேந்திரரும் தேவகி யைச் சந்திப்பதற்காக அவ்விடம் விட்டு நீங்கினர்.

வைத்தியர் தாயாரம்மாவின் சோற்றுக்கடைக் குச் சென்று தேவகியைச் சந்தித்து அவளிடம் கோவிலின் பிரகாரத்தில் தாம் கண்ட அற்புதக் காட் சியைப் பற்றி விவரமாகக் கூறி, அங்கே வந்த மனித னைப்பற்றியும் பிரஸ்தாபித்தார்.

"என்ன ! அந்த மனிதனை நீர் பார்த்தீரோ ? ஓ! முடியவே முடியாது ! அவர் இப்போது மதுரையி லன்றோ இருக்கின்றார் !" என்று தேவகி திடுக்கிட்டுக் கூறினள்.

"பெண்ணே ! இல்லை ; அந்த மனிதன் இச்சமயம் மதுரையில் இல்லை ! ஸ்ரீரங்கபட்டினத்திலேயே இருக் கின்றார். நான் அவரை நன்றாய்க் கவனித்துப் பார்த்

தேன். முதல்நாளிரவு திருமுகக்கோட்டையில் உள்ள சதாநந்தர் வைத்தியசாலைக்கு வந்து, என்னிடம் ஆயிரம் பொன்னையும், நீ கொடுக்கச் சொன்னதாக ஓர் விலையுயர்ந்த மாணிக்கத்தையும் கொடுத்துவிட்டு, தம்முடைய கைக்குச் சிகிச்சை செய்துகொண்டு, தாம் வந்து வைத்தியம் செய்துகொண்டு போனதாக எவரிடமும் பிரஸ்தாபிக்கக் கூடாது என்று என்னிடம் சத்தியம் வாங்கிக்கொண்டு சென்ற, அந்தப் பெயர் தெரியாத மனிதனே அவர் என்பதை நான் சந்தேகமற அறிந்துகொண்டேன்'' என்று நரேந்திரர் வற்புறுத்திக் கூறினார்.

''இன்று காலையில் கோவில் பிரகாரத்தில் நீர் சந்தித்த மனிதன் அந்த மனிதரே என்பது வாஸ்தவமானால், நான் அவரைக் கண்டு பேச விரும்புகிறேன். ஆனாலும், நீர் பார்த்த மனிதன் அவர்தானோ அல்லது வேறு யாரையாவது பார்த்துவிட்டு நீர் பிறழ உணர்ந்து சொல்லுகிறீரோ என்கிற சந்தேகம் என்னை விட்டு நீங்கவில்லை. வைத்தியரே! எது எப்படி இருந்த போதிலும், நீர் அந்தக் கோவிலுக்குள் சென்றது மிகவும் பிழையான காரியம் என்று நான் அஞ்சுகிறேன். ஏனெனில், நாம் இருவரும் இந்த ஊருக்குள் இருக்கிறோமென்பதை நம் விரோதிகளாகிய சதியாலோசனைக்காரர்கள் அறிந்துகொண்டார்களானால், நம்முடைய முயற்சி விழலுக்கிறைத்த நீராகும்'' என்று தேவகி கூறினாள்.

''உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டுமானால், நாம் இப்படிப்பட்ட விஷயங்களுக்கெல்லாம் பயந்து சரிப்படுமா?'' என்று நரேந்திரர் சொன்னார்.

அந்த மனிதனைத் தாம் பார்த்ததாக நரேந்திரர் சொன்னது தேவகிக்குப் பலவகையான யோசனையைக் கொடுத்துவிட்டது. அவள் திடீரென்று நரேந்திரரை நோக்கி "அத்தான்; ! உஸ்! ஆ! வாய்தவறி நான் என்னமோ சொல்லிக் கூப்பிட்டுவிட்டேனே!" என்று சிறிது புன்சிரிப்போடு கூறி, "வைத்தியரே! நாம் அந்த இடத்துக்குப் போவது அவ்வளவு யுக்தமான காரியமன்று. நான் இங்கேயே தங்கிவிடுவதாகத் தீர்மானித்துவிட்டேன்" என்று தேவகி அச்சத்தோடு உரைத்தாள்.

"என்ன! நீ அந்த இடத்துக்கு வந்து அங்கு என்ன நடக்கிறதென்பதைக் கவனிக்க முடியாதென்று சொல்லுகிறாயா, என்ன!" என்று வைத்தியர் திடுக்கிட்டு உரத்துக் கேட்டார்.

"இல்லை; என்னால் வரமுடியாது" என்று தேவகியும் பரபரப்புடன் சொன்னாள்.

"உன்னை யாராவது கண்டறிந்து விடுவார்களென்று நீ அஞ்சுகிறாயோ?" என்று வைத்தியர் வினவினார்.

"ஆம்!" என்று சொல்லுபவளைப்போல் தேவகி தலையை அசைத்தாள்.

"இருந்தாலும் பாதகமில்லை; நல்ல பகற்காலத்தில் அவர்கள் நம்மை என்ன செய்யக்கூடும்? பயப்படாதே! என்னோடு வா" என்று நரேந்திரர் வற்புறுத்திக் கூறினார்.

"வைத்தியரே! அவர்களுடைய சதியாலோசனை நூறுலட்சம் வராகனை ஒரேகாலத்தில் கொள்ளையிடு

வனைப்பற்றி என்பதை நீர் மறந்துவிட்டீரோ? அவ்வளவு பெரிய நோக்கங்கொண்டிருக்கும் அவர்கள் எதைத்தான் துணிந்து செய்யார்கள்?" என்று தேவகி சொன்னாள்.

"நூறுலட்சம் வராகனா!" என்று நரேந்திரர் ஆச்சரியத்தோடு கூவிவிட்டு, "பெண்ணே! அவ்விஷயத்தைப்பற்றிய எல்லா விவரங்களையும் எனக்குத் தெரிவி!" என்று கெஞ்சிக் கேட்டார்.

"வைத்தியரே! அவசரப்படாதீர்; பொறுமையோடு இரும். இன்று காலையில் நீர் சந்தித்த மனிதரை நாம் சந்தித்தால், அவர் மூலமாக நீர் எல்லா உண்மைகளையும் அறிந்துகொள்ளுவீர். நானாக உண்மையை வெளியிடும் நிலைமையில் இப்போது நான் இல்லை" என்று தேவகி சொன்னாள். அப்போது அவளுடைய சரீரம் நடுங்கிற்று. கண்களில் நீர் ததும்பிற்று. மிகுந்த ஆற்றாமையுடன் பெருமூச்சு விட்டாள்.

"வைத்தியரே! எனதன்பரே, எனக்கு—எனக்கு நீர் முதலில் சத்தியம்செய்து கொடுக்கவேண்டும். நாளை மறுதினம் தைமாதம் முதல் தேதியாகும். அன்று அந்தக்கோவில் பிரகாரத்தின் பின்புறமுள்ள தோட்டத்தில் சில விசேஷங்கள் நடைபெறும். அவைகளைப் பார்த்துவிட்டு என்மீது நீர் யாதொரு கெட்ட அபிப்பிராயமும் கொள்ளக்கூடாது. என் விஷயத்தில் அவ்விதமான கெட்ட அபிப்பிராயம் எதும்கொள்வதில்லை என்றுமுதலில் எனக்கு வாக்குத்தத்தம் செய்துகொடும். நான் என்னுடைய இஷ்டப்படி நடக்

கக்கூடிய சுதந்தரத்தை இழந்தவளாக இருக்கிறேன் என்று உறுதியாய்க் கூறுகிறேன். இல்லாவிடில் உண்மையை அப்போதே உம்மிடம் கூறியிருப்பேன். நான் ஏற்கெனவே உம்மை எச்சரித்திருக்கிறேன். ஆனால் நீர் என்னுடைய எச்சரிக்கையைக் கவனியாமல் இருந்துவிட்டீர். நான் உம்மை வேறொன்றும் கேட்கவில்லை; தன் முழுமனதுடனும், இருதயத்துடனும் உம்மை முதன்முதல் திருமுகக் கோட்டையில் சதானந்தர் வைத்தியசாலையில் கண்டதுமுதல் இந்த நிமிஷம் வரையில் உண்மையன்புடன் காதலித்த தேவகி என்பாள் ஒருத்தி இருந்தாள் என்று, நான் இறந்தபின்பும், ஞாபகத்தில் வைத்திருக்கவேண்டுமென்று மாத்திரம் கேட்டுக்கொள்ளுகிறேன்; என்னுடைய நிலைமைக்காக அனுதாபம் பாராட்டக் கோருகிறேன்; வைத்தியரே! நான்—நான்—'' என்று தேவகி கூறி, மேற்கொண்டு ஏதும் சொல்லமுடியாதவளாய்த் தேம்பித் தேம்பி அழுதாள்.

அவள் பட்ட துயரத்தைக்கண்டு நரேந்திரரும் கண்ணீர் விடலானார். தேவகியின் துயரத்தைத் தணிக்க முயன்றார். "கண்மணி! என் இவ்விதம் அழுகின்றாய்! அழாதே, அன்பே, அழாதே! உன் மனத்தில் உள்ளதைத் தாராளமாய்ச் சொல்லு!'' என்று வைத்தியர் தேறுதல் கூறினார். தேவகி ஒருவாறு தன் அழுகையை நிறுத்திக் கண்களைத் துடைத்துக்கொண்டு ஒருமுறை நரேந்திரரை ஏறிட்டுப் பார்த்தாள். அவளுடைய முகம் இரத்தம்போல் சிவந்திருந்தது. ஆனாலும், இச்சமயம் அவளுடைய முகம் ஒருவகையான புது அழகுடன் பிரகாசித்தது.

"நரேந்திரரே! எனதன்பரே! என்—என்—காதலரே! ஆ! பிராணகாந்தா! நான் என்ன செய்வேன்? என்னைப்போன்ற பாவிகள் உலகத்தில் வேறு யாராவது இருப்பார்களா? "கைக்கெட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்னும் பழமொழி என் விஷயத்தில்தானு உண்மையாகவேண்டும்? ஆ! என்செய்வேன்! என்னுடைய விரோதிகள் கையில் அகப்பட்டு உயிர்துறக்கப் போகிறேன் என்பதை நான் நிச்சயமாய் அறிந்திருந்தபோதிலும், 'மரணம்' என்பது உலகத்தில் எல்லோருக்கும் சம்பவிக்கக் கூடியதாதலால் அதற்கு அஞ்சுவதில் பலனில்லை என்பதை நான் நன்ருக அறிந்திருந்த போதிலும் என்னுடைய உயிர் இச்சமயம் என் உடலை விட்டுப் பிரிவதற்குப் பின் வாங்குகின்றதே! உலகத்தில் பெண்களுக்குக் கிடைக்கக்கூடிய எல்லாப் பாக்கியங்களுக்குள்ளும் சிறந்த பாக்கியம் உண்மையன்புடனும் காதலுடனும் கூடிய ஒருவனை அடைவதுதான் என்று அறிவிற் சிறந்த எல்லோரும் சொல்லுகிருர்களே! அப்படிப்பட்ட பெரும் பாக்கியத்தை அடையலாம் என்னும் நம்பிக்கையுடன் நான் இது வரையில் இருந்து வந்தேனுயினும், அதை முற்றும் அடைந்து அனுபவிப்பதற்கு முன்பு நான் மரணமடைய வேண்டியவளாக இருக்கின்றேனே என்பதை நினைக்கும்போது என் மனம் பகீரென்கின்றதே; நெஞ்சம் துணுக்குறுகின்றதே! ஐயோ! அன்பரே! முதல் முதல் சதானந்தர் வைத்தியசாலையில் உம்மைக் கண்டவுடனேயே என் மனம் என்னை அறியாமலே உம்மைச் சென்று பற்றியது. எந்த விதத்திலாயினும் உம்மையே காதலனுக அடைய வேண்டும், உமக்கே என்னுடைய அன்பையும், என்

னுடைய விசுவாசத்தையும், மற்றும் எனக்குச் சொந்தமான எல்லாவற்றையும் கொடுக்கவேண்டும் என்று நினைத்தேன். உம்மை அடைந்து சுகிக்கலாம் என்னும் நம்பிக்கை என்னுடைய ஆன்மாவுக்கு ஒரு புதிய சக்தியைக் கொடுத்துவந்தபடியால், எனக்கு நேரிட்ட எல்லாத் துன்பங்களையும் இன்பங்களாகவும், எல்லாத் துக்கங்களையும் சுகங்களாகவும் நான் கொண்டிருந்தேன். உம்முடைய காதலை ஒருநாளில்லாவிடில் ஓர் நாள் பெறலாம் என்னும் நம்பிக்கையால் எவ்வளவோ கஷ்டங்களையும் துக்கங்களையும் அனுபவித்து வந்தேன். அவ்விதம் அனுபவித்தபோதிலும், உம்மை நினைத்தவுடன், அக்கஷ்டங்கள் இருந்த இடம் தெரியாமல் பறந்துபோயின. ஆனாலும், அன்பரே, நான் ஒரு விஷயத்தில் மோசம் போய்விட்டேன். அதாவது உம்மீது எனக்கு அளவற்ற காதல் இருந்தபோதிலும், நான் அதைப்பற்றி உம்மிடம் புலப்படக் கூறாமல் மனதுக்குள்ளேயே அடக்கி வைத்திருந்து விட்டேன். பெண்கள் தங்கள் மனக்குறிப்பை, புருஷர்களைப்போல் உடனே வெளியிட மாட்டார்கள் என்று பலர் சொல்லுவது என் விஷயத்தில் முற்றும் உண்மையாகி விட்டதுபோலும்! ஆனாலும், காதலரே, உம்மை நான் ஏற்கனவே மனதில் காதலித்துவிட்டேன். மனத்தினால் ஒன்றுபட்ட நாம், சரீரத்தாலும் ஒன்றுபட முடியாமற்போனது நான் செய்த பூர்வ ஜன்ம வினையேபோலும்! என்னுடைய தவக்குறைவே உம்மை நான் அடைந்து சுகிக்க முடியாமற் போனதற்குக் காரணம். ஆதலால், நான் என்னுடைய தலைவிதியை நொந்துகொள்ள வேண்டுமேதவிர, வேறு யாரை நொந்துகொள்ளுவது! உம்முடைய மனவழகும்

உடலழகும் ஒருபோதும் என்னைவிட்டு அகலமாட்டா. இந்த ஜென்மத்தில் உம்முடைய காதலை முற்றும் அடைந்து சுகிக்க நான் கொடுத்து வைக்காவிட்டா லும், அடுத்த ஜென்மத்திலாவது நான் ஒரு பெண்ணாகப் பிறந்து உம்மையே காதலனாக அடையும்படி கடவுள் கிருபை செய்யவேண்டுமென்று நான் அவரை மன்றாடி வேண்டிக்கொள்ளுகிறேன். காதலரே! நான் உம்மை ஒரே ஒரு வரம் மாத்திரம் கேட்டுக்கொள்கி றேன். அதாவது 'நான் இறந்துவிட்டபோதிலும், எனக்குப் பிறகு உம்முடைய நற்குணத்திற்கு ஏற்ற ஒரு மங்கை நல்லாளை நீர் அடைந்து அவளுடன் இன்பசுகங்களை அநுபவித்து வந்தபோதிலும், உம் முடைய மறுவற்ற காதலை அவளுக்கே நீர் பகிர்ந்து கொடுத்தபோதிலும், நீர் செல்வத்திலும் புகழிலும் கீர்த்தியிலும் உலகத்தில் ஓர் ஞான சூரியனைப் போல் பிரகாசித்து இகபோகங்களை அநுபவித்து வந்தபோதிலும், உம்முடைய பரிசுத்தமான மனத்தில் இந்தப்பாவியாகிய எனக்கும் சிறிது இடம் கொடுக்க வேண்டும். இதுவே நான் உம்மைக் கேட்டுக்கொள் ளும் வரமாகும். அன்பரே! 'மிகுந்த பாப ஜென் மத்தை எடுத்த தேவகி என்பாள் ஒருத்திஇருந்தாள்; அவள் எவ்வளவு கெட்டவளா யிருந்தபோதிலும் உண்மையோடு நம்மை நேசித்தாள். அவள் எவ் வளவோ கஷ்டநஷ்டங்களை அநுபவித்து வந்தபோதி லும் நம்மை மனப் பூர்வமாய்க் காதலித்தாள்; அவள் அழகில் குறைந்தவளா யிருந்தபோதிலும், குணத் தில் சிறந்தவளா யில்லாத போதிலும், கல்வியில் தேர்ச்சியற்றவளாக இருந்தபோதிலும், செல்வத் தில் உயர்ந்தவளாக இல்லாதபோதிலும் இவை

களையெல்லாம்விட மேலானதும் பரிசுத்த மானது மான உண்மைக் காதலை அவள் நம்மிடம் கொண்டிருந்தாள்; அப்படிப்பட்ட பெண் இவ்வுலகத்திலிருந்து நீங்கிவிட்டாள்; அவளுக்காக நாம் அனுதாபப்படவேண்டும்; அவளுடைய ஞாபகத்தை இடையிடையேயாவது நாம் மனதில் வைக்கவேண்டும்.' என்று நீங்கள் கருதுவீர்களேயானால் அதுவே என்னுடைய ஜென்மம் ஈடேறப்போதுமானது. ஆ! பிராணகாந்தா! நான் உம்மை நேசித்ததும், காதலித்ததும் இவ்விதம் வியர்த்தமாகுமென்றுனக்கு முன்னமேயே தெரியாமற் போய்விட்டதே! காதலிலும் சிறந்தது வேறில்லை என்று பெரியோர் சொல்லுவது என் விஷயத்தில் என் சிறப்பின்றிப் போகவேண்டும்? நாதா—நாதா! ஆ! உங்களை அடைந்து சுகிக்க நான் கொடுத்து வைக்கா விட்டாலும், தயவுசெய்து, அடியாள்மீது கிருபைகூர்ந்து, இப்போது உங்கள் பரிசுத்தமான வாயால் இந்தப் பாவிக்கு ஓர் முத்தமளித்துத் தங்கள் திருக்கரங்களால் பயனற்ற இச்சரீரத்தைக் கட்டி ஒரு முறை ஆலிங்கனஞ் செய்யமாட்டீர்களா? ஆ! காதலரே—காதலரே—!'' என்றுதேவகி கடல்மடை திறந்தாற்போல் பேசி திடீரென்று மூர்ச்சையாகிக் கீழே விழுந்துவிட்டாள்.

"இதுவன்றோ உண்மைக்காதல்!'' என்று நரேந்திரர் நினைத்தார். இன்னது செய்வதென்று தெரியாமல் சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்றார்.



## 26. அதிசயமான சம்பவங்கள்



இவ்விதம் தேவகி, காதல் என்னும் அரிய பெரிய செல்வத்தை அநியாயமாக இழந்துவிட நேரிட்டிருக்கிறதே என்று நினைத்து, அதற்கு ஆற்ருளாய்த் தன்னை அறியாமலே அழுது புலம்பிக்கொண்டிருக்க, அவளை எவ்வகையினுல் ஆறுதல் செய்யக்கூடுமோ அவ்வகையினுல் நரேந்திரர் ஆற்றுவித்தார். ஆனுலும், நரேந்திரருக்கு இச்சமயம் துக்கம் அதிகரித்தது. ஏனெனில், திருமுகக் கோட்டையில் அன்றிரவு சதாநந்தர் வைத்தியசாலைக்கு வந்து தேவகி அவரை அழைத்த போதே, அவர் அவள்மீது காதல்கொண்டு விட்டார். ஆனுலும், அவளுடைய உண்மையான நிலைமையை அவர் அறியாதிருந்த படியாலும், தேவகி அவரை மிகுந்த அன்புடன் காதலித்து வந்தபோதிலும் தன் எண்ணத்தை வெளிப்படையாக இதுவரையில் அவள் அவரிடம் சொல்லாமல் மறைத்து வந்தபடியாலும், தான் அவளைக் காதலிப்பது போலவே அவள் தன்னைக் காதலிக்கின்ருளா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ளுவதற்கு முன்பு தன் அபிப்பிராயத்தை அவளிடம் தெரிவிக்காமல், இலைமறை காய் மறையாகக் குறிப்பால் மாத்திரம் உணர்த்தி வந்தார். ஏனெனில், தேவகிமீது தாம் கொண்டிருக்கும் காதலை அவளிடம் தெரிவித்துவிட்டாலும், அவள் அதற்கு இணங்கித் தன்னைக் காதலிக்காது கைவிட்டுவிட்டால் அதனுல் உண்டாகும் துயரத்தையும், துக்கத்தையும் எவ்விதம் சகிக்க முடியுமென்று அவர் ஏங்கினுர். தேவகி உண்மையாகவே தன்னைக் காதலிக்கின்ருள் என்பது இப்

போது அவள் வாயினாலேயே வெளிப்பட்டபடியால், அவர் தன்கருத்தை இதுவரையில் அறிவிக்காமலிருந்த தன் அறியாமையையும், துரதிர்ஷ்டத்தையும் நினைத்து மிகவும் வருத்தப்பட்டார். ஏனெனில், இருவரும் ஒருவரை யொருவர் காதலித்தபோதிலும், சிலகால மாவது உலகத்திலிருந்து சுகமனுபவிக்க முடியாமற் போய் விடுகிறதே என்னும் மனவருத்தம் அவருக்கு அதிகம் ஏற்பட்டது. அழுகையும் ஆத்திரமும் அவ ரைப் பேசவொட்டாமல் தடுக்க, கண்களில் நீர் ததும்ப, வாய்குழற, "கண்மணி, கண்மணி! என தன்பே, எனதுயிரே! தேவகி—தேவகி!— நான்— உன்னைக்—காதலிக்கிறேன்! காதலிக்கிறேன்! என் னைக் கைவிடுதல் உனக்குத் தருமமாகாது! நியாய மாகாது! உன்னுடைய உயிருக்கு அபாயம் நேரிடா மல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்! உன்னுடைய விரோதிகளுக்காக நீ சிறிதும் அஞ்சவேண்டாம், என தன்பே!" என்று நரேந்திரர் வாய்விட்டுக் கதறி தேவகியை இறுகத் தழுவிக்கொண்டார். தேவகி அவ ரைப் புறக்கணித்து நாணத்தினால் தள்ளுபவளைப் போல் அபினயித்தாள்.

"ஐயோ, வேண்டாம், வேண்டாம்! காதல் விஷய மாக இச்சமயம் பேசவேண்டாம்! எனக்கு—எனக்கு மரணம் சமீபத்தில் இருக்கும்போது நம்முடைய காதலைப்பற்றிப் பேசி என்ன பிரயோசனம்? வேண் டாம்! என் மனம் வெடித்து விடும்போ லிருக்கிறது! என் இருதயம் பிளவுபட்டு விடும்போல் இருக்கிறது! அன்பரே, என்னை விட்டு விடுங்கள்! என்னுடைய காதலும் பூர்த்தியாகாமல், தங்களுடைய காதலும் நிறைவேறாமல் கூடிய சீக்கிரத்தில் செய்துவிட எமன்

காத்துக்கொண் டிருக்கிறான்! நாதா! என்னை நினைத்து நினைத்துத் தாங்கள் மனம் வருந்தவேண்டாம்! தங்களுக்கு அநாவசியமான கவலையைக் கொடுத்த என்னையும், தங்களுடைய விருப்பத்தையும், என்னுடைய இஷ்டத்தையும் பூர்த்திசெய்ய முடியாதுபோன என் உடலையும், தாங்கள் தீண்டி பரிசுத்தமான தங்கள் மனத்தையும் தேகத்தையும் அசுத்தமாக்கிக் கொள்ள வேண்டாம்! நாதா! என்னை விட்டுவிடுங்கள்'' என்று தேவகி வாய்விட்டுக் கதறினாள்.

அவளுக்கு எவ்விதமான ஆபத்தும் நேராதபடி தாம் பார்த்துக் கொள்ளுவதாக நரேந்திரர் உறுதி கூறி அவளை ஆற்றுவித்தார். தேவகியும் ஒருவாறு துயரம் நீங்கினாள்.

"வைத்தியரே! அந்த சதிகாரர்கள் கூடும் இடத்துக்குப் போவது நலமன்றென நான் எவ்வளவு சொல்லியும் நீர் கேட்காமல் என்னைக் கட்டாயப் படுத்துகிறீர். உம்முடைய இஷ்டத்துக்கு விரோதமாய் நடக்க எனக்கு விருப்பமில்லை,— ஆதலால் நான் அவ்விடத்துக்கு வருகிறேன்! ஆனால், அங்கே நான் வந்தால் என்னுடைய உயிருக்கு ஹானி நேரிடும் என்பது நிச்சயம்! தவிர உலகம் உள்ள வரையில் மாறா அபகீர்த்தியும் எனக்கு ஏற்படும்!'' என்று தேவகி சொன்னாள். நரேந்திரர் அவளுக்கு அனேக நியாயங்களைக் கூறி மறுநாள் கோவிலின் பிரகாரத்திற்குப் பின்னுள்ள தோட்டத்துக்குத் தம்முடன் வரத்தான் வேண்டுமென்று மீண்டும் வற்புறுத்தினார். தன் காதலனுடைய இஷ்டத்துக்கு விரோதமாய் நடக்கச் சிறிதும் சம்மதியாத தேவகி நரேந்திரருடைய வேண்டுகோளுக்கு இணங்கினாள்.

எவ்வளவு கஷ்டங்கள் நேரிடினும், துன்பங்கள் வரினும், இடையூறு சம்பவிப்பினும், அவமானமே விளையினும் அவ்வளவையும் ஒரு பொருட் படுத்தாமல் எவ்விதமாவது தன்னை விரும்பும் காதலனின் மனம் கோணுமல் நடந்தால் போதுமென்றே உள் ளன்புடைய பெண்கள் கருதுவார்க ளாதலால், நரேந்திருடைய விருப்பத்துக்கு இணங்கி தேவகி அந்த இடத்துக்குப் போகச் சம்மதித்தது ஓர் வியப் பன்று.

மறுநாளன்று நரேந்திரர் அந்தத் தோட்டத் துக்குச் சென்றார். தேவகி சிறிதுநேரங் கழித்துப் பின்னல் வருவதாக சொன்னளானதால், வைத்தியர் முன்னதாகப் போய் விட்டார். கோவிலுள் சென்று தேவகி வருகின்றுளா என்று வழியைப் பார்த் திருந்தார். அவள் வெகு தூரத்துக்கப்பால் வந்து கொண்டிருப்பதை அவர் கண்டார். கோவிலின் பிரகாரத்தில் அவர் உலாவிக் கொண்டே இருந்தார். அச்சமயத்தில் திடீரென்று அவருடைய கண்கள் கோவிலின் சதுரத்தூண் மறைவில் ஒளிந்து யாரு டைய வருகையையோ கூர்ந்து கவனித்துக்கொண்டிரு ந்த ஒரு மனிதனைச் சந்தித்தன. வைத்தியர் உற்று நோக்கினர்; திருவொற்றியூரில் வசித்து வந்த ஜெயராமே அந்த மனிதனென்பதை அறிந்து கொண் டார். தன்னை அவன் எங்கே பார்த்து விடப் போகி ருனே என்னும் அச்சத்தால் நரேந்திரர் இரண் டொரு அடி பின்னெடுத்து வைத்தார். ஜெயராம் கோவிலுக்குள் இருப்பதை அறியாமல் தேவகி வரு கின்றுளே, அவளுக்கு என்ன தீங்கு விளையுமோ வென்று அவர் ஏங்கினர். இவ்விதமிருக்கும் போது

ஒரு கிழவர் ஜெயராமிடம் வந்து அவனுடைய காதில் ரகசியமாய்ச் சிலசங்கதிகள் சொன்னதை நரேந்திரர் கவனித்து விட்டார். தேவகி வருவதை அவ்விரு வரும் கண்டு கொண்டார்கள் என்பதையும் அறிந்து கொண்டார். அவ்விருவரும் தோட்டத்துக்குள் சென்று அங்கே ஓர் மூலையில் பதிக்கப்பட்டிருக்கும் பித்தளைத் தகட்டைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டே ஒன்று மறியாதவர்களைப் போல் உலா விக் கொண்டிருந்தார்கள். நரேந்திரரும் பின்சென்று அவர்களுக்குத் தெரியாமல் ஓரிடத்தில் மறைவாக விருந்து அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைக் கவனித்துக்கொண் டிருந்தார். இப்படியிருக்கும் சம யத்தில் வேறு இருவர் அங்கே வந்ததை வைத்தியர் பார்த்தார்; ஸ்தம்பித்து நின்றார். அவ்விருவரும் இன்னார் என்பதை அவர் நன்றாய் அறிந்து கொண் டார். அச்சத்தாலும் பயத்தாலும் உடல் நடுங்கினார். தேவகிக்கு என்ன கெடுதி நேரிடுமோ என்று மனங் கலங்கினார். பின்னால் வந்தவர்கள் சரவணனும் உதய குமாரியுமே. இவ்விருவர்களும் சேர்ந்து வந்ததைக் கண்டவுடன் நரேந்திரருக்கு உண்டான ஆச்சரியம் கொஞ்சமன்று.

சரவணனையும் உதயகுமாரியையும் கண்டவுடன் ஜெயராம் அந்த இடத்தை விட்டு நீங்கி ஆலயத்தி னுள் சுவாமி சந்நிதானத்துக்கு நேரே சென்றார். அங்கே ஜனக்கூட்டம் அதிகமாயிருந்தது. அன்று தினம் தைப் பொங்கலானபடியால் அக்காலத்திய அவ்வூர் வழக்கப்படி அநேகர் பொங்கலிட்டுப் படை த்தார்கள். வேறு பலர் மாவிளக்குப் போட்டார் கள்; மற்றும்பலர் தீபாலங் காரம் செய்தார்கள்;

இன்னும் பலர் குவித்த கையும் துதித்த நாவுமாய் ஸ்மரணையற்று இறைவனடியைப் பணிந்தார்கள். சுமாமி தரிசனார்த்தம் ஆலயத்துக்குள் ஆயிரக் கணக்கான ஜனங்கள் வருவதும், தரிசனம் செய்துகொண்ட ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஆலயத்திலிருந்து வெளியே செல்வதும் பார்ப்பதற்கு ஓர் அற்புதக் காட்சியாகவே இருந்தது. அவ்விதம் வந்த ஜனங்களுள் சிலரைக் கண்டு ஜெயராம் வார்த்தையாடினார். அதையும் நரேந்திரர் கவனித்தார். வைத்தியர் தம் கைகடிகாரத்தைப் பார்த்தார். பொருள் விளங்காத அக் கடிதத்தில் குறித்திருந்தபடி சம்பவம் நிகழ இன்னும் ஐந்தே நிமிஷங்கள்தான் இருக்கின்றன வென்பதை அறிந்துகொண்டார். அதாவது பதினைந்து நாழிகை சரியாக ஆவதற்கு இன்னும் ஐந்து நிமிஷங்களே இருந்தன. தேவகி எங்கிருக்கின்றாள் என்று நாலா பக்கமும் சுற்றிப் பார்த்தார். கோவிலில் மறைவான ஓரிடத்திலே அவளும் வேறொரு மனிதனும் தனித்து நின்று பேசிக்கொண்டிருப்பதைக் கண்டார். அந்த மனிதன் யாரெனில்,—அவனே முதலில் திருமுகக் கோட்டைக்கு வந்து சதானந்தர் வைத்தியசாலையில் நரேந்திரரைக் கொண்டு காயப்பட்ட தன் கைக்குச் சிகிச்சை செய்துகொண்டு, தான் வந்ததை வெளியிடா திருக்கும்படி ஆயிரம் பொன்னையும் விலையுயர்ந்த மாணிக்கத்தையும் இனாமாகக் கொடுத்துச் சென்ற மனிதன்! சம்பவம் நிகழ ஐந்து நிமிஷங்கள் இருக்கின்றன என்று மாத்திரம் நரேந்திரர் அறிந்துகொண்டாரே யன்றி என்ன விதமான சம்பவம் நேரிடப் போகிறது என்பதை அவர் இன்னமும் அறிந்துகொள்ளவில்லை. அதுவே அவருக்கு ஆச்சரியத்தை

விளைவித்தது. சரவணனும் உதயகுமாரியும் ஒன்ருய்ச் சேர்ந்து அங்கு வந்தது இன்னும் அதிக வியப்பை அவருக்கு உண்டாக்கிற்று. முதல் முதல் திருமுகக்கோட்டையில் சந்தித்த மனிதன் யார் என்றும், அவன் பெயர் என்னவென்றும், இன்னமும் அறிந்து கொள்ள முடியாமற் போனது அவருக்கு இன்னும் அதிக ஆச்சரியத்தை விளைவித்தது.

ஜெயராம், சரவணன், ஜெயராமைக் கோவிலில் சந்தித்து இரகசியம் பேசின வயோதிகர், உதயகுமாரி நால்வரும் கோவிலின் பிரகாரத்திற்குப் பின்புறமிருந்த தோட்டத்துக்குள் நுழைந்தார்கள். அதே சமயத்தில் போலீஸ்காரர்கள் பெருங்கூட்டமாக வந்து அந்நால்வரையும் பிடித்துக் கொண்டார்கள். இந்தக் காட்சியை தேவகியும் நரேந்திரரும் ஒரு பக்கத்தில் மறைவாக நின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள். பெருங்கூட்டமான போலீஸார்கள் எவ்விதம் திடீரென்று வந்தார்கள், எப்படி வந்தார்கள், ஏன் வந்தார்கள் என்று நரேந்திரருக்குச் சிறிதும் புலப்படவில்லை. அவர் பேராச்சரியத்தினுல் ஒன்றுந் தோன்ருதவராய் தேவகியை நோக்கி "பெண்ணே! இதுவென்ன அதிசயக் காட்சி! அந்த நால்வரையும் போலீஸார் ஏன் பிடித்துக்கொண்டார்கள்?" என்று வினவினுர்.

"வைத்தியரே! இச்சமயம் என்னுல் ஒன்றும் பதில் சொல்லமுடியாது! இதுவரையில் பொறுத்திருந்ததுபோல இன்னும் சிறிதுநேரம் நீர் பொறுத்துக்கொண்டிரும்! எல்லா உண்மைகளையும் நீர் தெரிந்துகொள்ளுவீர்" என்று தேவகி பதில் சொன்னுள்.

இவ்விதமாக இவர்களிருவரும் தூரத்தில் மறைவாக நின்று வார்த்தையாடிக் கொண்டிருக்கும்போது நரேந்திரருடைய கண்கள் அக்கும்பலுள் நின்று, போலீஸ் சேவகர்களை அதிகாரம் செய்துகொண்டிருந்த ஒரு மனிதனைச் சந்தித்தன. அவரை வைத்தியர் கூர்ந்து கவனிக்கவே, அவர்தான் முதல் முதல் தம்மிடம்வந்து சிகிச்சை செய்துகொண்டு போன பெயர் தெரியாத மனிதன் என்று அறிந்துகொண்டார். அவருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து போலீஸ் சேவகர்கள் நடப்பதையும், அவர் அவர்களை அதிகாரம் செய்யும் மாதிரியையும் பார்த்தவுடன் அவரே இந்த நால்வரையும் பிடித்து "அரஸ்டு" செய்ய உத்தரவு செய்திருக்கின்றார் என்று நரேந்திரர் அறிந்துகொண்டார். ஜெயராம் மிகவும் முரட்டுத்தனமாய் நடந்துகொண்டபடியால் போலீஸ் சேவகர்கள் அவரிடம் நெருங்க அஞ்சினார்கள். பெயர்தெரியாத அந்த மனிதர் உடனே சென்று ஜெயராமின் கைகளுக்கு விலங்கு பூட்டினார். அப்போது ஜெயராம் தன்னுடைய கட்டாரியால் அவருடைய மண்டையில் குத்தினான். அதனால் அவருக்குச் சிறிது காயம்பட்டு இரத்தம் ஒழுகிய போதிலும் அந்த மனிதர் அதனை ஒரு பொருட்படுத்தவில்லை. அந்த நால்வரையும் தோட்டத்துக்குள்ளிருந்து வெளியே போலீஸார் அழைத்து வந்தார்கள். இதற்குள் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வேடிக்கை பார்ப்பதற்காகக் கூடிவிட்டார்கள். கோவிலிலிருந்து அவர்கள் நால்வரையும் விலங்கு பூட்டியபடியே போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றார்கள். பெருந்திரளான ஜனங்கள் அந்நால்வரையும் பின்தொடர்ந்து ஸ்டேஷனுக்குச் சென்றார்கள். நரேந்

திரர் மெதுவாக அந்தப் பெயர் தெரியாத மனிதனை அணுகி "எதற்காக இவர்களைப் பிடித்துக்கொண்டு போகிறீர்கள்?" என்று கேட்டார்.

"என்னோடுகூட நீங்களும் வாருங்கள்! தேவகியையும் உங்களோடு அழைத்து வாருங்கள்" என்று அந்த மனிதர் பதில் இரகசியமாகச் சொல்லிவிட்டு அப்பாற் சென்றார்.

நரேந்திரர் தேவகியிடம் அந்த மனிதன் சொன்ன சங்கதியைக்கூறி, அவளையும் அழைத்துக்கொண்டு ஸ்டேஷனுக்குச் சென்றார். ஸ்டேஷனை நெருங்கியவுடன் வேடிக்கை பார்க்கும் ஜனங்களை உள்ளே வரக் கூடாதென்று போலீஸ் சேவகர்கள் தடுத்துவிட்டார்கள். அந்நால்வரை மாத்திரம் அழைத்துக்கொண்டு ஸ்டேஷனுக்குள் போலீசார் சென்று, அவர்களைப் பெயர் தெரியாத அந்த மனிதன் முன் நிறுத்தினார்கள். அவருடைய உத்தரவின்மேல் நரேந்திரரும் தேவகியும் மாத்திரம் உள்ளே செல்ல இடம் பெற்றார்கள். அந்த மனிதன் செய்த ஆர்ப்பாட்டத்தையும் அதிகாரத்தையும் பார்த்தால் ஒரு பெரிய கௌரவமான போலீஸ் உத்தியோகஸ்தர் என்றே நினைக்க வேண்டியிருந்தது. நரேந்திரருக்கும், தேவகிக்கும் இரண்டு நாற்காலிகள் போட்டு அவர்களை உட்காரும்படி அந்த மனிதன் உபசரித்துவிட்டு பின் வருமாறு குற்றவாளிகளை விசாரிக்கத் தொடங்கினார்.

"ஐயா! நீர்தானே ஜெயராம் என்பவர்? உம்முடைய சொந்த ஊர் விசாகபட்டினம் அன்றோ? கொஞ்சகாலமாக நீர் சென்னைக்குச் சமீபமாயுள்ள திருவொற்றியூரில் வசித்து வந்தீரன்றோ? உம்முடைய

மனைவியென்று நீர் இதுவரையில் சொல்லி வந்திருக்கும் வைதேகி என்பவள் சைவகுலத்தில் பிறந்து வளர்ந்தவளன்றோ? அவள் விதவையான பின் அவளுக்கு ஆசைவார்த்தை காட்டி அவளுடைய சொந்த ஊராகிய திருநெல்வேலியிலிருந்து அவளை அழைத்துப்போய் திருவொற்றியூரில் வசித்துவந்தது உண்மைதானே? நீர் அடிக்கடி கப்பலில் இரகசியமாக சரக்குகள் ஏற்றிக் கொண்டுபோவது வாஸ்தவந்தானே?'' என்று கேட்டார்.

“ஆம்; எல்லாம் உண்மையே, வாஸ்தவமே! என்னை ஏன் இப்போது பிடித்து வந்திருக்கிறீர்கள்?'' என்று ஜெயராம் கேட்டார்.

“மற்ற விஷயங்களெல்லாம் இருக்கட்டும்; நான் கேட்கும் இந்த ஒரு கேள்விக்குச் சரியான பதில் சொல்லும்! இல்லாவிடின், அதோ நிற்கும் வாலிபனைக் கொண்டு'' என்று அந்த மனிதன் சரவணனைச் சுட்டிக்காட்டி “உம்மை யார் என்று உலகம் அறியும்படி செய்வேன்'' எனக் கடிந்து கேட்டார்.

ஜெயராம் ஒன்றும் பதில் சொல்லாமல், மௌனமாய் நின்றார். அவருடைய முகத்தில் அச்சமும் பயமும், துக்கமும் வெட்கமும் குடிகொண்டன.

“நீர் ஒரு பெரிய சதிக்கூட்டத்தில் சேர்ந்து வேலை செய்துவருகிறீர் அன்றோ'' என்று அந்த மனிதன் அதட்டிக் கேட்டார்.

“ஆம்!'' என்று சொல்லுபவரைப்போல் ஜெயராம் வருத்தத்துடன் தலையை அசைத்தார்.

அதன்பிறகு ஜெயராமை அப்புறம் போய் நிற்கும்படி அந்த மனிதர் உத்தரவு செய்துவிட்டு சரவணனை விசாரிக்கத் தொடங்கினார்.

"உன் பெயர்தானே சரவணன்? நீ ஜெயராமோடு சேர்ந்து வேலைசெய்யக் காரணம் என்ன?" என்று அவர் சரவணனைக் கேட்டார்.

அவன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. தமிழ்ப் பேச்சை அறிந்துகொள்ளச் சக்தியற்றவனைப்போல் நடித்தான். அதை பிறகு அவனை விசாரித்துக் கொள்ளலாமென்று அந்த மனிதர் நினைத்து உதயகுமாரியை விசாரித்தார். அவள் உண்மையை உள்ளபடியே ஒளியாமல் சொன்னாள். வயோதிகரை அந்த மனிதர் ஒன்றுமே விசாரிக்கவில்லை.

"ஐயா! எங்கள் நால்வரையும் தாங்கள் பிடித்து ஸ்டேஷனுக்குக் கொண்டுவரக் காரணமென்ன?" என்று ஜெயராம் திடீரென்று உரத்துக் கூவி அந்த மனிதனைக் கேட்டான்.

"காரணமா கேட்கிறீர்? நான் மைசூர் மகாராஜாவின் பிரதம மந்திரியாரின் உத்தரவையும், மைசூர் மகாராஜாவின் அருந்தவப் புத்திரியான பத்மரேகையின் கட்டளையையும் ஏற்று உங்கள் நால்வரையும் பிடித்தேன். நான் சென்னையில் துப்பறியும் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேலையில் இருந்துவருபவன்!" என்று அந்த மனிதர் கூறினார்.

நாற்காலியில் உட்கார்ந்திருந்த நரேந்திரர் ஆச்சரியத்தினால் எதும் பேசமுடியாமல் விழித்த கண் விழித்தபடியே பிர்மித்திருந்தார். ஏனெனில் இந்

தியா முழுவதிலும், துப்பறியும் சாமார்த்தியம் மிகவும் உடையவர் என்று, நற்பெயர் பெற்றிருக்கும் இன்ஸ்பெக்டர் சோமசுந்தரம் பிள்ளையைப் பற்றி நரேந்திரர் கேள்விப்பட்டிருக்கிறார்; ஆனால் நேரில் பார்த்தவரல்லர். ஒருசமயம் அந்தச் சோமசுந்தரம் பிள்ளையாகவே அவர் இருக்கக் கூடுமோவென்று வைத்தியர் சந்தேகித்தார். அவரே சோமசுந்தரம் பிள்ளை என்று பின்னால் தெரிந்துகொண்டார். அன்றிரவு தம்மிடம் சிகிச்சை செய்துகொண்டு ஆயிரம் பொன் அளித்துச்சென்ற பெயர்தெரியாத மனிதன் பெயர் சோமசுந்தரம் பிள்ளை என்றும், அவர் துப்பறியும் போலீஸ் இன்ஸ்பெக்டர் என்றும், திடீரென்று தெரியவந்தால் நரேந்திரருக்கு ஆச்சரியமுண்டாகாதா? இந்த அதிசயமான சம்பவங்கள் நரேந்திரருடைய மூளையைக் கலக்கத் தலைப்பட்டன. மேலும் மேலும் உண்மையை அறியவேண்டுமென்னும் ஆசை அவருக்கு உண்டாயிற்று.



## 27. அதிசயங்கள் வெளியாயின



அவர்கள் நால்வரையும் போலீஸார் அரஸ்டு செய்து ஸ்டேஷனிலுள்ள சிறைச்சாலையில் அடைத்து விட்ட போதிலும் தேவகிக்கு மட்டும் இன்னும் என்ன தீமை விளையுமோ என்னும் அச்சம் நீங்கவில்லை. தன்னுடைய மானமும் கௌரவமும் போய்விடின் என்ன செய்கிறதென்று அவள் அஞ்சினாள். நரேந்திரருக்கு என்ன கெடுதல் ஏற்படுமோ வென்று

அவள் மனங்கலங்கினாள். நரேந்திரரும் புத்தி கலங்கியவரைப்போல் ஏதும் பேசாது மௌனமாயிருந்தார். கடைசியாக அந்தப் பெயர் தெரியாத மனிதர் தேவகியை நெருங்கி அவள் காதில் ஏதோ ரகசியங் கூறினார். அதன்பிறகு தேவகி கவலை ஒழிந்தவளைப் போல் ஒரு பெருமூச்சுவிட்டு, முகமலர்ச்சியுடன் நரேந்திரரை நோக்கி, அந்தப் பெயர் தெரியாத மனிதரை அவருக்குச் சுட்டிக்காட்டி, "வைத்தியரே! இவர் பெயர் சோமசுந்தரம்பிள்ளை! இவர்தான் முதல் நாள் இரவு திருமுகக்கோட்டைக்குவந்து ஆயிரம் பொன்னையும் விலையுயர்ந்த மாணிக்கத்தையும் உமக்கு வெகுமதியாகக் கொடுத்துவிட்டு தம் கைக்குச் சிகிச்சை செய்துகொண்டு போனவர். இவர் துப்பறியும் வித்தையில் நல்ல தேர்ச்சியுடையவர். இவர் நம்முடைய சிநேகிதரே தவிர விரோதியல்லர் என்று நான் அப்போதே உம்மிடம் கூறினேனன்றோ?" என்று சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"ஆம்; ஆம்! நான் மாட்சிமை தங்கிய மகாராணியின் சிநேகிதனே தவிர அவர்களுடைய விரோதி அல்லன்" என்று சோமசுந்தரம் பிள்ளை சிரித்துக் கொண்டே மிக்க மரியாதையுடனும் தாழ்மையுடனும் கூறிவிட்டு நரேந்திரருக்குத் தேவகி என்பாளைச் சுட்டிக்காட்டி, "வைத்தியரே! இந்த இந்தியா தேசத்திலுள்ள துப்பறியும் போலீஸ் உத்தியோகஸ்தர்களையெல்லாம்விட மிகுந்த சாமர்த்தியமும் தேர்ச்சியும் வாய்ந்த இந்த மாதுசிரோமணி யார் என்பதை உமக்கிப்போது நான் வெளியிட விரும்புகிறேன். இந்தப் பெண்மணியின் உண்மைப் பெயர் இளவரசி பத்மரேகை! இந்த மங்கை நல்லாள் மைசூர் மகா

ராஜாவின் அருந்தவப் புதல்வி! இதுவரையில் தான் யார் என்பதை வெளியிடாமல் தேவகி என்று புனை பெயர் பூண்டு இந்த குணவதி நடித்துவந்தபோதிலும், இப்போது இம்மாது யார் என்பதையும், அவர் தம் உண்மைப் பெயர் யாது என்பதையும் நீர் உண்மையாக அறிந்துகொண்டீரன்றோ?'' என்று உசாவினார்.

''இளவரசி — பத்மரேகையா!'' என்று ஆச்சரியத்தோடு நரேந்திரர் கூவிக் கேட்டுவிட்டு எதும் தோன்றாதவராய் அசைவற்று நின்றார்.

''வைத்தியரே! இன்னும் என்னுடைய பெயரையும், இயல்பையும் மறைத்து வைத்திருப்பது சாத்தியமாகாத விஷயமாயிருக்கிறது. ஆனாலும், நரேந்திரரே, நான் உண்மையில் யார் என்பதை நீர் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் விருப்பம் வாஸ்தவத்தில் எனக்கு இல்லை. நான் யார் என்பதை சோமசுந்தரம் பிள்ளை உமக்குத் தெரிவித்திருக்க வேண்டுவதில்லை,— அவ்விஷயம் தெரிவிக்கப்படவேண்டிய அவ்வளவு முக்கியமான விஷயமும் அன்று'' என்று தேவகி என்னும் புனைபெயரை இதுவரையில் தரித்துவந்த இளவரசி பத்மரேகை சொன்னாள்.

''அரசியே! நான் செய்யத்தகாத விஷயத்தைச் செய்து விடவில்லையே! உண்மையில் தாங்கள் யார் என்பதை நரேந்திரர் அறிந்துகொள்ள வேண்டுவது அவசியம் என்று எனக்குத் தோன்றிய படியால் நான் சொன்னேனே தவிர வேறில்லை'' என்று சோமசுந்தரம் பிள்ளை பணிவுடன் கூறினார்.

''அன்பே! நீ மைசூர் மகாராஜாவின் அருந்தவப் புதல்வி என்பதை நான் அறிந்துகொள்ள வேண்டியது

மியாயந்தானே, — ஏனெனில் நம்மிருவருக்குள்ளும் இதுவரையில் ஏற்பட்டிருந்த பற்றுதலுக்கு முடிவு காலம் இப்போது வந்துவிட்டபோதிலும், பொது வான ஒரு காரியத்தை முன்னிட்டு நாம் ஒற்றுமை யுடன் உழைத்துவந் திருக்கின்றோ மன்றோ?'' என்று கண்களில் நீர் ததும்ப, வாய் குழற, நரேந்திரர் தயங்கித் தயங்கிக் கூறினர்.

அப் பெண்மணியை முழுமனத்துடனும் நரேந்தி ரர் காதலித்து வந்தபடியாலும், ஆனால் அரசகுமாரி யாகிய அவளுடைய இயல்புக்கும், சாதாரண வைத் தியராயிருக்கும் தம்முடைய இயல்புக்கும் உள்ள தார தம்மியம், மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசத் தைப்போல் இருப்பதால், அவளைக்காதலிக்க இனிமுடி யாதென்பதை அவர் இப்போது அறிந்து கொண்ட படியாலும், ஒரு பெண்மணியின்மீது ஒரு முறை ஒரு வன்கொண்டகாதலை மறுபடி நீக்குவதென்றால் அதை விட அவன் மனத்துக்கு வருத்தத்தையும் துன்பத் தையும் விளைக்கக்கூடியது வேறில்லை என்பதை அவர் அநுபவசித்தமாய் உணர்ந்த படியாலும், வைத்தியர் தம் கண்களில் நீர் ததும்ப, வாய் குழற வருத்தத் தோடு பதில் சொன்னரே தவிர வேறில்லை.

ஆம்; வாஸ்தவந்தானே! ஒரு பெண்மணியின் மீது கொண்டகாதலை ஒருவன் மறுபடி நீக்கிவிடுவ தென்றால், அது சாத்தியமான விஷயமா? ஒருவனும், ஒருத்தியும் ஒருவர்மீதொருவர் உள்ளபடியே உண் மைக் காதல் கொண்டிருந்தபோதிலும், அவர்களு டைய விருப்பம் நிறைவேறுவதற்குத் தடையாயும், அவர்கள் இருவரையும் ஒன்று சேர்ப்பதற்கு இடை

யூரும் அவ் விருவர்களுடைய நிலைமையும் பெரும்பாலும் இருப்பதை நாம் பலவிடங்களில் கண்டும் கேட்டும் வருகின்றோம். அப்படிப்பட்டவர்களுக்கு உண்டாகும் துக்கமும் துயரமும் இவ்வளவுதான் என்பதை நம்மால் ஒரு அளவுபடுத்திச் சொல்ல முடியுமோ? அப்பெண்மணியையே கனவிலும் நனவிலும் அவன் நினைத்து நினைத்து மனம் வருந்துகிறான்; அவளை அடையமுடியாமற் போனதை எண்ணி எண்ணி கண்ணீர் சிந்துகின்றான்; அவளும் அப்படியே அவனை நினைத்து நினைத்து மனம் வருந்துகிறாள்! உயிரோடு இருப்பதைவிட, தற்கொலை செய்துகொண்டாவது இறத்தல் நலம் என்று இருவரும் நினைக்கிறார்கள். ஏனெனில், உண்மைக் காதலின் மகிமையும் சக்தியும் அப்படிப்பட்டன.

பத்மரேகையோ ஏதும் பேசாமல் கடைக் கண்ணால் ஒரு வகையான பார்வையுடன் நரேந்திரரை நோக்கிவிட்டுப் பேசாமலிருந்தாள். சோமசுந்தரம் பிள்ளை பேசத்தொடங்கி "வைத்தியரே! நாம் ஒருவரையொருவர் சிறிதாவது முன்பின்னறியாத புதியவர்களல்லர்! நீர் ஒருமுறை எனக்கு ஒருபெரிய உதவி செய்திருக்கிறீர். அதற்காக நான் உமக்கு என்றும் மறவா நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன். அந்த உதவியை எந்தச்சமயத்தில் எனக்குச் செய்தீர் என்பது உமக்கு ஞாபகமிருக்கிறதா?" என்று நரேந்திரரை வினவினார்.

"ஓ! ஞாபகமில்லாமல் என்ன! சதானந்தர் வைத்திய சாலைக்கு அன்றிரவு நீர் வண்டியில்வந்து, உம்முடைய கைக்குச் சிகிச்சை செய்துகொண்டு

சென்றீரன்றோ? அது முதல் அநேக அதிசயமான சம்பவங்கள் நடந்திருக்கின்றன" என்று நரேந்திரர் சொன்னார்.

"ஆம்; எனக்கு எல்லா விஷயங்களும் தெரியும். உம்மிடம் சிகிச்சை செய்துகொண்டு போனபின்பு நான் எங்கோ மறைந்துவிட்டேன் என்று நீர் நினைத்திருந்த போதிலும், நான் மறைவாகவே இருந்து நடந்த விஷயங்கள் எல்லாவற்றையும் கவனித்துவந்தேன். உம்முடைய விரோதிகள் ஒரு முறைக்குமேல் உம்முடைய உயிரை வாங்க சூழ்ச்சி செய்தார்கள்; அவர்கள் சூழ்ச்சிக்குத் தப்பி நீர் திருவருட்செயலால் பிழைத்தீர்; இவ்விஷயங்களை எல்லாம் நான் நன்கறிவேன். விஷயங்களின் உண்மைகளை இதுவரையில் மகாராணியார் உமக்குச் சொல்லியிருக்கலாமென்று நான் நம்புகிறேன்" என்று சோமசுந்திரம்பிள்ளை சொன்னார்.

"இல்லை. நான் இதுவரையில் நரேந்திரரிடம் ஒன்றும் சொல்லவே இல்லை! ஏனெனில், தாங்கள் ஒருவரிடமும் சொல்லக்கூடாதென்று என்னிடம் சத்தியம் வாங்கினீர்கள் அன்றோ சத்தியத்துக்குமீறி நான் நடப்பேனா? தவிர அந்த————" என்று பத்மரேகை கூறி மேற்கொண்டு ஏதும் சொல்லமுடியாமல் தயங்கினாள்.

" ஆமாம்; அந்தக் கொலைபாதகர்கள் வெளியில் உலாவிக்கொண்டிருக்கும்போது விஷயத்தை வெளியிட்டுவிட்டால் என்னஆபத்து விளையுமோ என்னும் அச்சம் தங்களுக்கு ஏற்பட்டிருக்கலாம்; அவ்விதம் ஏற்படுவது சகஜந்தான்!" என்று துப்பறியும் உத்தியோகஸ்தரான சோமசுந்தரம்பிள்ளை சொன்னார்.

“இப்போதுதான் அந்தக் கொலைபாதகர்களைப் பிடித்து அடைத்துவிட்டோமே! இனி என்னிடம் உண்மையைச் சொல்லலாகாதா?” என்று நரேந்திரர் ஆவலுடன் கேட்டார்.

“வைத்தியரே! இனி விஷயங்களை உம்மிடம் மறைக்க வேண்டுமென்னும் அவசியமில்லை. வீட்டுக்கு வாரும்; சாவகாசமாய்ப் பேசலாம்” என்று சோமசுந்தரம்பிள்ளை பதில் கூறினர்.

உடனே பத்மரேகை, நரேந்திரர், ஞானசேகரர் சோம சுந்தரம்பிள்ளை நால்வரும் புறப்பட்டு பத்மரேகை இறங்கியிருந்த சாப்பாட்டு விடுதிக்குச்சென்று அங்கே பேச ஆரம்பித்தார்கள்.

“நரேந்திரரே! நீர் எனக்குச் செய்துகொடுத்திருக்கும் வாக்குறுதியை மறந்துவிடாதீர். அதாவது என்னைப்பற்றி விகல்பமாய் எதும் நினைப்பதில்லை என்று முன்னமேயே வாக்குத்தத்தம் செய்திருக்கிறீர் அன்றோ? அதைமறந்து விடாதீர். ஏனெனில், நான் என்னுடைய சுயேச்சைபடி நடக்கவில்லை என்றும் கட்டாயத்தின்மேல் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு நடக்கிறேன் என்றும் ஏற்கெனவே உமக்குத் தெரிவித்திருக்கிறேன்” என்று பத்மரேகை மிகுந்த பரிவுடன் சொன்னாள்.

“அரசகுமாரியே! இந்த விசித்திரமான விஷயத்தைப்பற்றி நீ என்ன சொன்னபோதிலும் நான் கேட்கத் தயாராயிருக்கிறேன். ஸ்ரீரங்கபட்டினமாகிய இவ்வூர்க் கோவிலில் இன்றுநடந்த சம்பவங்கள் மிகவும் ஆச்சரியத்தை விளைவிக்கின்றன. அவையெல்லாம் ஏதோ சொர்ப்பனத்தில் தோன்றிய நிகழ்ச்சி

களைப்போல் எனக்குத் தோன்றுகின்றன'' என்று வைத்தியர் சொன்னார்.

"ஆம்; வைத்தியரே! இன்று இங்கே நடந்த சம்பவங்களும், அன்று கற்பகச் சோலையில் நடந்த சம்பவங்களும் இடையிடையே நிகழ்ந்த வேறுபல நிகழ்ச்சிகளும் உமக்கு ஆச்சரியத்தையே உண்டுபண்ணும். ஆனாலும், இளவரசி கட்டளையிடும்பட்சத்தில் நான் ஒருவாறு ஸ்தூலமாகவாவது விஷயங்களைச் சொல்லத் தயாராயிருக்கிறேன்'' என்று சோமசுந்தரம் பிள்ளை சொன்னார்.

பத்மரேகை ஏதும் பதில் அளிக்காமல் மௌனமாக நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய கண்கள் பூமியை நோக்கின. அவளுடைய முகம் வெளுத்திருந்தது. பயமும் வெட்கமும் அடைந்தவளைப்போல் அவள் காணப்பட்டாள். விஷயங்களை நரேந்திரரிடம் சொல்லுவதில் தனக்குச் சம்மதம் என்பதை அவள் தன் கண்ஜாடையால் குறிப்பிட்டாள்.

"வைத்தியரே! விஷயங்களைச் சுருக்கிக் கூறினால், பின்வருமாறு கூறலாம்; மைசூர் மகாராஜாவின் ஏகபுத்திரியான பத்மரேகை என்னும் இந்த மாதரசி பெங்களூர் நகரத்திலுள்ள உயர்தரப் பெண்பாடசாலையில் கல்வி பயின்றுகொண்டிருந்தார். அவருடைய அன்னையான அகிலாண்டம்மையும் அந்தச் சமயம் பெங்களூரிலேயே தம் புத்திரியுடன் வசித்து வந்தார். இப்படியாக இவர்களிருவரும் இருந்துவருங்காலத்தில், அந்நகரத்தில் வசித்தவனும், மைசூர் அரசாங்கத்தில் ராணுவத் தலைவனாயிருந்தவனுமான சரவணன் என்னும் பெயருடைய ஒரு வாலிபனுக்கும், அரசபுத்திரி

யாகிய பத்மரேகைக்கும் ஒருவகையான சிநேகபாவம் உண்டாயிற்று. இவர்களுடைய நட்புரிமை நாளுக்கு நாள் முதிர்ந்து காதலாக மாறிற்று. அவன் பத்ம ரேகையைக் காதலித்தான்; இளவரசியும் அவனைக் காதலித்தார். அவனை விவாகஞ் செய்து கொள்ள வேண்டும் என்னும் எண்ணம் பத்மரேகைக்கு உண் டாகவே, ஒருவனுடைய குணத்தையும், செய்கையை யும், இயல்பையும் தீரவிசாரியாமல் விவாகஞ்செய்தல் சரியன்றென நினைத்து இந்த அம்மை சரவணனைப் பற்றிப் பிறரிடம் விசாரித்தும், அவனுடைய நடையு டைபாவனைகளை அந்தரங்கமாய்க் கவனித்தும் வந்தார். அவ்விதம் விசாரித்தும் கவனித்தும் வந்ததில் அநேக சந்தேகங்கள் அவன் விஷயமாய் இளவரசிக்கு உண் டாயின. பெருங் கொள்ளைக்காரர்களும், முதல்தர காலாடிகளுமான ஒரு கூட்டத்தாரோடு அவன் சிநே கங் கொண்டிருந்ததையும், அவர்களோடு சேர்ந்து அவன் அடிக்கடி வெளியே போவதையும், பத்ம ரேகை கவனித்தார். உடனே இளவரசியின் சந்தே கம் பலப்பட்டு அவனுக்கு மிகவும் நெருங்கிய நண்ப ஞன ஜெயராம் என்பவனை அந்தரங்கமாய் அவனைக் குறித்து இளவரசி விசாரித்தார். அப்படி விசாரித்த தில் சரவணன் என்பவன் ராணுவ உத்தியோகஸ்தனு யிருந்த போதிலும், நூதன யந்திரங்களைக் கண்டுபிடிப் பதிலும் செய்வதிலும் அவன் நல்ல சாமர்த்தியம் வாய்ந்தவன் என்றும், ஒரு பெரிய கொள்ளைக்கூட்டத் தில் சம்பந்தப்பட்டவன் என்றும் தெரியவந்தது. இன்னும் நுட்பமாய் அவனைப்பற்றி விசாரித்துப் பார்த்ததில், மனம் நடுங்கத்தக்க ஒரு பயங்கர மான சதியாலோசனை அக்கூட்டத்தாரால் செய்யப்

பட்டுவருகிற தென்றும், அதில் ஜெயராமும், சரவணனும், நந்தன் என்னும் பெயருடைய ஒருவயோதிகனும் கலந்து வேலை செய்கிறார்களென்றும், அம்மூவரும் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள ராஜமன்னார்குடிக்குச் சமீபத்திலிருக்கும் பஞ்ஞாநாடு என்னும் மனித சஞ்சாரமற்ற ஒரு கிராமத்தில், தனியாக ஒரு பங்களாவை வாடகைக்குப் பிடித்து அதில் சுரங்கமேற் படுத்தி ஒரு நூதன யந்திரத்தைக் கண்டு பிடித்து வருகிறார்களென்றும் அந்த நூதன யந்திரத்தின் சகாயத்தைக்கொண்டு மைசூர் சமஸ்தானத்தின் பொக்கிஷ சாலையை வெடிவைத்து உடைத்து அதிலுள்ள பெருந்தொகையான ரூபாய்களைக் கொள்ளையிடப் போகிறார்கள் என்றும் பத்மரேகை அறிந்து கொண்டார். உடனே அந்த மாதுசிரோமணி தான் தெரிந்து கொண்ட உண்மைகளை பயிரங்கப்படுத்திவிட்டால் காரியம் கெட்டுப்போகுமென்று நினைத்து தம்முடைய பிதாவிடம்கூட விஷயத்தைச் சொல்லாமல் பிரதம மந்திரியாகிய ஞானசேகரரிடமும் தன் தாயாராகிய அகிலாண்டம்மையிடமும் அந்தரங்கமாய் விஷயங்களைக் கூறி அந்த சதியாலோசனை நிறைவேறாமற் போகும்படியான மார்க்கத்தைத் தேடவேண்டுமென்றும் அதற்குத் தன்னால் செய்யக்கூடிய உதவியைத் தான் செய்வதாகவும் சொன்னார். ஞானசேகரர், துப்பறிவதில் சிறிது சாமர்த்தியசாலியென்று பெயர்வாங்கியுள்ள என்னைத் தமக்கு உதவியாகவும், தம்முடைய புத்திரியாகிய வசந்தமாலையைப் பத்மரேகைக்கு உதவியாகவும் அழைத்துக்கொண்டு பஞ்ஞாநாடு சென்று, சரவணன் முதலானவர்கள் நூதனயந்திரம் கண்டு பிடித்துவந்த அந்தக் கட்டிடத்தின் முன் பாகத்தை

வாடகைக்குப் பேசி அதில் வசித்துவந்தார். மகா ராணியாகிய அகிலாண்டம்மை சதிகாரர்களின் செய்கையைக் கவனிப்பதற்காகச் சென்னையில் தங்கசாலை வீதியில் ஒருவீடு வாடகைக்குப் பிடித்து அதில் வசித்து வந்தார்'' என்று சோமசுந்தரம்பிள்ளை நரேந்திரருக்குக்கூறி, மீண்டும் சொல்லத் தொடங்கி "நான் அக்கொள்ளைக் கூட்டத்தார் எங்கெங்கே சென்று என்னென்ன செய்கிறார்கள் என்பதை மறைவாக விருந்து கவனித்து வந்தேன். ஞானசேகரர், பத்மரேகை, வசந்தமாலை மூவரும் பஞ்ஞாநாட்டில் "கற்பகச்சோலை'' என்னும் பெயருடைய மேற்படி பங்களாவில் வசித்துவந்தார்கள். நான் அடிக்கடி இம்மூவரையும் மேற்படி பங்களாவுக்குச் சென்று சந்தித்து வெளியில் நடைபெறும் விஷயங்களை அவ்வப்போது அவர்களுக்கு உணர்த்திவந்தேன். இப்படியாக இவர்கள் சிறிதுகாலம் அந்தக் கற்பகச்சோலையில் வசித்து வந்தபோது, ஜெயராம், சரவணன் முதலானவர்கள் நூதனயந்திரம் ஒன்றை அக்கட்டிடத்தின் பின்பாகத்தில் வெட்டப்பட்டுள்ள சுரங்கத்தில் நூதனவகையில் கண்டுபிடித்து வந்தவர்கள், ஞானசேகரரோடு சிநேகமானார்கள். ஞானசேகரர், பத்மரேகை, வசந்தமாலை முதலானவர்கள் மைசூர் ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையும், தங்களுடைய சதியாலோசனையைக் கண்டுபிடிக்கவே அம்மூவரும் அங்குவந்து வசிக்கிறார்கள் என்பதையும் அந்தச் சதிக்கூட்டத்தார் ஆரம்பத்தில் அறியார்களாதலால், அவர்கள் தாராளமாய் ஞானசேகரர் முதலானவர்களோடு பேசிவந்தார்கள். ஞானசேகரரும் தாம் இன்னார் என்பதை அவர்களிடம் காட்டிக்கொள்ளாமலே இருந்து வந்தார்.

இதற்கிடையில் ஞானசேகரர் தாம்சொல்லும் வேலைகளைக் கேட்பதற்கு நம்பிக்கையுள்ள ஒரு வேலைக்காரன் வேண்டுமென்று என்னிடம் தெரிவித்தார். நான் மைசூர் அரண்மனையில் சேவகனாயிருந்த கந்தன் என்னும் பெயருடைய ஒரு கூன்முதுகனை அழைத்து வந்து அவரிடம் விட்டுச்சென்றேன். ஞானசேகரருக்கும் இயந்திர வேலைகள் நன்றாய்த் தெரியுமாதலால் சரவணன் முதலானவர்கள் கண்டு பிடித்துவந்த நூதன யந்திரவேலையில்அவர் தம்மாலான உதவியைச் செய்துவந்தார்; கடைசியாக இயந்திரவேலை முற்றும் முடிந்துவிட்டது. அவர்கள் அந்த நூதனயந்திரத்தை ஞானசேகரர் முதலானவர்களுக்குத் தெரியாமல் அவ்விடத்திலிருந்து எடுத்துக்கொண்டு போய் விட்டார்கள். அந்த யந்திரம் கண்டு பிடிப்பதற்கு உதவியாயிருந்த பெரிய யந்திரம், அதனைச் சேர்ந்த இரும்பு உருளை,பட்டைவார் முதலானவைகளை மாத்திரம் அச்சுரங்கத்துள் இருந்தபடியே வைத்துவிட்டார்கள். தாங்கள் கொள்ளையடிக்கும் பணங்களை வைத்துப் பூட்டுவதற்காக பெரிய இரும்புப் பெட்டிகளையும் அவர்கள் அங்கு கொண்டுவந்து ரகசியமாய் வைத்திருந்தார்கள் போல் தோன்றுகிறது'' என்று கூறி முடித்துவிட்டு ஏதோ ஆழ்ந்து யோசிப்பவரைப் போல் அவர் சிறிதுநேரம் பேசாதிருந்தார்.

"அதற்குமேல் சொல்லுகிறதுதானே!'' என்று நரேந்திரர் அவசரப்பட்டுக் கேட்டார். ஞானசேகரரும், பத்மரேகையும் சோமசுந்திரம்பிள்ளை சொன்ன வரலாற்றைக் கேட்டுக்கொண்டு பேசாமல் இருந்தார்கள்.

"இப்படியாக விஷயங்களின் நிலைமை இருந்தது. ஜெயராம் முதலானவர்கள் ஒருநாள் என்னைக் கற்பகச்சோலையில் சந்தித்துவிட்டார்கள். நான் துப்பறியும் உத்தியோகஸ்தன் என்பதை அவர்கள் ஏற்கெனவே அறிவார்களாதலால், என்னை அவ்விடத்தில் கண்டதும் ஞானசேகரர் முதலானவர்கள்மீது அவர்களுக்குச் சந்தேகமுண்டாகிவிட்டது. ஞானசேகரர், பத்மரேகை, வசந்தமாலை ஆகிய மூவரையும் எவ்விதமாவது கொன்றுவிடவேண்டுமென்று அவர்கள் நினைத்து, சமயம் பார்த்திருந்தார்கள். ஒருநாளிரவு அவர்கள்கற்பகச்சோலையில் வெடிவைத்து அம் மூவரையும் கொன்றுவிடவும், யந்திரங்களை உடைத்துவிடவும் ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்தச் சங்கதியை நான் கேள்விப்பட்டு ஞானசேகரரை எச்சரிப்பதற்காகக் கும்பகோணத்திலிருந்து குதிரை வண்டியில் கற்பகச் சோலைக்கு வந்தேன். அப்போது இரவு பன்னிரண்டு மணி இருக்கும். பங்களாவுக்குள் நுழைந்தேன். அங்கு இரண்டு மூன்றுபேர் வாய்க்குள் பேசிக் கொள்ளும் சத்தம் என் காதில் விழுந்தது. அவர்கள் கண்ணில் அகப்படக்கூடாதென்று ஒரு சுவர் ஓரமாய்ப் பதுங்கியிருந்தேன். நான் போவதற்கு முன்பே அவர்கள் சுரங்கத்தில் வெடிமருந்துபோட்டு நெருப்பு வைத்துவிட்டார்கள். அந்த வெடி வெடித்ததனால் என்னுடைய வலக்கை பிய்த்துக்கொண்டு போய்விட்டது. நான் இனி அங்கிருப்பது சரியன்றென நினைத்து, வண்டியிலேறி திருமுகக்கோட்டைக்கு வந்து, உம்மிடம் சிகிச்சை செய்துகொண்டு, நான் வந்ததை ஒருவரிடமும் நீர் தெரிவிக்காமலிருக்க வேண்டி ஆயிரம் பொன்னையும், பத்மரேகைக்குச்

சொந்தமான விலையுயர்ந்த மாணிக்கத்தையும் உமக்கு வெகுமதியாகக் கொடுத்துவிட்டுச் சென்றேன்'' என்று துப்பறியும் உத்தியோகஸ்தர் சொன்னார்.

“அந்த மாணிக்கத்திலும் ஆயிரம் மடங்கு விலையுயர்ந்த மாணிக்கமல்லவா — பத்மரேகை?'' என்று நரேந்திரர் புன்சிரிப்புடன் வினவினார்.

“தாங்கள் எப்படி வைத்துக்கொண்ட போதிலும் சரியே;— அந்த மாணிக்கத்தைப் போலவே, இந்த மாணிக்கமும் உங்களுக்குச் சொந்தமானது தானே!'' என்று பத்மரேகை சிரித்துக்கொண்டே விடையளித்தாள்.

“அது இருக்கட்டும்; நீர் என்னிடம் வந்து சிகிச்சை செய்துகொண்ட பின்பு, என்னைத் தேன் மெழுகு கொண்டுவரும்படி வெளியே அனுப்பிவிட்டு அறையில் எரிந்துகொண்டிருந்த கணப்பில் ஒரு கடிதத்தை எரிந்தீரே! அதன் விவரமென்ன?'' என்று நரேந்திரர் சோமசுந்தரம் பிள்ளையைக் கேட்டார்.

“அக்கடிதத்தில் எந்த இடத்திலிருந்து பொக்கிஷ சாலையைக் கொள்ளையடிப்பது என்னும் விவரம் எழுதப்பட்டிருந்தது. அதை மேற்படி சதிகாரர்கள் வைத்திருந்தார்கள் போல் தோன்றுகிறது. நான் வண்டியில் ஏறியபோது அக்கடிதம் தரையில் கிடந்தது என் கண்ணுக்குத் தென்பட்டது. நான் அதை உடனே கையில் எடுத்துக்கொண்டேன். நீர் தேன் மெழுகு எடுக்கச் சென்ற சமயத்தில் நான் அதைப் படித்தேன்; விஷயத்தை அறிந்து கொண்டேன். அது ஒருவர் கையிலும் அகப்படாமல் இருப்பதற்காக நான் அதை எரிந்து கொண்டிருந்த கணப்பில்

விட்டெறிந்தேன்" என்று சோமசுந்தரம் பிள்ளை சொன்னார்.

"அக் கடிதத்தின் பாதி என்கையில் அகப்பட்டதால்தான் எனக்கு உண்மை தெரியவந்தது" என்று பத்மரேகை சொன்னாள்.

"நான் சென்றபின்பு, ஞானசேகரர் வெடி விபத்தால் பலமான காயமடைந்திருந்ததைக் கண்டு தேவகி என்னும் புனைபெயர் வைத்திருந்த பத்மரேகை குதிரைமீது ஏறிவந்து உம்மை அழைத்துக்கொண்டு கற்பகச்சோலைக்குச் சென்றார். நீரும் சென்று ஞானசேகருக்கு வைத்தியம் பார்த்தீர். வெடிவைப்பதற்கு முன்பு சாப்பாட்டு அறையில் அவர்கள் ஞானசேகரரின் புத்திரியாகிய வசந்தமாலையைக் கொன்று, அவள் சரீரத்தைக் கண்டங்கண்டமாய் வெட்டி இரும்புப் பெட்டியில் போட்டுப் பூட்டிவிட்டார்கள்" என்று சோமசுந்தரம் பிள்ளை சொன்னார்.



## 28. முடிவும் முடிவுரையும்



"வசந்த மாலையை அவர்கள் கொன்று விட்டார்கள் என்று உமக்கு எப்படித் தெரிந்தது?" என்று நரேந்திரர் வினவினார்.

"அன்றிரவே நான் மறுபடியும் கற்பகச்சோலைக்குச் சென்றேன். அங்கே சாப்பாட்டு அறையிலும், இரும்புப் பெட்டியின் பூட்டுவாயிலிலும் இரத்தக் கறைகள் இருப்பதைக் கண்டேன். பத்மரேகையைக்

கொல்லுவதற்காக அந்தப் பாதகர்கள் மயக்க மருந்து கலந்து வைத்திருந்த சாராயத்தை நீர் அருந்திவிட்டு மயங்கிக் கிடைப்பதைக் கண்டு உம்மை அவர்கள் கண்டால் கொன்று விடுவார்களே என்று நினைத்துக் கற்பாறையின்மீது உம்மைக் கிடத்திவிட்டு நான் போய்விட்டேன். நான் அங்கு செல்லுவதற்கு முன்பே கந்தன் என்னும் வேலைக்காரன் காயப்பட்டுப் படுக்கையிலிருந்த ஞானசேகரரை உம்முடைய வண்டியில் தூக்கிப்போட்டுக்கொண்டு பத்மரேகையையும் கூட அழைத்துக்கொண்டு கும்பகோணம் சென்று அங்கே ரயில் ஏறி உடனே சென்னைக்குப் போய்விட்டான். ஏனெனில், இனி கற்பகச்சோலையிலிருந்தால் ஜெயராம் முதலானவர்களால் தங்கள் உயிருக்கே ஹானி நேரிடுமென்று அவன் நினைத்தான்” என்று சோமசுந்தரம்பிள்ளை சொன்னார்.

“கற்பகச் சோலையி லிருந்த இரும்புப் பெட்டிகளும், இயந்திரங்களும் எங்கே?” என்று நரேந்திரர் கேட்டார்.

“அவைகளை ஜெயராம், தானே ஞானசேகரர் என்று பொய்யாக நடித்து, கும்பகோணத்திலுள்ள குப்புவையர் என்னும் தரகரைக்கொண்டு ஏலம்போடுவித்து அவைகளை அப்புறப்படுத்திவிட்டான். வசந்தமாலையின் இறந்த சரீரம் அடைக்கப்பட்டிருந்த இரும்புப்பெட்டியை ஜெயராம் பற்பல இடங்களில் மாறும்படிசெய்து கடைசியில் காரைக்காலுக்குக் கொண்டுபோய் நடுக்கடலில் அதைத் தள்ளிவிடும்படி ஏற்பாடு செய்துவிட்டான்” என்று சோமசுந்தரம்பிள்ளை சொன்னார்.

"வசந்தமாலை கொலையுண்டதை அவளுடைய பிதாவாகிய ஞானசேகரர் அறியமாட்டாரா?" என்று வைத்தியர் வினவினர்.

"அப்போது அவர் அறிந்து கொள்ளவில்லை. ஏனெனில், ஞானசேகரர் வெடிவிபத்தினல் காய மடைந்து அபாயமான நிலைமையில் இருக்கும்போது, வசந்தமாலை இறந்துபோனதைப்பற்றி அவரிடம் பிரஸ்தாபித்தல் சரியன்றென நான் நினைத்து அவள் அவசரவேலையாய் மதுரைக்குப் போயிருக்கிறுள் என்றும், கொலையுண்டிறந்தது வேறு பெண் என்றும் ஞானசேகரருக்குச் சொன்னேன். பிறகு நெடுநாள் கழித்து நான் அவருக்கு உண்மையை வெளியிட்டேன்" என்று பத்மரேகை சொன்னுள்.

"உதயகுமாரியைப்பற்றி எனக்கு ஏதும் உண்மை புலப்படவில்லையே? அதையும் சிறிது விளக்கக் கூடுமோ?" என்று வைத்தியர் கேட்டார்.

உதயகுமாரி என்பவள் உயர்குலத்தில் உதித்த ஒரு கனவானுடைய மகள். அவளுடைய சொந்த ஊர் ஸ்ரீரங்கம். அவளுடைய பெற்றோர்கள் அவளை இளம்பருவத்தில் விட்டு விட்டு இறந்துபோனர்கள். அதன் பிறகு அவள் தன் சகோதரனின் போஷணையில் இருந்து வந்தாள். ஆனலும், அவளுடைய சகோதரன் மனைவி அவளைக் கொடுமையாக நடத்தி யபடியால் எங்காவது போய்விடுதல் நலமென்று அவள் நினைத்துக் கொண்டிருந்தாள். இப்படியிருக்கும்போது சென்னையில் உள்ள ஒரு பெண் பாடசாலையில் சம்பளமின்றியும், சாப்பாடு போட்டும் இவளைப் படிக்கவைக்கும்படி ஒரு கனவான் ஏற்பாடு

செய்தார். அங்கே படித்துக் கொண்டிருந்த போது பூபேந்திரர் இவளைக்கண்டு காதலித்தார். அவளும் பூபேந்திரரைக் காதலித்தாள். இப்படியிருக்கும் சமயத்தில் நந்தன் என்னும் வயோதிகன் சூதாக இவளை மறுபடியும் ஸ்ரீரங்கத்துக்கு அழைத்துப் போய் அச்சமயம் அங்கு உற்சவத்திற்கு வந்திருந்த ஜெயராமின் மனைவி யென்று சொல்லப் பட்ட வைதேகி அம்மாவுடன் சேர்த்துவிட்டான். உதயகுமாரி ஸ்ரீரங்கத்திலிருக்கவும் மனமில்லாமல், பூபேந்திருக்குச் சொல்லிக் கொள்ளாமல் சென்னையிலிருந்து ஓடி வந்துவிட்டதால் மறுபடி அவரிடம் போகவும் முடியாமல், வைதேகியுடன் திருவொற்றியூரில் வசித்து வந்தாள். தன்னைப் பூபேந்திரர் முதலான எவரும் அடையாளங் கண்டு கொள்ளாதிருக்கும்பொருட்டு தன் நடையுடை பாவனைகளை ஆங்கிலேய ஸ்திரீயைப் போல் மாற்றிக்கொண்டு "மிஸ் ரோஸ்பரி" என்னும் புனைபெயரும் தரித்திருந்தாள். நீர் சென்னையிலிருக்கிறீர் என்று தெரிந்தே ஜெயராம் திருவொற்றியூரில் வசித்துவந்தார். எவ்விதமாவது உம்மைக் கொலைசெய்து விடவேண்டுமென்பது அவருடைய எண்ணம். ஏனெனில், உமக்குக் கற்பகச் சோலையில் நடந்திருக்கும் விஷயங்கள் தெரிந்திருக்கின்றன வென்பதை ஜெயராம் எவ்விதமாகவோ அறிந்துகொண்டார். அவர்கள் உம்மைக் கொலை செய்யும் விஷயமாய்ப்பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டிருந்த "மிஸ்ரோஸ்பரி" என்பவள் உம்மை ஜெயராம் வீட்டுத் தோட்டத்துக்குத் தனியாய் அழைத்துப் போய் எச்சரித்தாள். தவிர, ஜெயராம் பெரிய சதிகாரனென்றும் அவன் நட்பு கூடாதென்றும் அவள் பிறகு அறிந்து அவர்களை

விட்டுநீங்கி சைதாபேட்டையில் வசித்துவந்தாள். நீரும் பூபேந்திரரும் சைதாப்பேட்டை சென்றபோது உதயகுமாரியை உம்முடைய மைத்துனர் கண்டுகொண்டார். உதயகுமாரி ஜெயராம் கட்சியைச் சேர்ந்தவளென்று பயந்தே பத்மரேகை அவளையும் உம்முடைய மைத்துனரையும் எவ்விதமாவது பிரித்துவிட வேண்டுமென்று உம்மை வற்புறுத்தினுள். நந்தன் என்னும் வயோதிகன் ஜெயராமைச் சேர்ந்தவனுனபடியாலும், உதயகுமாரி உமக்குச் சார்பாய் இருக்கிறுள் என்று அவன் கருதியபடியாலும் அவளை எவ்விதமாவது கொலைசெய்து விடவேண்டுமென்று நினைத்து அவன் சைதாப்பேட்டைக்குச் சென்றுன். அவன் சைதாப்பேட்டையில் இருக்கிறுன் என்பதை அறிந்த உதயகுமாரி அவனுக்குப் பயந்து உடனே சைதாப்பேட்டையைவிட்டு ஓடிவிட்டாள். அவளை மறுபடியும் கண்டு பிடிக்கவேண்டுமென்று நினைத்து பூபேந்திரர் அவளைத் தேடிக் கொண்டு போயிருக்கிறுர். ஓடிப்போன உதயகுமாரியை ஜெயராம் மறுபடியும் கண்டுபிடித்துக் கட்டாயப்படுத்தி அவளை இன்று இவ்வூருக்கு அழைத்து வந்திருக்கிறுன். கோவிலில் அவளும் இருந்ததால் அவளையும் சேர்த்து நான் 'அரஸ்டு' செய்துவிட்டேன். ஆனுலும், அவள்மீது குற்றம் சிறிதுமில்லை. இன்று மாலையில் நான் அவளை விடுதலை செய்துவிடுகிறேன். "உதயகுமாரி மைசூரில் இருக்கிறுள்" என்று பத்திரிகைகளில் பிரசுரம் செய்துவிடும். உம்முடைய மைத்துனர் எங்கிருந்தபோதிலும் உடனே புறப்பட்டு மைசூருக்கு வந்துவிடுவார். அவள் தன்கற்பொழுக்கம் கெடாமலிருக்கிறபடியாலும், பூபேந்திரரை அவள் உண்மையாகவே

காதலித்திருக்கிறபடியாலும் அவர்களுக்கு விவாகம் செய்துவிடுவோம்'' என்று சோமசுந்தரம் பிள்ளை கூறினார்.

''சரி; நம்முடைய முயற்சி கைகூடிவிட்டது. பெருங்கொள்ளைக்காரர்களாகிய ஜெயராம், சரவணன் நந்தன் முதலானவர்களை நாம் பிடித்து ஸ்டேஷனில், அடைத்து விட்டோம். மைசூர் சமஸ்தானத்தில் நடக்கவிருந்த ஒரு பெருங் கொள்ளையையும் நடவாமல்செய்து விட்டோம். இவ்விஷயத்தில் நரேந்திரர் எடுத்துக்கொண்ட சிரமம் மிகவும் பாராட்டத்தக்கது. அவருடைய கையில் அந்தப்பொருள் விளங்காத கடிதம் சிக்காமலிருந்தால், இன்று நாம் இவ்வூருக்கு வந்து மேற்படி சதிகாரர்களைப் பிடிக்கப் போகிறதில்லை யன்றோ? இனி நாம் புறப்பட்டு மைசூருக்குப் போகலாம்'' என்று ஞானசேகரர் சொன்னார்.

சோமசுந்தரம் பிள்ளை அன்று மாலையில் உதயகுமாரியை ஸ்டேஷனிலிருந்து விடுவித்தார். மறுநாளன்று காலையிலேயே ஞானசேகரர், சோமசுந்தரம் பிள்ளை, உதயகுமாரி, பத்மரேகை ஆகிய நால்வரும் புறப்பட்டு மைசூர் போய்ச் சேர்ந்தார்கள். நரேந்திரர் மறுநாள், ''உதயகுமாரி மைசூரில் இருக்கின்றாள்'' என்று பிரபல பத்திரிகைகளில் எல்லாம் விளம்பரஞ் செய்தார். அவ்விளம்பரத்தைக் கண்ட பூபேந்திரர் மதுரையிலிருந்து புறப்பட்டு உடனே மைசூர் போய்ச் சேர்ந்தார். சென்னையிலிருந்த அகிலாண்டம்மையும் மைசூருக்குப் போய்விட்டாள்.

இவைநிற்க; குற்றவாளிகளான ஜெயராமுக்கும் சரவணனுக்கும் ஆயுள்பரியந்தம் தீவாந்தர சிட்சை

விதிக்கப்பட்டது. நந்தன் என்பவனுக்கு பதினெண்கு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. ஜெயராமின் மனைவியென்று பொய்யாக நடித்த வைதேகிக்கு மூன்று வருஷம் வெறுந்தண்டனை விதிக்கப்பட்டது. அவள்வசமிருந்த விஜயா, பங்காரு என்னும் இரண்டு சிறுபெண்களையும் அநாதை ஆச்ரமத்தில் அதிகாரிகள் சேர்த்துவிட்டார்கள்.

மைசூர் அரண்மனையில் நரேந்திரர் முதலான எல்லோரும் ஒன்றுகூடினார்கள். நரேந்திரருடைய வீரச்செயல்களைப்பற்றியும், பத்மரேகையின் தீரச் செயல்களைப்பற்றியும் எல்லோரும் வியந்து வியந்து பேசினார்கள். இவ்விதம் இவர்கள் எல்லோரும் சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருக்கையில், "வைத்தியரே! கற்பகச்சோலை அதிசயத்தைப்பற்றிய எல்லா விஷயங்களும் உமக்குப் புலப்பட்டனவா? இனிச் சந்தேகம் ஒன்றுமில்லையே?" என்று துப்பறியும் உத்தியோகஸ்தரான சோமசுந்தரம்பிள்ளை நரேந்திரரைக் கேட்டார்.

"அநேகமாய் எல்லாச் சந்தேகங்களும் ஒழிந்து விட்டன. ஆனல் ஒரே ஒரு சந்தேகம்மட்டும் நீங்கவில்லை. அதாவது ஸ்ரீரங்கபட்டினம் கோவில் பிரகாரத்தின் பின்புறமுள்ள தோட்டத்தின் ஓர் மூலையில் பெரிய எழுத்துக்கள் செதுக்கப்பட்டு ஒரு பித்தளைத் தகடு தரையில் பதிக்கப்பட்டிருந்ததன்றோ? அத்தகட்டில் என்ன எழுப்பட்டிருந்ததென்பதுதான் எனக்கு விளங்கவில்லை" என்று வைத்தியர் சொன்னார்.

"வைத்தியரே! அந்தத் தகட்டில் என்ன எழுதப் பட்டிருக்கிற தென்பதை வலதுகைப் புறமிருந்து

இடதுபக்கமாக வாசித்துப் பார்த்தால் நீரே அறிந்து கொள்ளுவீர். 'இந்த வழி மைசூர் மகாராஜாவின் பொக்கிஷ சாலைக்குச் செல்லுகிறது' என்று எழுதப்பட்டிருக்கிறதே தவிர வேறில்லை. வெடிவைத்துப் பொக்கிஷ சுரங்கத்திலிருக்கும் நூறு லட்சம் வராகன்களையும் எடுத்துக் கொண்டாலும் அவைகளை வெளியில் கொண்டுவந்து சேர்ப்பதற்கு ஒரு ரகசியவழி வேண்டுமென்றோ? அதற்காகவே ஜெயராம் முதலானவர்கள் அந்த வழியை ஏற்படுத்தினார்கள்'' என்று சோமசுந்தரம் பிள்ளை சொன்னார்.

"ஜெயராம் முதலானவர்கள் சாதாரணமாய் அங்கே உலாவிக் கொண்டிருந்த போது அவர்களை ஏன் அரஸ்டுசெய்தீர்?'' என்று நரேந்திரர் கேட்டார்.

"அன்று பகல் பன்னிரண்டு மணிக்கு வெடி வைக்க அவர்கள் தயாராயிருந்தார்கள். உடனே அரஸ்டு செய்யாவிட்டால் காரியம் மிஞ்சிப்போகும் என்று நினைத்து இவ்விதம் செய்தேன்'' என்றார் சோமசுந்தரம் பிள்ளை.

மகாராஜாவின் அரண்மனையில் அன்று எல்லோருக்கும் பெரிய விருந்து நடந்தது. மைசூர் மகாராஜா, விஷயங்களை விவரமாய்க் கேள்விப்பட்டுமிகுந்த சந்தோஷம் அடைந்தார். நரேந்திரரின் விடாமுயற்சியை மிகவும் பாராட்டினார்; பத்மரேகையின் தைரியத்தை வியந்துபேசினார்; ஞானசேகரரின் மதி வன்மையை சிலாகித்தார்; சோமசுந்தரம் பிள்ளையின் நுட்ப புத்தியை மிகவும் கொண்டாடினார். சோமசுந்தரம் பிள்ளைக்கும், ஞானசேகரருக்கும் மகாராஜாதகுந்த வெகுமதி செய்தார். நரேந்திரருக்கும்

அவர் விலையுயர்ந்த இரத்தினங்களையும் ஆடையாபரணங்களையும் சன்மானமாகக் கொடுத்தார். ஆனால், நரேந்திரர் அவைகளைப்பெற்றுக் கொள்ளாமல் தயங்கினாற்போல் நின்றார். வைத்தியரின் மனக்குறிப்பை முகக்குறிப்பால் அறிந்துகொண்ட பத்மரேகை தன் தந்தையை நோக்கிப் புன்சிரிப்புடனும் சிறிது வெட்கத்துடனும் "எனதருமைப் பிதாவே! வைத்தியர் செய்த வேலைகளுக்கு நீங்கள் செய்யும் சம்மானம் போதாதென்று அவர்பேசாதிருக் கின்றாரோ; அல்லது ஏற்கெனவே நான் அவருக்கு வெகுமதி செய்திருக்கும்போது மறுபடியும் தங்களிடம் வேறு வெகுமதிகளைப் பெற்றுக்கொள்ளுவது சரியன்றென நினைத்துத் தயங்குகின்றாரோ; எனக்குத் தெரியவில்லை!" என்று கூறினாள்.

"குழந்தாய்! நரேந்திரருக்கு நீ என்ன சம்மானம் செய்தாய்?" என்று மகாராஜா கேட்டார்.

"தந்தையே! நான் அவருக்குச் செய்திருக்கும் சம்மானம் மிகவும் சொற்பமானது! அதாவது, நான் என்னையே அவருக்குச் சம்மானமாகக் கொடுத்துவிட்டேன்! என்னுடைய உடல், பொருள், ஆவி மூன்றும் அவருக்கே உரியன!" என்று பத்மரேகை பூமியை நோக்கியபடியே கூறினாள்.

"அதனினும் சிறந்த வெகுமதி இராது; இருந்தாலும் எனக்கு வேண்டாம்!" என்று வைத்தியர் சிரித்துக்கொண்டே சொன்னார்.

இச்சமயத்தில் பத்மரேகையின் கண்களும் நரேந்திரரின் கண்களும் ஒன்றையொன்று சந்தித்தன.

தன்புத்திரியின் மனக்குறிப்பையும், வைத்தியரின் மனக்குறிப்பையும் அறிந்துகொண்ட மகாராஜா இருவருக்கும் விவாகம் செய்விக்க ஏற்பாடு செய்தார். பூபேந்திரரும் உதயகுமாரியும் ஒருவரையொருவர் உண்மையாகக் காதலிக்கின்றார்கள் என்பதை நரேந்திரர் மூலமாய்க் கேள்விப்பட்ட மகாராஜா, நரேந்திரரைக் கௌரவிக்கவேண்டி அவ்விருவர்களுக்கும் தாமே விவாகம் செய்துவைக்க இசைந்தார்.

மிகுந்த வைபவத்துடனும் ஆர்ப்பாட்டத்துடனும் மைசூர் அரண்மனையில், மகாராஜாவின் ஏகபுத்திரியாகிய பத்மரேகைக்கும் வைத்தியராகிய நரேந்திரருக்கும்; நரேந்திரரின் மைத்துனராகிய பூபேந்திரருக்கும் அவரால் காதலிக்கப்பட்ட உதயகுமாரிக்கும் விவாக மகோற்சவம் நிறைவேறியது. ஏழுநாள் வரையில் அநேகம் பாட்டுக்கச்சேரிகளும், ஆட்டக்கச்சேரிகளும் நடந்தன. விவாக ஆர்ப்பாட்டங்களெல்லாம் அடங்கிய பின்பு பூபேந்திரர் தம் காதலியை அழைத்துக்கொண்டு சென்னைக்குச் சென்று அங்கே பெரிய உத்தியோகத்தில் இருந்துவருகிறார். அவர் பட்ட கஷ்டங்களெல்லாம் உதயகுமாரியை அடைந்தபின்பு இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயின.

நரேந்திரரோ பத்மரேகையுடன் மைசூர் அரண்மனையிலேயே சுகவாசியாக இருந்து வருகிறார். அவருடைய மனைவி மற்றவர்களுக்கு அரசியாக இருந்த போதிலும், நரேந்திரருக்கு சாதாரண பத்மரேகையாகவே இருந்து வருகின்றாள். நரேந்திரரை அடைந்த பின்பு அவளுக்கு ராஜபோகங்களும் செல்வாக்கும், ஒரு பெரிதாகத் தோன்றவில்லை. தன் கணவனையும் அவைகளையும் ஒப்பிட்டு நோக்கினால்

அவைகள் தெருப்புழுதியிலும் கேவலமானவை என்றே அவளுக்குத் தோன்றின. பத்மரேகையை அடைந்த பின்பு ராஜபோகங்கள் பூரணசந்திரனைச் சூழ்ந்திருக்கும் நட்சத்திரங்களுக்கு ஒப்பானவையே யன்றி வேறில்லை என்பதை வைத்தியரும் உணர்ந்திருந்தார். நரேந்திரரும், பத்மரேகையும் ஒருவரை யொருவர் எவ்வளவு உண்மை யன்புடனும் காதலுடனும் நேசித்தார்கள் என்பதையும், அவர்கள் இருவரும் 'கற்பகச் சோலை அதிசயத்தைக்' கண்டுபிடிப்பதில் எவ்வளவு கஷ்டப்பட்டார்கள் என்பதையும் நம் வாசகர்கள் நன்கறிவார்களாதலால் மேலும் மேலும் அவர்களைப் பற்றிக் கூறி, வாசகர்களுக்கு அருவருப்பு உண்டாக்குவதைவிட அவர்கள் இருவரும் மிகுந்த பிரயாசையுடன் சம்பாதித்த காதல் என்னும் கனியைச் சுகமாயும் சந்தோஷமாயு மிருந்து நுகர்ந்து வருகிறார்கள் என்று மட்டுங்கூறி முடித்தல் சிறந்தது என்று கருதி இம்மட்டோடு இக்கதையை முடிக்கின்றோம். நரேந்திரரும் பத்மரேகையும், உடலும் உயிரும்போலிருந்து இல்லற வாழ்க்கையைச் செவ்வையாக நடத்திவருகிறார்கள் என்னும் சந்தோஷச் செய்தியைக் கேட்டு நம் வாசகர்கள் எல்லோரும் மனமகிழ்வார்களாக!

மைசூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த பொக்கிஷசாலையைக் கொள்ளையடிக்க ஜெயராம் முதலான கொள்ளைக்காரர்கள் எவ்விதம் சதியாலோசனை செய்தார்களென்பதும், அவர்களுடைய சூழ்ச்சியை மகாராஜாவின் புத்திரியாகிய பத்மரேகை எவ்விதம் கண்டுபிடித்தாள் என்பதும், 'கற்பகச்சோலை அதிசயம்,' வெளியாவதில் நரேந்திரர் என்னும் வைத்தியர் எவ்விதம் உதவி புரிந்தார் என்பதும, பூபேந்திரர் உதய

குமாரி இவர்களைப்பற்றிய காதல் விஷயம் இப்படிப் பட்டதென்பதும், இறுதியில் கொள்ளைக்காரர்கள் கண்டுபிடிக்கப்பட்டு தண்டனை அடைந்தமாதிரி இது வென்பதும், பத்மரேகையும் நரேந்திரரும் ஒருவர் மீது ஒருவர் கொண்டிருந்த காதலின் பெருக்கு இத் தகையதென்பதும், மகாராஜாவின் பொக்கிஷ சாலை பாதுகாக்கப்பட்டவிதம் இது வென்பதும், பிறவும் இந்தத் துப்பறியும் கதையில் விளக்கப்பட்டதுடன், "கெடுவான் கேடுநினைப்பான்", "நன்மைவிதைத்தால் நன்மை விளையும் தீமைவிதைத்தால் தீமைவிளையும்" என்னும் நீதிபோதனைகள் இதன்கண் வலியுறுத்தப் படுகின்றன. தவிர,மக்களாய்ப் பிறந்தவர்களுக்கு இவ் வுலகத்தில் கிடைத்தற்கு அருமையான அரும் பெரும் தனம் ஒன்று இருக்கிறதென்றும், அதனை அடைந்து விட்டால் அதனினும் சிறந்த இன்பமும் சுகமும் வே றில்லை என்றும் அதன் மகிமையையும் பெருமையை யும் நரேந்திரரிடமும் பத்மரேகை இடமும் வைத் துக் கண்டுகொள்ள வேண்டுமென்றும் இக் கதை வற்புறுத்தி உரைக்கின்றது. அவ்வளவு மகிமை பொருந்தியதனம் யாதோவெனின், — அதுவே உண் மைக் காதலாம்! சுபம்!



Printed at the 'Caxton Press,' Madras, E. — 1921.

# சிறுவர்களுக்கான கதைகள்

## ராஜபக்தி மாலை

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| ஐந்தாம் ஜார்ஜ் சக்ரவர்த்தி சரித்திரம் .... | 0 | 12 | 0 |
| விக்டோரியா மகாராணி சரித்திரம் ... | 0 | 6 | 0 |
| ஏழாம் எட்வர்டு சரித்திரம் ... .... | 0 | 6 | 0 |

## அங்கில நாடகக் கதைக்கொத்து

| | | | |
|---|---|---|---|
| சண்டமாருதம் (The Tempest) ... ... | 0 | 1 | 0 |
| நடுவேனிற் கனவு (A Midsummer Night's Dream)... | 0 | 1 | 0 |
| மாரிகாலக் கதை (The Winter's Tale) ... | 0 | 1 | 0 |
| வீண் வம்பு (Much Ado about Nothing) ... | 0 | 1 | 6 |
| மனம்போல மாங்கல்யம் (As You Like It) ... | 0 | 2 | 0 |
| விரோணா நகரத்து விடர்கள் (The Two Gentlemen of Verona) ... ... ... ... | 0 | 2 | 0 |
| வேனிஸ் வர்த்தகன் (The Merchant of Venice) ... | 0 | 2 | 0 |
| சிம்பலீன் (Cymbeline) ... ... ... | 0 | 2 | 0 |
| லீர் மகாராஜன் (King Lear) ... ... | 0 | 2 | 0 |
| மாக்பெத் (Macbeth) ... ... ... | 0 | 2 | 0 |
| இனிது முடிவதே இனியது (All's Well That Ends Well) ... ... ... ... | 0 | 1 | 6 |
| சண்டியை சாதுவாக்கியது (The Taming of the Shrew) ... ... ... ... | 0 | 1 | 6 |
| வியாமோக விலாசம் (The Comedy of Errors) ... | 0 | 1 | 6 |
| அபாயத்திற்கு உபாயம் (Measure for Measure)... | 0 | 1 | 6 |

## விவேக சந்திரிகை

இரண்டாம் புத்தகம் ... ... ... (அச்சில்)

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்,
புத்தக வியாபாரிகள், சென்னை.